# திருக்களிற்றுப்படியார் –
# விளக்கக்கட்டுரை



திருவாவடுதுறை ஆதீனம்

திருவாவடுதுறை ஆதீன வெளியீடு எண் — 89

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

சு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.



# ஜய மார்கழி திருவாதிரை மலர்

1955

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையில் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெ
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழில் **திருவா வடுதுறைவாழ்**
**குருநமச்சி வாய தேவன்**
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

திருச்சிற்றம்பலம்.

திருவாவடுதுறை ஆதீன வெளியீடு எண் — 89

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம் ஜோ

திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனர்

அருளிய

# திருக்களிற்றுப்படியாரின் விளக்கக்கட்டுரை

---

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

21-ஆவது குருமகா சந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ

சுப்ரமண்ய தேசிக பரமாசாரிய சுவாமிகள்

திருவருளாணைப்படி

✷

ஷை ஆதீனத்து வித்துவான்

தே. ஆ. ஸ்ரீநிவாஸாசாரியன்

இயற்றியது.

---

ஜய மார்கழி திருவாதிரை நாள்

1954

உரிமைப்பதிவு.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## மெய்கண்ட தேவ நாயனார் துதி

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டஇரு தயகமல முகைக ளெல்லாம்
கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.

— சிவஞான சித்தியார்.


[illegible] அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

இருபத்தொன்றாவது குருமகா சந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள்

**ஈ. அ. இராமசாமிப்புலவர்,**
**கருப்பக்கிளர். (அஞ்சல்)**
**கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.**

உ
சிவமயம்

**போற்றியோ நமச்சி வாய புயங்கனே மயங்கு கின்றேன்**
**போற்றியோ நமச்சி வாய புகலிடம் பிறிதொன் றில்லை**
**போற்றியோ நமச்சி வாய புறமெனைப் போக்கல் கண்டாய்**
**போற்றியோ நமச்சி வாய சயசய போற்றி போற்றி.**

— திருவாசகம்

# முன்னுரை

உலகம் விரும்புவதும் விரும்பவேண்டுவதும் இன்பமே. இந்த இன்பம் நிலையானதாக இருப்பதே சிறப்பு. நிலைத்த இன்பம் என்பது பிறவாமைதான். இப் பிறவா இன்புக்கு வழி காட்டுவனவே மதங்கள். இவற்றுள் முழுமுதலாம் சிவத்தின் பேராலேயே அமைந்துள்ள தொன்மைச் சமயமே **சைவம்.** இதன் நெறிகளை வேதாகமங்கள் விரிக்கும். தமிழில், இந்த வேதாகமங்களை ஒருமைப்படுத்தி உரைப்பனவே சித்தாந்த சைவ சாத்திரங்கள். இவை பதினான்காம். "உந்தி களிறு—" என்னும் பாடல் இவைகளை இன்னவை என நவில்வது. இவற்றை ஞானசாத்திரம் எனவும் மெய்கண்ட சாத்திரங்கள் எனவும் கூறுப. இவற்றுள் முதலான திருவுந்தியார் நூலுக்குரிய விளக்கம் திருவாவடுதுறை ஆதீன வெளியீட்டு எண் 32-ஆக இதன் முன்னரே வந்துள்ளது. அதனை அடுத்த ஞானநூல் **திருக்களிற்றுப்படியார்** ஆகும். இதனை ஆக்கியளித்தவர் **திருக்கடவூர் உய்யவந்த தேவ**

நாயனர் ஆவர். இவர் திருவுந்தியார் நூலாசிரியரான திருவியலூர் உய்யவந்த தேவ நாயனரின் சீடர் ஆவர். தமது ஞானசாரியர்பால் தாமறிந்த சித்தாந்த சைவக் கொள்கைகளையெல்லாம் இப் பெரியார் தமதாசிரிய ரியற்றிய திருவுந்தியார் நூலுக்கு விளக்கம்போல இந் நூலாக ஆக்கி அளித்துள்ளார். இது தெய்வத் தன்மை வாய்ந்த நூலாகும். இவ்வாசிரியர் இந் நூலினை ஓரதிபக்குவர்பொருட்டுத் தாம் பெரும்பற்றப் புலியூரில் எழுந்தருளியிருந்த காலத்தே செய்தளித்தனர். இந்நூற் கருத்தை உலகம் அறிந்தொழுகிப் பேரின்பப் பெருவாழ்வடையவேண்டுமென இவ்வாசிரியர் விரும்பித் திருவம்பலத்தே சென்று அம்மையப்பரை வழிபட்டுத் திருக்களிற்றுப்படியிலே வைத்தனர். அத் திருக்களிற்றுக்கை நிமிர்ந்து இதனை வாங்கிப் பரம கருணாநிதியான நடராசப் பெருமான் திருவடியிலே கொடுத்தது. இது கண்ட அத் திருப்படை வீட்டி லுள்ள எழுநூறு திருமடத்து முதலிகளும், தில்லைவா- ழந்தணர் மூவாயிரவரும், மாகேசுரர் நாற்பத் தெண்ணாயிரவரும் திருக்கோயில் தொண்டுசெய்யும் திருப்பேர் ஏழாயிரத்துத் தொளாயிரவரும் பிறரும் சந்நிதியிலே கூடி நின்று வியப்புற்று இந் நூற்குத் திருக்களிற்றுப்படியார் எனத் திருநாமம் சாத்தினார்கள். திருக்குறள் நூலின் பாக்களில் ஆன்மீகத்துறைக் காவனவற்றை இந்நூல் எடுத்துத் தந்து விளக்கி யுள்ளது. அன்றுதொட்டு இதன் தெய்வத்தன்மை போற்றப்பட்டு வருகின்றது. இதன் ஆசிரியர் கி. பி. 1177-ல் இந்நூலை ஆக்கியளித்தனர் என்ப. இந்த நூலுக்குத் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்துத் **தில்லைச் சிற்றம்பலவர்** என்னும் **சிவப்**

**பிரகாசத் தம்பிரான் சுவாமிகள்** என்கிற சிவஞான அநுபூதியாளர் நல்ல உரையாக்கி உதவியுள்ளார்கள். இவ்வுரை சிறந்த ஞானிகள் போற்றுக்குரியது.

இந்த நூலிலும் உரையிலும் உள்ள செய்திகள் ஞான அநுபவத்தினின்றும் தோன்றியவை. ஆதலால் எம்மனோர் அறிதரும் எளிமையுடைத்தன்று. எனினும், இதனை உலகம் அறிந்துய்யவேண்டுமென்று நமதுபரம கருணையால் திருவாவடுதுறை ஆதீனத்தே தற்போது எழுந்தருளியிருந்து அருட்செங்கோல் நடாத்தியருளுகின்ற **21-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகபரமாசாரிய சுவாமிகள்** திருவுள்ளம்பற்றி அற்பமதியுடைய அடியேனை இதற்கு விளக்கவுரை இயற்றுமாறு ஆணைதந்தருளினார்கள். ஒன்றுக்கும் பற்றாத அடியேன் இவர்கள் பேராசித் துணைகொண்டும், ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகள் திருவருட்டுணைகொண்டும் இயன்றமட்டில் இந்நூலை ஆக்கலுற்றேன். பிழை பொறுத்தருளுமாறு வேண்டுகிறேன்.

இங்ஙனம் அடியேனையும் ஆட்கொண்டருளும் திருவாவடுதுறை ஆதீனபரம்பரை **21-ஆவது குருமகாசந்நிதானமாக** எழுந்தருளியிருந்து சேஷத்திர—சமய—சாத்திர பரிபாலனம் செய்தருள்கின்ற **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள்,** இந்த நூலினை ஸ்ரீ நடராசப்பெருமான் **மார்கழித் திருவாதிரை மலராக** வெளியாகுமாறு திருவருள்பாலித்துள்ளார்கள். இந் நூற்குரிய திருவுருவப்படங்களும் அமைய அருள் புரிந்துள்ளார்கள். இவர்கள் தடப்பெருங்கருணையை அடியேன் நினைந்தநெஞ்சமொடு திருவடிகளிற் பணிந்து

"என்னுடன் பணிசெய்துகிடப்பதே" என விண்ணப்-

மற்றும், அடியேனை ஸ்ரீ-லஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களின் திருவடிக்கு ஆனாக்கியும், இத்தகைய துறையில் பணிபுரிய ஊக்கியும், உதவி யருளியதோடு இந்நூலுக்கும் தக்க அணிந்துரை யொன்று அணிந்து சிறப்பித்துள்ள இவ்வாதீன அடிய வரும் அடியேன் நண்பருமாகிய உயர்திருவாளர் வித்துவான் T. S. தியாகராச தேசிகர் அவர்கட்கும் நன்றி செலுத்தும் கடப்பாடுடையேன். இதனைக் கண்ணுற்றுப் போற்றுமவர்க்கெல்லாம் அடியேன் நன்றி உரித்தாகுக!

மேலும், இந்நூலினை ஆர்வத்தோடும் பெரும் முயற்சியோடும் அழகுற அச்சிட்டளித்த திருப்பா-திரிப்புலியூர் சரஸ்வதி அச்சகத்தார்க்கும் எனது நன்றி பெரிதும் உரியது.

ஞானநூல் விளக்கம் மலிக உலகெலாம்.

21/G, துக்காராம் தெருவு,
கடலூர் N. T.
ஜய மார்கழி ஆதிரைநாள்

இங்ஙனம்,
*நூலாசிரியன்*
தே. ஆ.
திருவாவடுதுறை ஆதீன வித்வான்.

**குறிப்பு:—** இந்நூல் வேண்டுவோர் திருவாவடுதுறை ஆதீன Librarian அவர்கட்கு 14-அணா தபால் தலைகள் அனுப்பிப் பெறுக.



ஸ்ரீ பஞ்சாக்கர தேசிக மூர்த்திகளை
21 - ஆவது மஹாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் வழிபடுதல்

உ

சிவமயம்

# அணிந்துரை

**கற்பன கற்றுக் கலைமன்னு மெய்யோகம்**
**முற்பத ஞான முறைமுறை நண்ணியே**
**சொற்பத மேவித் துரிசற்று மேலான**
**தற்பரம் கண்டுள்ளோர் சைவ சித்தாந்தரே.**

— திருமந்திரம்

மக்கள் மாண்புடைப் பிறப்பினர். இவர்தம் மாண்பு இவரது சமயவொழுக்கால் மிகுக்கும். சமயங்கள் பல உள. இறைவனையே கருத்தாவாகக் கொண்ட பெயருடையது **சைவ சமயம்.** இதனில் இல்லாக் கொள்கை வேறெதினும் இன்று. இவ்வெல்லாக் கொள்கைகளையும் அறிதற்கு உதவுவன ஆகமங்கள். இவற்றின் பிழிவே ஞானசாத்திரங்கள். இச்சாத்திரங்கள் தமிழில் **பதினான்காம்.** ஆகமங்கட்கு ஆண்டவன் உற்பத்தி நிலையமாயிருத்தல்போன்றே இந்த ஞான சாத்திரங்கட்குத் **திருவாவடுதுறைத் திருமடம்** ஊற்றுக்களனும். இங்ஙனம், பதி – பசு – பாச இயல்புகளை எடுத்துரைக்கும் தமிழ்ச் சாத்திர நூல்களில் இரண்டாவதாக நிற்பது **திருக்களிற்றுப்படியார்.** ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனார் சிவஞானபோத ஞாயிறு எழுமுன்னர் சைவவானகத்தே கீழ்த்திசை வெள்ளி போல முளைத்தது இந்நூல். இச்சாத்திரம் திருவுந்தியாரின் வழிநூலாக விளங்குவதாகும். இதன் ஆசிரியர்

சிறந்த அநுபூதிமானாகிய திருக்கடவூர் **ஸ்ரீ உய்யவந்த-தேவநாயனார்** ஆவர். இவர், பொருள்மறந்து, போகம் மறந்து, புலன்மறந்து, கருவிகரணம் கழன்று, காலம் கடந்து, கலைமறந்து, தருமம் மறந்து, தவம்மறந்து தம்மையும்மறந்து, தற்பரத்தோடு உருகி உருகி ஒரு நீர்மையாகி உய்யவந்தாராவர். இந்நிலையில் இவர் பாடியருளியதே இச்சாத்திரம். இதனில் நூறு திரு வெண்பாக்கள் உள. யாவும் அநுபூதிக் களஞ்சியங்கள், இதனை மக்கள் அறிதர விரும்பியே இவ்வாதீனத்துச் சிவப்பிரகாசத்தம்பிரான் சுவாமிகள் மிகச்சிறந்த உரை கண்டருளியுள்ளார்கள். இவ்வுரை கர ஆண்டு புரட்டாசி விஜயதசமி மலராக வெளிவந்துள்ளது. இருப்பினும் இந்த ஞானக்களஞ்சியப் பொருள்களை எம்மனோர் எளிதின் அறிதல் அரிதாகவே இருந்து வந்தது.

இக்குறையைப் போக்கியருளத் திருவுள்ளங் கொண்டருளினார்கள் இத் திருவாவடுதுறை ஆதீனத்தே தற்போது அருட் செங்கோலாட்சி புரிந்துகொண் டெழுந்தருளியிருக்கும் **21-ம் குருமகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள். ஞானசாத்திர அமுதத்தை அனைவரும் அருந்தி வாழவேண்டுமென்பதே இவர்கள் பெருங் கருணைத்திறமாகும். அப்பெருங் கருணைத்திறத்தால் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் அருளாணையின்வண்ணம் 'ஸ்ரீ நமச்சிவாயமூர்த்தி ஆற்றுப்படை' 'சிவஞானபோதமும் - பன்னிருதிருமுறையும்' 'திருவுந்தியார்-தெளிவுக்கட்டுரை' முதலிய அரிய நூல்களை எழுதி வெளியிட்டு அரும்பணியாற்றிவரும் இவ் வாதீனத்து வித்துவான் உயர்திரு **தே. ஆ. ஸ்ரீநிவாஸா சாரியார்** அவர்கள் திருக்களிற்றுப்படியார் என்னும் இவ் அரிய ஞானசாத்திரத்திற்கு விளக்கக்கட்டுரை எழுதி

யிருப்பது மிகவும் பாராட்டற்குரியது. '**திருக்களிற்றுப்படியார் - விளக்கக்கட்டுரை**' என்ற பெயர் அமைவுக்கேற்பத் தெளிவும் விளக்கமும் அமையப்பெற்றுப் பல்வகைச் சிறப்புகளுடன் இந்நூல் மிளிர்கின்றது. இவ் விளக்கக்கட்டுரை ஆசிரியர் இந் நூலை, **உபதேசப் பகுதி, உபாயப்பகுதி, ஆசாரியநிட்டைப்பகுதி** எனப்பகுத்து முதலதில் அறியவேண்டுவன தொகுத்து, உபாயப் பகுதியில் **சிவதன்மம், சிவயோகம் – சிவஞானம்** என்று பகுப்பிருத்தலை வகுத்துக்காட்டி, இறுதிக்கண் யாவற்றிற்கும் ஆதாரமான ஞானாசாரியர் பெருமையினைப் பொதுவும் சிறப்புமாக அமைந்திருத்தலைப் புலப்படுத்தி, இத்தலைப்புகளை ஆங்காங்கு அமைத்து, அவ்வமைப்புக்களின் கீழ் திருக்களிற்றுப்படியாரின் திருவெண்பாக்கள் இசைந்திருத்தலை எம்மனோர் பலரும் எளிதில் உணருமாறு எளிய நல்லமுறையில் ஏற்ற உவமங்களை ஆங்காங்கும் தந்து இனிய தமிழ்நடையில் விளக்கக் கட்டுரையாகச் சமைத்தளித்துள்ளார்கள். மேலும் ஒவ்வொரு செய்யுளின் நுண்பொருளை உணர்த்தும் சூர்ணிகை இந்நூலின் ஒவ்வொரு வெண்பாக்களுக்கும் அமைந்துள்ளது மிகச்சிறப்பாயிருக்கிறது. மற்றும், இந்நூலின் 9, 10 எண்ணுள்ள செய்யுட்களின் விளக்கவுரைகளின் வாயிலாகக் கடவுளுண்மையினை நன்கு தெளிவுறுத்திச் செல்லுந்திறமும், 15-ம் எண்ணுள்ள செய்யுளின் விளக்கவுரையில் காணப்படும் பதசாரங்களும், செய்யுள் 23-ல் உள்ள 'ஆதாரயோக விளக்கமும் படித்தின்புறத்தக்கன. இவ்வாறு சாஸ்திர நூல்களை நுணுகி ஆராயும் இவ் விளக்கக்கட்டுரையாசிரியரின் அறிவாற்றலைப் போற்றிப் புகழாதிருக்க இயலாது. இம்மாதிரி நூல்கள் சமயப் பொக்கிஷமாய் அமைகின்றன.

மானிடர் அறிவின் திறத்தால் சமயமுறி !
ஞான சாதனங்களான சித்தாந்த சைவ ஞானசா, அற

களைக் கற்றுத் தேறி உய்தியடையக் கடப்பாடுடையர். அந்த ஞான நூல்களின் கொள்கைவழி நடப்பதுதான் சமயசாரம். இவ்வழி தாமும் நடந்து பிறரையும் நடத்துவோரே ஞானசாரியர்கள் ஆவார்கள். இந்த ஞானசாரியர்களின் பரம்பரையில் உதித்து இதுபோழ்து திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து 21-வது குருமகா சந்நிதானமாய் எழுந்தருளியுள்ள **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள்** அவர்கள் தங்கள் மரபிற்கியையப் பற்பல அறப்பணிகள் ஆற்றிவருதல் உலகறிந்த செய்தி. அவ்வறப்பணிகளில் ஒன்றே அரிய ஞானசாத்திர நூல்களை வெளியிட்டருளல். இவ்வாறு சைவ நன்மக்கள் உய்தியடையும் வண்ணம் பல சித்தாந்த சைவ ஞான நூல்களையும், தமிழிலக்கிய நூல்களையும் வெளியிட்டுச் சித்தாந்த சைவ சமயத்தையும், தெய்வத் தமிழையும் இரு கண்களாகக்கொண்டு பரிபாலனம் செய்துவரும் திருவாவடுதுறை ஆதீனம் **ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம்** அவர்களின் திருவருட்பெருக்கினைத் தமிழுலகம் பெரிதும் பாராட்டி—தோத்தரிக்கக் கடமைப்பட்டுள்ளது. துறைசை ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் **திருவடி வாழ்க !**

இங்ஙனம்,

கடலூர் N. T.
1-1-1955

*திருவாவடுதுறை ஆதீன அடியவன்,*
வித்துவான் **T. S. தியாகராஜ தேசிகன்.**

கு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை ம



ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனர்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# மெய்கண்ட சாத்திரம்
(பதினான்கு)

உந்தி களிறு உயர்போதம் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம் — வந்தவருட்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்ப முற்று.

திருச்சிற்றம்பலம்

## திருக்கடவூர் - உய்யவந்த தேவர்

### துதி

திருவியலூர் உய்யவந்த தேவன் தாள்கள்
திருமுடியிற் சுமந்தஅருட் கொண்டல், கண்டார்
மருவியலும் திருவுந்திக் கொள்கை நெஞ்சம்
மறவாத வகைபுகட்டும் செஞ்சொல் வள்ளல்
தருவியலும் திருக்கடவூர் தழைப்பான் வந்தோன்,
தகும் உய்ய வந்ததேவன் என்னும் தூயோன்.
கருவகலத் திருக்களிற்றுப் படியார்ந் தந்தோன்
கழலிணையே பணிந்துய்ந்து களிப்பம் யாமே.

தே. ஆ. ஸ்ரீநிவாஸன்

ச. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

நூல்

திருக்கடவூர்

# ஸ்ரீ உய்யவந்த தேவர் அருளிச்செய்த

# திருக்களிற்றுப்படியார்

நூலின்

# விளக்கக்கட்டுரை

## 1 உபதேச இயல் (1-14)

### செய்யுள் — 1

### சிவமே அம்மையப்பர்

அம்மைஅப்ப ரேஉலகுக்(கு) அம்மைஅப்பர் என்றறிக
அம்மைஅப்பர் அப்பரிசே வந்தளிப்பர்—அம்மையப்பர்
எல்லா உலகுக்கும் அப்புறத்தார் இப்புறத்தும்
அல்லார்போல் நிற்பார் அவர்.

**கருத்துக்கள்**

1. சிவனே தாயும் தந்தையும் ஆவார்.
2. அவரே மூவகை உயிர்களுக்கும் அநுக்கிரகிப்பவர்.
3. சிவன் பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டவர்.
4. எப்பொருளுடனும் கூடியிருப்பினும் தோய்விலர்.

**விளக்கம்**

'அன்னையும் பிதாவும் முன்அறி தெய்வம்' என்பது அருந்தமிழ் மூதாட்டியின் அமுத மொழியாகும். நாம் இவ்வுலகில் உடலோடு பிறந்துள்ளோம். இப்படி நாம் பிறத்தற்குக் காரணராக இருப்பவர்களைத் தாய் தந்தையர் என்கிறோம். மேலெழுந்தவாரியாகப் பார்ப்பின் இவர்களே நம்மைப் பிறப்பித்தவர் எனத் தோன்றுகின்றது. ஆனால், இவர்களும் தத்தம் தாய் தந்தையர்களிடமாகப் பிறந்தவர்களே. இவ்வாறே முன்னுக்குத் தள்ளிக்கொண்டே சென்றால் எல்லாத் தாய் தந்தையர்க்கும் முதன்மையான தாயுந் தந்தையு மாகிய ஒரு பொருள் இருந்தே தீரவேண்டும் என்பது புலப்படும். இப்பொருளையே செம்பொருள் என்பர். சிவபெருமான் எனினும் இப்பொருளே குறிக்கும். எல்லாம் ஒடுக்கப்பட்ட காலத்தே இந்த ஒரு பொருளே நிலைத்திருப்பதாகும். இப்பொருளில்லை யாயின் எவ்வுயிரும் எப்பொருளும் இலவாக முடியும். உயிரும் உலகும் தோன்றவேண்டுமாயின் இந்த மூலப் பொருள் இருந்தே தீரவேண்டும்.

நாம் வாழ்தற்கு இடம் இவ்வுலகம். இவ்வுலகம் ஒரு சடப்பொருள் என்பது தேற்றம். இவ்வுலகை இடமாகக் கொண்டு வாழ்க்கை நடத்தும் நாம் உயிர் எனப்படுவோம். உயிர், அறிவுடைப் பொருள் ஆகும். ஆனால், நம் அறிவு வியாபகமான அறிவாக இப்போ தில்லை என்பது தெளிவு. வியாபகமானதாக இருப்பின் நாம் பிறந்துழலவேண்டியிராது. ஆகவே நம் அறிவு கட்டுப்பட்டுள்ளதெனத் தெரியலாம். இக்கட்டுப்பாடு மலத்தால் நிகழ்வது என்பர். ஆதலால், நாம் கட்டுண்

வுடையவராக உள்ளோம். நம் வழி உலகு அசைவ தில்லை என்பதை "ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டு (வேறு) ஒன்ருகும்" என்னும் அநுபவத் தால் தெரிகிறேம். எனவே, அறிவில்லாத உலகை நம் கட்டு நீங்கும் வழியில் அசைப்பித்தற்கும், சுட்டுணர் வுடைய நமக்கு உண்மையை அறிவித்தற்கும் இந்த உலகும் உயிரும் அல்லாத வேறெரு பொருள் இருந்தே ஆகவேண்டியுள்ளது. இதனையே **முதற்கடவுள்** என்கிறேம். இந்த முதற்கடவுளே சிவபெருமான் ஆவன். உலகையும் உயிரையும் நிலைக்கச் செய்து, அறியச்செய்து, அநுபவிக்கச்செய்து அருள்புரிவதாகிய இவற்றைச் செய்தற்கு அவன் நிரதிசய (மாறுத லடையாத உறுதியான புதுமைக்) குணமுடையவஞக விளங்கவேண்டும். ஆதலால், இப்பொருளையே **கருத்தா** எனக் கொள்ளுதல் பொருந்துவதாகும். இதனையே, "அவ்வுருத் தன்னுள் அடக்கிக் கரக்கும்" பொருள் எனப் புறநானூறு புகல்கின்றது. ஒடுக்குங் கால், பக்குவமுருத ஆன்மாக்களை மாயையுட்படுத்தி, அம்மாயையினைச் சத்தியுள்ளடக்கி அச் சத்தியினைத் தன்னுள்ளடக்கி அப்பொருள் சத்தஞக விளங்குதலை இவ்வரியின் பொருள் உணர்த்துகின்றது.

ஆன்மாக்கள் எப்படியும் கட்டு நீங்கி நற்கதி யடைதற்குரியன. ஆனல், தாமாக இங்ஙனம் ஆதற்கான ஆற்றல் இவற்றிற்கில்லை. ஆதலால், மேற் கூறப்பட்ட கட்டற்றதும், சுட்டப்படாததும், நிரதிசய குணமுடையதுமான அம் முதற் பொருளாகிய **சுத்தசிவம்** ஆன்மாக்களிடம் வைத்துள்ள எல்லையற்ற கருணையினல் ஆடல் நிகழ்த்தவேண்டியுள்ளது.

இதனை ஐந்தொழிலாடல் என்பர் நூலோர். இதனால் அசைவற நிற்கும் சிவம், தன்பால் அடங்கி நிற்கும் ஆற்றலினை வெளிப்படுத்தவேண்டி வருகிறது. "பெண்ணுரு ஒரு திறன் ஆகின்று" என்று புறநானூறு கூறுவது இந்த நிலையைக் குறிப்பதாகும். "சிவம் சத்தி நாதம் விந்து......ஏகநாதனே நடிப்பன்" என்ற சிவஞான சித்தியார்ப் பாடலும் இறைவன் புரியும் உதவியை ஓதுவதாகும்.

குணத்துடன் பிரிப்பின்றியுள்ள குணி போலவே அளவிலாற்றலுடன் பிரிப்பில்லாது நிற்கும் சிவ பெருமான் ஆன்மாக்களின் மலநோயைத் தீர்த்தற் பொருட்டுத் திருவுள்ளங் கொள்ளுகிறான். இந்த நிலையினைச் **சிவம்** எனவும் **பரநாதம்** எனவும் கூறுவர் அறிஞர். இதன் பிறகு ஏற்றவாறு தொழிலாற்றக் கருதும் நிலை நிகழ்கின்றது. இதனைச் **சத்தி** என்றும் **பரவிந்து** என்றும் பகருவர். இதுவே குறிப்பு நிகழ்ச்சி ஆகும். இதன்பின் எண்ணியவாறு செய்தற்கு முதற் காரணமான சுத்த மாயையுடன் கூடும் ஒலியும் குறியு மாகிய நிலைகள் முறையே **நாதம்** என்றும் **விந்து** என்றும் இசைக்கப்படும். இவற்றை **அபரநாதம் அபரவிந்து** என்றும் கூறுவதுண்டு. மேலும் இவற்றைச் **சிவம் சத்தி** எனவும் செப்புவர். இவற்றை இலய **சிவம்** என்பர் நூலோர்.

## அம்மையப்பர் — (சதாசிவம்)

மேற் கூறப்பட்ட நிலைகளின் பின்னர் எண்ணிய வாறே இன்னின்னவாறு நிகழ்த்துவதெனக் குறிக்

கொள்ளும் நிலையே **சதாசிவம்** எனப்படும். எனவே ஏவுவதும் நடப்பதுமாகிய இரு நிலைகளும் ஒன்றிய நிலை இதுவாகும். சத்தியோடு (ஆற்றலுடன்) கூடிய சிவம் ஆதலால் சதாசிவம் என இந்த நிலை பெயர் பெறும். இதனால் எண்ணும் முதன்மையும் எண்ணுதற்குரிய ஆற்றல் திறமையும் ஆகிய இரண்டின் நீங்குதலில்லாத இணைப் பொருமை யுடையது இந்த நிலை என்பதை நாம் உணரலாம். நாட்டை ஆளவேண்டுமென்ற கருத்துக்கொண்டு எங்ஙனம் ஆளலாமென்று நினைந்து அதற்கான அதிகாரிகளைத் தேர்ந்திடக் கருதிப் பின்னர் தேர்ந்து, இவரிவர்க்கு இன்னின்ன ஏவல்களை நியமிக்க வேண்டு மென்று கருதும் நிலையை எய்தியுள்ள ஓர் அரசனைப் போல்வது இச் **சதாசிவரூபம்**. இது சத்தியோடு சிவம் கூடிப் பிற பொருளோடு கலந்தும் கலவாமலும் நிற்கும் **அருவுருவத் திருமேனி** நிலையாகும். இதனைச் **சகள நிட்களத்** திருமேனி என்றும் பேசுவர். ஆலோசனா ரூபமான இந்த நிலையினையே **உத்தியுக்தர்** நிலை என்பர். இந்தச் சகள நிட்கள நிலையே உலகுயிர்ப் படைப்புக்கு முதன்மையாகும். இதனையே **மகாலிங்கம்** என்றுரைப்பர். ஆலய மூலத்தானம் இந்த நிலையைக் காட்டுவதாகும். சித்தாந்த சைவர் இந்த நிலையினை நன்குணர்ந்தவராவர். பிற நெறியினர் வணங்குந் தெய்வங்கள், சத்தி வேறு கடவுள் வேறாக இரு வடிவாகவே உள்ளனவாம். சித்தாந்த சைவர் வணங்கும் தலைமையான மகாலிங்கம் சத்தியும் சிவமுமான ஒரு வடிவாகும். பீடம் சத்தி : இலிங்கம் சிவம். அதிகார மூர்த்தங்களுள்ளும் இந்த முறைமையினை உணர்த்துவதாக **அர்த்தநாரீசுர** வடிவம்

உள்ளது. இங்ஙனம் சத்தியும் சிவமும் பிரியாது கலந்து நிற்கும் உண்மை நிலையை அறிபவரே சித்தாந்த சைவர் எனப்படுவர். சூரியனையும் ஒளியையும் அச் சூரியனொளியினாலே அறிகிறோம். அவ்வாறே சிவ சத்தியினாலேயே சத்தியையும் அதனோடு பிரிப்பற நிற்கும் சிவத்தையும் அறியவேண்டும். இதனை, "அருளுண்டாமீசற்கு" என்னும் சிவஞானபோத உதாரணச் செய்யுள் செப்பும். எந்தக் குழந்தையும் அன்னை அறிவிக்க அப்பனை அறிகிறது. ஆதலால், அம்மைக்கு முதன்மை கூறப்படுதல் இயல்பாயிற்று. "அவனருளாலே அவன்தாள் வணங்கி" என்பதும் இக்கருத்துக்கு அரண் செய்வதே. "நீக்கமின்றி நிற்றல்" என்பது இது. இந்த நிலையே உலகுக்கும் உயிராக்கத் துக்கும் முதல் நிலையாதலால் திருமுறைகளும் நீதி நூல்களும் இந்த நிலையினையே விதந்து ஓதலுற்றன. "தோடுடைய செவியன்"; "செல்வியைப் பாகங் கொண்டார்" என்னும் திருவாக்குகளும், "செயிர்தீர் கற்பின் சேயிழை கணவ" எனச் சார்த்திப்பாடு முறை யும், "மறுவில் கற்பில் வாள்நுதல் கணவன்" எனப் பாடும் பண்பும், "ஆதி பகவன் முதற்றே உலகு" என அளவையாற் கூறுவதும் இன்னோரன்ன சொற் றொடர்கள்யாவும் மேற்கூறிய சதாசிவநிலையே தோற்ற முதல் என்பதை உணர்த்துதற் கெழுந்தனவாம். இதனையே, "ஒருவனுக்கும் ஒருத்திக்கும் உருவு ஒன்றால்; அவ்வுருவை இஃதொருத்தன் என்கோ! ஒருத்தி என்கோ! இருவருக்கும் உரித்தாக ஒருவர் என்றோர் இயற்சொல் இலதெனின் யான்மற்று என் சொல்கேனே" என்று கூறிக்காட்டினர் குமரகுருபர அடிகளாரும். இத்தகைப் பொருளின் முதன்மை

யையும், இதற்கோர் இயற்சொல் அமைத்தழைத்தலை யும் தொன்றுதொட்டே கண்டு வைத்தனர் நம்மனோர் என்பது தொல்காப்பிய இலக்கணத்தானும் தெரிதரலாம். "ஒருவர் என்னும் பெயர்நிலைக் கிளவி இருபாற்கும் உரித்தே தெரியும் காலே" என்பது அவ் விலக்கணச் சூத்திரமாகும். சிற்றின்பும் பேரின்பும் புலப்பட உரைக்கும் திருக்கோவையாருள்ளும் "உடையாளொடு ஒன்றும் புலியூரன்" எனவும், "சூலமும்...வளையும் உடைத் தொன்மைக் கோலர்" எனவும் கூறப்பட்டிருத்தல் காணலாம். மற்றும் தலைவி தலைவன் ஒருமை கூறும் பாட்டினுள்ளேயும் "அருஞ்சுரத்து வேறுருவின் ஒருடம்பாய் வருவார்க் கண்டே" என வருதலும் இஃதுணர்த்தும். இதுகாறும் கூறியவாற்றால், மேற்குறித்த சொற் றொடர்கள் யாவும் ஆதிக்குப் பகுத்தளித்த அருமைத் திருமேனியுடைய அம்மையப்பரையே விளக்குதல் தெரியலாம். இதனால் சதாசிவமே நம் வாழ்வுக்கு முதற்பொருள் என்பது தேற்றமாம். சதாசிவம் எனினும் அம்மையப்பர் எனினும் ஒன்றே. இது பற்றியே, "ஆதிபகவன் முதற்றே உலகு" என உலகின்மேல் வைத்துப் பதியுண்மை புலப்படுத்தப் படுவதுபோன்று இந்நூலாரும் முதற்கண் பதியுண்மை யும், முதன்மையும் தெரிதர, "அம்மை அப்பரே உலகுக்கு அம்மை அப்பர் என்று அறிக" எனலானார். அறிக என்ற சொல்லாற்றலால் அறிவுக்குப் பயன் அம்மையப்பரே முதல் என அறிதலாகும் என உணரலாம்.

மற்றும், இந்நூலாசிரியர் இந்த நூலினை எல்லா எழுத்துகட்கும் முதலாக உள்ள அகரத்தை முதற்

கண் அமைத்துத் தொடங்குகின்ற தன்மையும் நாம் கருதவேண்டுவதே. இது "அகரமுதல எழுத் தெல்லாம்" என்னும் குறள் நூலின் துவக்கம் போலவே அமைந்துள்ளதைக் காட்டும். ஆண்டவன் முதன்மையைக் கூறவந்தவர் அகர முதன்மையும் காட்டிப் பாடலையும் நூலையும் தொடங்கியிருத்தல் நாம் உய்த்துணரவேண்டும் பொருளாம். பரநாதத் தன்மையிலிருந்து வைகரி நிலை அடைகின்றது அகரம். இது, சிவபெருமான் சதாசிவ நிலையடைதலை உணர்த்தத் தக்க உவமையாம். இருவகை வடிவும் கொண்டது அகரம். சதாசிவ நிலையும் இத்தகையதே யாம். இங்ஙனம், எல்லா வகையாலும் பொருந்துமாறு இந்நூலாசிரியர் நூலைத் துவக்கியிருக்கும் நயம் படித்தும் ஆய்ந்தும் மகிழ்வெய்தற் குரியதாகும்.

## ஐந்தொழில் ஆடல்

உயிருக்கு வேண்டிய எல்லாச் செயல்களையும் பரிவுடன் புரிபவரே பெற்றோர் எனப்படுவர். "ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே", "தந்தை மகற் காற்றும் நன்றி" முதலிய ஆன்றோர் வாக்குகள் பெற்றோர் உதவிகளை நமக்கு நினைவூட்டுவனவாம். இந்த இலக்கணத்தை வைத்து நம் உலகியற் பெற்றோரை ஆய்ந்தால் அவர்கள் நம் உயிர்க்கு ஆவன எப்போதும் நின்றாற்றும் பெற்றியரல்லரென்பதை அறியலாம். குந்தி தேவியார், தான் பெற்ற மகனை கன்னனை வெள்ளத்திலே விட்டுவிட்டாள். பிரகலாதனை அவனைப் பெற்ற தந்தையே கொல்லக் கருதினான். இவ் வரலாறுகளால் மாயை வயப்பட்ட தாய் தந்தையர் உண்மையான அம்மையப்பர் அல்லர்

என்பது போதரும். உண்மையான அம்மையப்பர் உயிருக்கு ஆக்கலாதி ஐந்தொழிலும் ஆற்றியருளு பவரே ஆவர். இங்ஙனம் உதவுபவர் சிவபரம் பொருளே ஆவர். இவரே உயிர்களின் கரும மலம் பரிபாகமாவதற்காக **ஒடுக்கத்தை** நிகழ்த்துகிறார். பின்னர் உயிருடன் ஒருங்கியைந்துள்ள ஆணவமலம் பரிபாகமாதற் பொருட்டுத் **தோற்றத்தை** நிகழ்த்து கிறார். உயிர்களின் அன்பு அறிவு ஆற்றல்களை விளங்க வொட்டாது தடைசெய்வதே பழமலம் எனப்படும் ஆணவம் ஆகும். நடக்க நடக்க வழியின் தூரம் குறைவதுபோலப் படைப்புத்தோறும் இது தேய் வுறும். உயிர்களின் மாயா மலம் பக்குவப் படுதற் காகவே **நிலைத்தல்** நிகழ்த்தப்படுகின்றது. இதனால், "நில்லாதவற்றை நிலையின என்றுணரும்" திரிபுணர்ச்சி தேய்ந்து செவ்வி நேரும். இங்ஙனம் உதவிபுரியும் தம்மையும், தாம் புரியும் உதவிகளையும் தெரிய வொண்ணா வண்ணம் நம்மை விடயங்களில் அழுந்தச் செய்து **மறைத்தலும்** புரிகின்றார். சிறந்த வள்ளன்மைக் குரிய இலக்கணம் இரகசியமாக உதவி செய்தலே என இலக்கியங்கள் கூறுகின்றன. இதற்குச் சிவத்தை யன்றி வேறு எவர் சான்றாகத் தக்கவர்? எவருமிலர். மேற்கூறிய நாற் செயல்களாலும் உயிர்கள் கன்ம ஒப்பு, மல பரிபாகம் முதலியன விளையுமாறு தமது திருவுள்ளத்தே எப்போதும் **அநுக்கிரகமே** (அருளே) பண்ணுகின்றார். இப்படி உடல்பற்றி மூன்று தொழில்களும், உயிர்பற்றி இரு செயல்களும் புரிந்து ஆன்மாக்களைக் குருமூர்த்தமாகவும் எழுந்தருளி ஈடேற்றுகின்றார். இங்ஙனம் உதவுதற்காகவே சத்தியைப் பிரகாசிப்பித்து அந்தச் சத்தியிடத்தே

தாமும் பொருந்தி அருளுகின்றார். குதிரையைப் பூட்டிய பாகன், தேருள் தான் அமர்ந்து நடத்துவது போலச் சத்தியிடத்தே சிவம் பொருந்தி நடத்துகின்றா ஞவன். இதுபற்றித்தான், "அம்மை அப்பர்" எனப் படலாயிற்று. இதனாலேயே எல்லா உலகங் கட்கும் சத்தியை உடைய சிவனே தாயும் தந்தையும் ஆவான். தமக்குத் தாய் தந்தையரை உடையவர் பிறர் யாவர்க்கும் தாய் தந்தையராக எப்போதுமிருத்தல் இயலாது. சிவன் தமக்குத் தாய் தந்தை யில்லாதவர். "தாயுமிலி தந்தைஇலி தான்தனியன் காணேடி" என்ற திருவாக்கு இப் பொருளுணர்த்தும் தகைய தாகும்.

### மூவகை உயிர்களையும் இரட்சித்தல்

### 1. விஞ்ஞானகலர்க் கருளுதல்

சிவத்தினை அடைதற்கு உரிமையுடைய ஆன்மாக்கள் அளவில. அவை மலச் சார்பால் மூவகைப்படும். ஆணவம் மட்டும் உடைய ஒரு மலத்தர் **விஞ்ஞானகலர்** எனப்படுவர். இவர்கட்கு இருக்கை சுத்தமாயை ஆகும். இவர்கள் விஞ்ஞானத் தால் (விசேட ஞானத்தால்) ஆணவமலத்தை நீக்குதற் குரிய மறைப்பினை உடையவர் ஆவர். இவர்கள் கலாதி தத்துவங்களாலாகிய சரீரத்தை உடையர். ஆயினும், விஞ்ஞானத்தால் அத் தத்துவங்களில் கட்டுப்படாதிருத்தலால் இப்பெயர் பெற்றனர். இவர் களில் பக்குவர் அபக்குவர் உளர். அபக்குவருள் உத்தமர் அணுசதாசிவர் முதலியவர்கள் ஆவர். மத்திமர் அட்டவித்தியேச்சுரர் எனப்படுவர். அதமர் மூன்றரைக்கோடி தேவர்களாவர். இவர்கள் எடுத்

துள்ள ஒரே பிறவியில் முத்தியடைபவர். மணியைக் கடைந்த மாத்திரத்தில் ஒளி வெளிப்படுவதுபோல இவர்கள் முழுமுதல்வன் அறிவுக்கறிவாய் உணர்த்திய மாத்திரத்தே மெய்யுணர்வு பெறுவர். இவர்கட்கு முதல்வன் கொள்வது **அறிவுரு** எனப்படும். உள்ளிருந் துணர்த்துதலைத் தன்மையிடம் என்பர். "உள்ளத்தின் உள்ளிருந் தங்குறுதி காட்டி......ஆரமுதாம் ஆரூரர்" என்ற திருவாக்கு இதனைத் தெரிவிப்பதாகும். பிரளயத்தில் முத்தியடையும் அதிகாரமுடைய அதமர்ப் பிரிவினர்கட்குப் பிரளயம் வரையில் அவர்கள் எடுத்துள்ள ஒரே பிறவிதான் நீடிக்கும் என்பர்.

**பிரளயாகலர்க்கருளுதல்**

விஞ்ஞானகலர்க்கு அடுத்தபடியான பிரிவினர் பிரளயாகலர் எனப்படுவர். இவர்கள் ஆணவம், கன்மம் என்னும் இரண்டு மலங்கள் உடையவராவர். இவர்கள் யாக்கை சுத்தம் அசுத்தம் என்னும் இருவகை மாயா காரியங்களாலும் இயன்றது. அசுத்த மாயா காரியக் கலப்பு இருத்தலால் இவர்கட்கு விருப்பு வெறுப்பு உண்டு. இவர்கட்கு மயக்கம் இல்லை. இவர்கட்குப் பிரளயத்தின் பின்னர் பிறவியில்லை. இவர்கட்குக் கன்மமலம் இருத்தலால் இவர்கட்கு ஒரு பிரளயத்துள் சில பிறவிகளுள. இவர்கட்கு மெய் யுணர்வு பாலில் வெண்ணெய்போல் இருப்பது. ஆதலால் இறைவன் இவருக்குப் பிரளயத்தில் நடத்தந் திருமேனி கொண்டு "நாற்றோளும் முக்கண்ணும் கறைமிடறும் முதலிய உறுப்பிற்றாய் முத்தொழில் நடாத்தி நின்ற தனதியற்கை வடிவே குருவடிவாகக் காட்டி" முன்னின்று செவியறிவுறுத்து உணர்த்துவர். இது முன்னிலையாக உணர்த்துதல் எனப்படும்.

### சகலர்க்கருளுதல்

சகலர் என்பார் ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்று மலங்களை உடையவர் ஆவர். இவர்கள் மூலப் பகுதிச் சார்போடும் கூடிய யாக்கையினராவர். இவர்கள் பிரகிருதிமாயையுள் வைகுபவராவர். இவர்கள் மயக்கத்தினால் பிரளயம் வரையில் பல பிறவிகள் எடுப்பர். பிரளயத்தில் கலாதிகளுடன் ஒடுங்கிக் கிடந்து புனருற்பவம் ஆகும்போது மீளவும் தோன்றுவர். தேவர்முதல் எறும்பு ஈறாக உள்ள எல்லா உயிர்களும் சகலர் எனவே கூறப்படுவர். இவர்களில் ஞானத்தால் பிரகிருதி மாயாபுவனப் பற்றொழிந்தவர் பிரளயாகலரை நிகர்ப்பர். இவர்கள் இறைவன் தடத்தத் திருமேனியைத் தரிசித்தல் கூடும். பிரகிருதி அசுத்தம் என்னும் இரண்டு மாயா புவனப் பற்றும் ஞானத்தால் நீங்கப் பெற்ற சகலர் விஞ்ஞானகலரை நிகர்ப்பர். இவர்கட்கு இறைவன் அறிவுக்குள் அறிவாய் நின்றுணர்த்துவன். இந்த நிலையை அடைந்த சகலருக்கு மேற்பிறவி இல்லை. மும்மலமாயையுங் கொண்ட சகலர்க்கு இறைவன் குருவடிவாகத் தோன்றி அருள் செய்வான். இதனைப் படர்க்கையின் அருள் புரிதல் என்பர். இவர்கள் மெய்யுணர்வு, விறகில் தீப் போல்வதாகும். நாமெல்லாம் சகலரே. மும்மலத்தராகிய நமக்கு நம்போன்ற மக்கள் யாக்கையினை நிலைக்களமாகக் கொண்டு முழுமுதற்பொருள் அருளாசானாகித் திருவருள் புரிவர். பிரளயாகலராதியோர்க்குத் தரிசனமளிப்பது போலத், தெய்வத் திருவுருவுடன் இறைவன் நம்முன் வெளிப்பட்டால் நம்கண் அப்பேரொளியினைக்காண இயலாது.

ஆதலால், நம்கண் காணக்கூடிய அளவுக்குத் தனது பேரொளி நிலையை இறைவன் அடக்கிக் காட்டுதற் பொருட்டே ஆசானாகிக் காட்சியளிக்கின்றான். இரும்பாலாகிய பேழையானாலும் அதனுள்ளே பொன் வைக்கப்படுமாயின் அதனைப் பொற்பேழையென்றே புகலுதல் மரபு. இவ்வாறே மானிடத் திருமேனியை இறைவன் இடமாகக் கொள்ளினும் அத் திருமேனி அருளுருவினதேயாகும். ஆண்டவன் சகலர்க்குத் தன் அருளுருவினை ஏன்ற அளவுக்கு அடக்கியே காட்டுகின்றான். இதனையே "மணங்கமழ் தெய்வத்து இளநலங் காட்டி" என்பர். சிலப்பதிகாரத்திலும், "பூவந்த உண்கண் பொறுக்கென்று மேவித் தன்மூவா இளநலம் காட்டி" என்றே தெய்வ உரு மானிடர்க்கு வெளிப்படுமாறு யாதென அறிவித்தற்குக் கூறப்பட்டுள்ளது. "குருவது ஆய குழகன்" என்பதும் இஃதுணர்த்தும். நம்பால் அறியாமை, இருவினை, ஆசை என்ற முப் பிணிப்பும் உள. இதனால் இறைவன் அறிவு ஆற்றல் அன்பென்னும் முத்திறத்தாலும் அம் முப்பிணிப்பினையும் அறுப்பன். சகலர்க்கருளுவது சாதார தீக்கை எனப்படும். மெய்யன்புடையாரை இடமாகக் கொண்டு ஆண்டவன் நமக்கருளுதலின் இங்ஙனம் கூறப்படுவதாயிற்று. நாமும் இக் குருமூர்த்தத்தினை எண்ணுதலும் தொழுதலும் எடுத்துச் சுமத்தலும் புரிதல் வேண்டும்.

இங்ஙனம், ஆண்டவன் தன்பேரருளாலே நம் மல நோயினை அகற்றுதற்பொருட்டே அருள் புரிகின்றான் என்பதே நாம் அறியத் தக்கது. மலமே நோய் போல்வது. மலத்தோடு கூடிய ஆன்மா நோயாளி நிகர்க்கும். மாயை மருந்துக் கலமாகும். வினையே

மருந்தாம். இறைவனே மருத்துவன். நோய் மருத்துவனுக்குப் பகையாகும். எனவே மலம் நீங்கி ஆன்மா பேரின்புறுதல் இறைவனருளால் இயைவ தென்பது தெளியலாம். இதனால் எவ்வகைப்பட்ட உயிர்க்கும் இறைவன் அருளோடு கூடியவை நெறி மல நீக்கி மாண்புறுவிக்கின்றமை வெளிப்படையாம். இதுபற்றியே, "**அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பார்**" என்றார் இந் நூலாசிரியர். பரிசுகள் மேலே சுருக்கமாகக் கூறப்பட்டமை காண்க. "நயனத் தருள் பரிசம் வாசகமானதமும் அலகில் சாத்திரம் யோகம் ஔத்திராதி அநேகமுள" என்றதன் விவரம் ஈண்டைக்கு அறிதல் ஏற்புடைத்து.

## தத்துவாதீதன் சிவன்

உயிர்களின்மேல் வைத்த கருணைப் பெருக்கினால் அவை நற்கதி பெறுதற் பொருட்டு உடலில் உயிர் கலந்து நிற்றல்போல உயிர்களோடு அன்பினால் **ஒன்றாகியும்**, பொருள் தன்மையில் வேறாயிருக்கும் கண்ணின்கண் ஞாயிற்றின் கதிர் கலந்து கண்ணொளி யைப் பொருளின் கண்ணும் பட்டு விளக்குவதுபோல அறிவின் சிறப்பால் உயிர்களின் **வேறாகியும்**, உயிருக்கு உயிராதல் தன்மையால் கண் ஒளியோடு உயிரின் அறிவு கலந்து பொருளைக் காட்டிக் காணுதல் போல ஆற்றல் துணையால் உயிர்களின் **உடனுமாய்** நின்று இறைவன் உபகரிக்கின்றான். இங்ஙனம் ஒற்றுமைப் பட்டு நிற்பினும் தனக்குரிய சொரூபத் தன்மையில் இவற்றிற்கும் புவனத் தத்துவங்கட்கும் அப்பாற் பட்டும் இருக்கும் பெருமை உடையவன் பரமன். இதனை, "உலகெலாம் **ஆகி வேறாய் உடனுமாய்**......

தலைவனுய் இவற்றின் தன்மை தனக்கெய்தல் இன்றித் தானே நிலவுசீர் அமலனுகி நின்றனன் " என்ற சித்தியார்த் திருப்பாட்டும் உணர்த்தும். இறைவனை அறியுமிடத்துப் பிருத்வி முதல் நாத மீருன தத்துவங் கட்கு அப்பாற்பட்டு நின்றே அறியவேண்டும். ஆகை யால் அறியப்பட்ட சத்தியை உடைய சிவனும் இந்தச் சர்வலோகங்கட்கும் அப்பாற்பட்டே நிற்பன். சத்தி ரூபமாயும் பதி ரூபமாயும் இவ்விரண்டு தன்மைகளின் வேருகியும் இத் தன்மைகளோடு பிரிப்பின்றியும் எங்கும் தானே சுயம்பிரகாசமாக நிற்பன். இதுவே இறைவன் இயல்பாம். முதல்வன் ஒன்றினும் தோய் வின்றித் தானே சுயம்பிரகாசமாய் நிற்கும் தன் னுண்மையில் **சிவம்** எனப்படுவன். உயிர்களோடு ஒன்ருய் வேருய் உடனுய் நிற்கும் தன்மையில் **சத்தி** எனப்படுவன். இப் பிரிப்பில்லாத் தாதான்மியமே அம்மையப்பர் எனப்படு நிலை. இதனைத் தெரிவித்தற் பொருட்டே இந் நூலாசிரியர், "**அம்மையப்பர் எல்லா உலகுக்கும் அப்புறத்தார்**" என்ருர்.

## தோய்வின்மை

மேருமலை பொன் மயமானது எனக் கூறப்படும். அப்படியொரு மலை நமக்கு அகப்படாமல் இருப்பின் அதனுல் பயனில்லை. அது நமக்குக் கிடைப்பதாயிருப் பின் நமக்குப் பயன்படும். போலிப் பொன்ருக இருப்பினும் பயனில்லை. உண்மைத் தங்கமாயின் உபயோகப்படும். உண்மைப் பொன்ருகவும் இருந்து நமக்கெட்டுவதாகவும் இருந்து நமக்குப் பயனளிப்பதும் உடையதாக மேரு மலை இருப்பின் அதுவே பெருமையுடைமையாகும்.

சிவம் எட்டாப் பொருள். என்றாலும் உயிருடன் ஒன்றியிருந்து காணுமுதவி காட்டும் உதவிகளாற்றிப் பயன்பட்டு நிற்பது. உயிருக்கு விட்டு நீங்கமுடியாத ஆதாரமாக உள்ளது. உயிர், மலத்தைவிட்டு நீங்க வேண்டும். இறைவனை விட்டு நீங்க இயலாது. இங்ஙனம் பெத்தம் முத்தி என்னும் இருவகை நிலையினும் அவனுதவியின்றி உயிர்க்கு நன்மை விளைதல் இல்லை. சூரிய கிரணம் சூரியகாந்தக்கல், தாமரை ஆகிய பொருள்களிடம் பல்வேறு வகையாகத் தொழிற்படுகின்றது. என்றாலும், சூரியன் அவற்றில் தோய்ந்து விகாரமடைதல் இல்லை. இங்ஙனமே, உயிர்களின் பொருட்டுத் தம் சொரூபம் தோன்றுதபடி அறுவகைப் பட்ட அத்துவாக்களைத் திருமேனியாகக் கொண்டு உலகினைச் சங்கற்பித்து நடத்தினாலும் தான் விகாரமடைதல் சிவத்திற்கு இல்லை. "தோய்விலன் உணர்வின் மூர்த்தி" என்பர் இறைவனை. கரணத்தாற் செய்யவேண்டுகை சிவத்திற் கின்மையின் விகாரமுறுதலும் இன்றாம். நீக்க மின்றியும் அசைவின்றியும் நிற்றலால் தோய்வு தேய்வுகள் இலவாம். இதுபற்றியே, "**இப்புறத்தும் அல்லார்போல் நிற்பர் அவர்**" என்றார் ஆசிரியர். பரிபூரணத் தன்மை இதுவேயாம்.

இந்தச் செய்யுளால், இந் நூலாசிரியர் நமக்குக் கடவுள் ஒருவர் உண்டு; அவரே எல்லா உலகுக்கும் உயிர்கட்கும் இதம்புரியும் அம்மையப்பர் ஆவார்; இவ்வம்மையப்பரே நம் ஆதியாகக் கருதத் தக்கவர்; அம்மை என்பது சத்தியே; உயிர் வருக்கங்கள் மூவகைப்படும்; அவைகட்கு மலம் உண்டு; அவற்றை மூன்று வகை ஆசாரிய மூர்த்தியராகி

அம்மையப்பரே ஏற்றவாறு ஆட்கொள்கிருர் ; கருத்தா சுட்டியறியத் தக்கவரல்லர் ; பக்குவ நிலையில் பிரகாசிப்பவர் ; எல்லையற்ற கருணை உடையவர் ; எப்பொருளோடும் கலந்து நடத்தினும் ஒன்றிலும் தோய்வில்லாதவர் ஆவர் என்ற உண்மைகளையும் நுண்மைகளையும் தெரிவிக்கின்ருர். திருவுந்தியாரில் அவ்வாசிரியர் **அப்பொருள்** என்று கூறிப்போவதை இவ்வாசிரியர் அவருடைய மாணவராதலின் அவ் வாசிரியர் கூறிச் செல்லும் முறைமையிலேயே **அவர்** என்று கூறிச் சகளமாய் வருதலாதிய செய்திகளைத் தமது இச் செய்யுளில் விளக்கிக் கூறலுற்ருர் என்னலாம்.

## செய்யுள் — 2

### சிவத்தைத் தலைப்படுதல்

**தம்மில் தலைப்பட்டார் பாலே தலைப்பட்டுத்**
**தம்மில் தலைப்படுதல் தாமுணரின் — தம்மில்**
**நிலைப்படுவர் ஓரிருவர் நீக்கிநிலை யாக்கித்**
**தலைப்படுவர் தாம்அத் தலை.**

**கருத்துக்கள்**

1. ஆசாரியனை வழிபடல்
2. தம்மை அறிதல்
3. சத்திசிவம் முதலெனத் தெரிதல்
4. சுட்டொழிதல்
5. சொரூபத்தில் பொருந்துதல்.

**விளக்கம்**

உயிர்கள் மலப்பிணிப்புடையன என்பதும், அந்த நோயினை வயித்திய நாதனாகிய முழுமுதல்வனே நீக்கியருளவல்லான் என்பதும், அங்ஙனம் நீக்கும்போது படிப்படியாகப் பற்பலர் மூலமாக வெளிப்படாது உள்நின்றுணர்த்தியருளி, இருவினையொப்பாதிய நேரிட்ட பக்குவத்திலே தம்முள் மறைந்து நின்றுணர்த்திவந்த முதலாகிய அரனே குருவடிவாகக் காட்சிநல்கி உண்மைச் சாதனவழியுணர்த்தி ஆட்கொள்கின்றான் என்பதும் இதன்முன் தெரிவிக்கப்பட்டன. இந்த உண்மையினை உயிர் அறிந்தாலன்றி வேறு எவ்வகையாலும் உயிர்கட்கு உய்யுமாறில்லை. ஆகவே, இறைவனடி அடைதற்கான உரிமை தமக்குண்டென்பதையும், அவ்வுரிமைக்குரிய வழிகளான சாதனங்களையும் உயிர்கள் தெரிந்தே தீரவேண்டும் என்பது தெளிவாம். இதனால் நாம் நாளும் நாளும் உடலுக்கே கரைந்து நைந்து உழைத்துக் காலம்போக்காமல், உயிருக்கு உய்தி நாடி உழைக்கவேண்டும் என்பது தேறப்படும். "உழப்பின் வாரா உறுதிகள்" இல்லை என்பது பெரியோர் உறுதிப்பாடு.

**உயிரின் பொறுப்புரிமை.**

முதல்வன் என்றும் ஒருபடித்தாய் நிலைப்பவன். மாயையின் ஆக்கப்பாடுகள் நிலையாதன. இவ்விரண்டினையும் அறியும் இயல்புடையது உயிர், மாயை நீக்கி இறையைச் சார்ந்துணர்ந்து அடிமையாதலே உயிரின் சிறப்பியல்பாகும். உயிருக்கே சாதனமேற்கொண்டு பயனடையும் உரிமை உள்ளது, பொற்றொடிமகளிர்க்

குப் பிறப்பகம் சிறப்பகம் என இரண்டிடச் சார்புகள் உள. பிறந்த இல்லினை நீங்கி மணந்தோன் இல்லினை எய்தி இன்புற்று வாழ்தல் அம்மகளிர் உரிமையாம். மணந்தோனே மகளிர்க்கு உற்ருனுகிருன். எனவே, பிறப்பகம் சிறப்பகம் இரண்டில்லினையும் உற்ருனையும் அறியும் இயல்பு மகளிர்க்கிருத்தல் வெளிப்படை. இவ்வாறே உலகினை அறிதலும், இறைவனை அறிதலும் உயிருக்குரிய இயல்பாம்.

முதல்வன் அறிந்தாங்கறியும் ஒருங்கறிவுடையன். உயிர் சுட்டியுணரும் இயல்பினது. நூலாசிரியன் நூல் முழுதும் அறியும் ஒருங்குணர்வுடையவன். மாணுக்கன் அந்நூலின் தனக்குரிய பாடத்தைச் சுட்டியுணர்பவனுவன். வீட்டைக்கட்டிக் குடிவைத்தவன் வீட்டினுலாகிய மொத்தப்பயன் (உரிமை) கொள்பவன். வீட்டினுள் குடியிருந்து துய்ப்பவனல்லன். குடியிருப்போன் வீட்டின் ஒவ்வொரு பகுதியையும் அனுபவிப்பவன். குடியிருப்பவன் வீட்டினையும் அறிவான்; வீட்டுக்குடையானையும் அறிவன். இவ்வாறே சதசத்தாயுள்ள ஆன்மா இறைவனையும், மாயையினையும் சார்ந்து பயன் துய்க்கும் இயல்பினதாகும். எனவே பதி, பாசம் என்னும் இரண்டினையும் ஆன்மா அறியும்; இவற்றை அறியுமுகத்தால் தன்னையறியும். பதியும் பசுவும் சித்துப்பொருள்கள். பதியின்முன் பாசம் முனைத்துநில்லாது. கதிரோன்முன் இருள் முனைத்து நில்லாமை அறிந்த செய்தியாம். பாசம் பசுவின்முன் முனைத்துநிற்பது. பதி அதிசூக்கும சித்தாதலால் பாசம் அதன்முன் நிற்பதில்லை. பசுவோ தூலசித்து. ஆதலால், உயிர்முன்பாசம் முனைத்து நிற்கலாகிறது. இத்தன்மை அநாதியே உள்ளது. பாச தன்பயன் துய்க்கும்

வேட்கை உடைமையால் பாசம் முனைத்துத் தனுகரண புவனபோகங்களாகிப் பயன்படுகின்றது. இறைவ னிடம் வேட்கை இல்லை. ஆதலின் பாசமும் இல்லை யாம். பால்தரும் பசுவானது நெய்யினை நுகராது. தோன்னையும் நெய்யினை உணராது. எனவே நெய்யினை மக்களே நுகர்வர் என்பது தெளிவு. உயிர், முதல் வனைச்சாரின் நிலையுள்ளதாகிறது. மாயையைச்சாரின் நிலையில்லாதாகிறது. மற்றும். பாசம் பசுவுக்கே உள்ளதென்பதை வேறு ஒரு உவமையாலும் கூறுவர். ஆகாயம் என்கிற கடலும் அதில்வியாப்பியமான நீரும், அதனுள் உப்பும் அநாதியேயாயினும் உப்பா னது இடம் என்கிற வெளியினை (ஆகாயத்தை) ப் பற்றுமல் நீரையே பற்றிநிற்கும். ஆகாயம் சூக்குமம். நீர் தூலம். கடல் சிவத்தையும். நீர் ஆன்மாவினையும். உப்பு மாயையினையும் ஒக்கும். ஞாயிற்றைக் கண் டால் அடங்கும் இருள் அந்த ஞாயிற்றை அடராது. அதுபோலவே சிவத்தைக் கண்டால் அடங்கும் மாயை, சிவத்தைப் பற்றுது. இவற்ருல் பசு எனப்படும் ஆன்மா, சுட்டுணர்வுடையது; சிற்றறிவுடையது; அறிவிக்க அறிவது; மயங்கி அறிவது; மறந்து பின் அறிவது முதலிய அறிவுக் குறைபாடுகளைக் கொண் டியல்வது என நாமுணர்தல் வேண்டும் நிலைத்ததும் நிலையாததுமான மாறுபாடு கொண்ட இரண்டு பொருள்களின்பாலும் ஆன்மபோதம் செல்லும். உயிர்கட்கு நீங்காத இருக்கை இறையடியே. ஆனுல் இதனை உணராது மாயையை இருக்கையென எண்ணி மயங்குவது ஆன்மா. உயிர் ஆசாரியன் அநுக்கிரகத் தால் தன்னைப் பற்றிய உண்மையை அறிதல் ஆன்ம ரூபம் எனப்படும்.

## ஆசாரியரிடத்தே கூடி வழிபடுதல்

ஆன்மா பல பிறவிகளில் செய்துவந்த சிவ புண்ணியப் பயன் இப் பிறவியைப் பக்குவ வழியில் படுத்தலுறும். இதுகாறும் உள்ளே இருந்து உணர்த்தி வந்த முழுமுதற் பொருள், ஆசாரியராம் அருள் வடிவமுங் கொண்டு எழுந்தருளித் தீக்கை செய்து மெய்யுணர்வினை அறிவுறுத்தும். அப்போது ஐம்பொறி வழியே உழன்ற அல்லல் தெரியவரும். தன்னுடைய பெருந்தகை இன்னதெனத் தெரியவரும். பிறகு இறைவனோடு கூடும் நெறி நின்று முதல்வன் திருவடிப் பேறு அடையும் ஆன்மா. சரியை, கிரியை, யோக மார்க்கங்களைப் பரம்பொருள் ஆன்மாவுக்கு உள் நின்று உணர்த்தி வரும். ஞான மார்க்கத்தை அநுக் கிரகிக்கும்போது குருவடிவங் கொள்ளும். இதனைத் "தம் முதல் குருவும் ஆய்" என்பதிலுள்ள உம்மை தெரிவிப்பதாகும். இதனைச் சிறப்பும்மை எனவும் கொள்ளுதல் கூடும். உள்நின்றுணர்த்துகையில், சரியை, கிரியை யோகங்களை உணர்த்தும் குருவினால் அறிவிக்கப்படுவதை அறிந்துகொள்ளும்படி. உள் நின்று உபகரிக்கின்றான் ஆவன். அரன் திருவடி யோடு உயிர் என்றும் பிரிப்பில்லாமல்தான் உள்ளது. இது பிரிக்கமுடியாத சம்பந்த விசேடம் எனப்படும். இதனை அன்னியமின்மை எனவும் அத்துவிதம் எனவும் கூறுவர். ஆனால் இப் புணர்ப்புண்மையை உயிர் ஐம்பொறியின் கூட்டத்தால் மறக்கும். பிறகு ஆசாரியன் உபதேயத்தால் திருவடியோடு பிரிப்பின்றி நிற்றலை அறியும். இதுவே திருவடி அடைதல் எனப் படும். திருவடி என்பது சிற்சத்தியே ஆம். மன்னவ குமாரன் வேடரிடம் வளர்ந்து பின்னர்த் தெளிந்து

ஆட்சி பெறுதல் இங்கு உவமையாகக் கூறப்படுவ துண்டு. மன்னவ குமாரன், தெளிந்த பின்னர் மன்னவனுக்குரிய செல்வங்களை அனுபவிக்கும் சுதந்திரம் அடைகிறான். மன்னவ சாதியும் உடையவ னுகிறான். ஆனால், மன்னவன் ஏவல்வழி நின்றே அநுபவிப்பான். இவ்வாறே உயிரும் முதல்வன் அருள்வழி நின்றே சிவானந்தத்தை அநுபவிக்கும். கோயிலுக்குள் வேறு வேறு காட்சி வயப்பட்டிருக்கும் மாந்தரை இறைக்காட்சி காணும்பொருட்டு உணர்த்து வது அப்போது அடிக்கப்படும் மணியோசை. மணி நாதம் கேட்டவர்கள் வேற்றுக் காட்சியை விட்டு இறை தரிசனத்தே ஈடுபட்டு மெய்ம் மறப்பர். இம் மணியோசைபோல் பயன்படுபவராவர் ஞானகுரு என நாமறியலாம்.

தீச்சார்பில் உயிர் தலைப்படாது ஞானகுரு சொல் வழி நிற்றல் வேண்டும். அங்ஙனமின்றித் தீ நெறிப் படர்வது மெய்யுணர்வை மறக்கச் செய்து மறைப் பையும் மிகுக்கும். வழிநடப்போர் துணைவழிப் படுவராயின் வழியை வருத்தமின்றி நடந்து கடந்து ஊரடைவர். அவ்வாறன்றிக் கள்வர்க் கெதிர்ப்படுவ ரேல் பொருளும் உயிரும் இழப்பர். இதனால் குறிக் கோள் கைகூடாது குலைவுறும்.

ஞானசிரியன் முழுமுதல்வனே ஆவன். சாதாரணக் கல்வி கற்பிக்கும் ஆசிரியர்களிடத்தும் இம் முதல்வனே கலப்பாம் தன்மையால் ஒன்றி நின்று அறிவுறுத்துகின்றானவன். ஆனால் ஞானசாரியனில் பொருள் தன்மையால் வேறாய்ச் சிறந்து விளங்குவான். தயிரின்கண் நெய் மேலோங்கி நிற்றல் போல்வது இங்

ணிலே. உயிரின் செவ்வியை முழு முதல்வனேயன்றி வேறெவரும் உணர்தல் இயலாது. அகத்தின்கண் பொருந்திய நோயினை அகத்திலுள்ளாரன்றி ஏனையோர் அறிதல் இயலாது. ஒருவன் படித்துள்ள படிப்பினை அவனேதான் அறிவான். அவனுடன் ஒரு வகையாலும் தொடர்பில்லார் அறிய இயலாது. அரும் பொருள்களை ஓரிடம் சேமம் செய்துவைத்தவனுக்கே அவ்வைப்பு இன்னதெனத் தெரியவரும். பிறர் தேடினும் அடைதல், அறிதல் அரிதாம். தவத்தால் ஞானம் நிகழ்வுறும் என்று கூறப்பட்டாலும் உண்மையில் குருவினலேயே ஞானம் விளையும். தவத்தால் குருவெளிப்பாடும், அக்குருவினல் மெய்யுணர்வும் விளைதலே படிமுறையாம். தவம் இவ்வழி குருவுணர்த்தினும் மெய்ஞ்ஞானம் கிட்டுதலின்மையால் தவத்தை வலியுறுத்துக் கூறுவர். ஞானசாரியனாக முழு முதல்வன் தன்னின் வேறல்லாத் திருவருளினால் திருவுருக் கொள்கின்றான். மாயையினலன்று. "மாயா உருவினை ஏயான்" என்பர். இதனை, ஞானசாரியன்பால் முழுமுதல் அதிட்டித்து அருளும்போது அவ்வாசிரியன் உரு மாயா உருவாயிராமல் அருளுருவாய்ப் பொலியும் என்க. புடம்போட்டு மாசுதீர்ந்த தூய்மைப் பொன்னைப்போலத் தவயாக்கையும் அருள்யாக்கையாகி விளங்கும். இதுபற்றியே. "மாயை மாமாயை மாயா வருமிருவினையின் வாய்மை — யாயவாருயிரின் மேவு மருளொளில் ஒளியாய் நிற்கும்" எனச் சிவப்பிரகாசத்தும் கூறப்பட்டுள்ளது. மாசில் ஆசானின் ஆன்ம சைதன்யம் தன்னுட்கூடிய முதல்வனைச் சார்ந்து அம் முதல்வன் தன்மையை அடைந்துவிடுதலால் அவ்வுயிர் தங்கும் இடமான அவ்வுடம்பும் முதல்வன் அருள்

மய்மேயாம். இதனால் சகலருக்கும் அச்சகலர்வடிவு போன்ற வடிவில் மறைந்து பின்னின்று இறைவனே உபதேசிக்கின்றான் என்பது தெளியப்படும். இது வரை கூறியவற்றால், இறைவன் ஞானாசிரியக் கோல மாக நம்பொருட்டு எழுந்தருளுகின்றமையால் அவ் வாசிரியனை முழு முதல்வனாகக்கொண்டு வழிபடுவதே ஞானமுற்று வீடுபெறும் முறையாகும் என்பது தெரிய வேண்டும். இது பற்றியே இந்நூலாசிரியர், "**தாமில் தலைப்பட்டார் பாலே தலைப்பட்டு**" என ஆசாரியரை வழிபடுவதே முற்செய்யத் தகுவதெனப் புலப்படுத்தி யுள்ளார் என்னலாம்.

### அபிமானம் நீங்குதல்

பதிப்பொருளை உயிர் அடைவதே முடிந்த பேறு. அப் பேற்றிற்குச் சிறந்த சாதனம் ஞானம். அந் ஞானம் ஞானாசாரியனால் உண்டாகும். ஆதலால், அந்த ஞானாசாரியன் உபதேய நெறியே பற்றி நின்று, கருவி கரணங்களைத் தானல்லவெனத் துணிந்து, தன்னியல்பை இன்னதெனத் தெளிந்து, தம்பிரானார் தம்மிடத்தே பிரகாசிக்கும் முறைமையினையும் அறிய வேண்டும்.

உயிர்கள் அறிவிக்க அறியும் இயல்புடையன. ஐம்பொறி வாயிலாக உயிர்கள் படரின் தமது சொரூபத்தை அறியமாட்டா. ஐம்பொறிகள் உயிர் கட்கு உண்மை தெரியவொட்டாமல் மயக்கத்தையே காட்டும். அதாவது, ஐம்பொறிகள் அறிவை விளக்கு வனவாயினும், அவ்விளக்கம் விஷய விளக்கமேயன்றி ஆன்மாவின் உண்மை விளக்கமன்று.

உண்மை விளக்கமன்று. ஒவ்வோரிந்திரியமும் ஒவ்வொரு விடயத்தையே ஓரொருகால் விளக்கும். படிகத்தில் பதிந்த நிறங்கள் அப் படிகத்தின் ஒளியைக் கீழ்ப்படுத்தித் தத்தம் நிறங்களையே பளிங்குடையதாய்க் காட்டும். அதுபோலவே, ஐம்பொறிகளும் ஆன்ம சொருபத்தைக் கீழ்ப்படுத்தித் தத்தம் விடயத்தையே ஆன்மாவுக்குக் காட்டும். இதனால் ஆன்மாக்கள் ஐயுணர்வுகளால் மயங்கித் தம்மை உணரா. பளிங்கின் நிறம் வேற்று நிறம் கலவாதபோதுதான் வெளிப்படும். அவ்வாறே ஆன்ம சொருபத்தை மயக்கும் விடயக் காட்சி குருவினால் நீக்கப்பட்டபோதுதான் அறியலாகும். விளையாடிக் காலம்போக்கி அறிவறியா மாணுக்கனை நல்லாசான் தோன்றி அழைத்து நல்லறிவு கொளுத்திக் கல்வியிற் புகுத்தி நன்மாணுக்கர் கூட்டம் சேர்வித்துக் கல்வியின்பம் துய்க்க வைக்கின்றமை யாவரும் அறிவோம். இவ்வாறே, முதல்வனும் ஆசானாய் எழுந்தருளி உயிர்களை ஐம்புலன்களின் வழிச் செல்லாமல் தடுத்து, அந்த ஐம்புலன்களையும் உயிரின் வழிச் செல்லுமாறு திருப்பி ஆட்கொள்வான். அங்ஙனம் அருளிய ஆசான்மாட்டு அச்சமும் அன்பும் நிச்சலும் கொண்டு ஒழுகுவதே முறைமையாம். ஆசானிடம் வைக்கும் அச்சம் நம்மைத் தீநெறிசேர விடாமல் தடுக்கும்; அன்பு, திருநெறியில் செலுத்தும். ஆசான்பால்வைக்கும் அச்சமே ஆணவத்தினிடம் அச்சங்கொள்ளச் செய்யும். ஆணவத்தினிடம் அச்சம் கொள்ளின் மலம் அணுகாது. மலத்துக்கு இடங் கொடாமை ஆசானால் விளைவதென்பது தேற்றம். " அஞ்சியாகிலும் அன்பு பட்டாகிலும்.........நினை " என்பதும் இக்கருத்துடையது.

ஆன்மா, இந்திரியங்களைத் தன்னின் வேறெனத் தெளிதல் வேண்டும் அப்போதுதான் சிவத்தினியல்பு தன்னிடத்து விளங்கச் செய்யும். அங்ஙனம் செய்வதால் சிவத்துக்கு அடிமையாம். அதாவது சிவமாந் தன்மை ஆன்மாவினிடத்து விளங்கப் பெற்று அடிமைப்பட்டொழுகும். இதனை, " சார்புணர்ந்து சார்பு கெட ஒழுகின் மற்றழித்துச் சார்தரா சார்தரும் நோய் " என்ற திருக்குறட் பாட்டும் உணர்த்தும். ஆன்மா, உடலகத்தில் இருந்துகொண்டே ஆசானருளப்பாட்டினால் இந்த உடம்பும் இதன் சார்புகளும் நிலையில என உணர்ந்து, பிரிந்து பற்றுக் கொள்ளாமல் ஆசானளித்த மெய்யுணர்வு நெறி நின்றால், தனக்கு உண்மைப் பற்றுக்கோடு இறை திருவடியே எனத் தெரிந்துணரும். புலங்களினியல்பு அறியப்படாத வரையில் ஆன்மாவுக்கு மலமே தாரகமாகும். அறியப்பட்ட பின்னர் சிவம் தாங்குவது ஆகும். சிவம் எப்போதுமே தாரகமாகத்தான் உள்ளான். இதனை உணராமைதான் தடையாக நின்றது. உணர்வதே போதுமானது. ஊஞ்சலுக்குக் கயிற்றுப்பிடிப்பே தாரகமென என்றுகிறோம். அப்போதும் தரைதான் உண்மையான தாரகமாகும். இவ்வுண்மை கயிறற்றதும் தெரிகிறது. இவ்வாறே உள்ளது சிவத்தின் நிலைத்த தாரகம். ஆசானால் மெய்யுணர்வு பெற்றுத் தத்துவக் களைவுணர்ச்சியைப் பெற்றாலே, வேறு புது முயற்சியின்றித் திருவடிப் பேறு சிவத்தால் நல்கப்படும். நம் உள்ளக் கருத்தினை உணரவல்லாரை அறிந்து அவர்முகம் நோக்கி நின்றாலே நமக்கு அவர் வேண்டுவன தந்து காப்பர். " முகம் நோக்கி நிற்க அமையும் அகம் நோக்கி — உற்றது உணர்வார்ப் பெறின் " என்பது குறள்.

ஆசாளுல் தடைநீங்கியவழி ஆன்மா உலகில் அரன்பாதம் அடங்கும். முதல்வனடிக்கண் நெஞ்சமுழுந்தப் பெற்றார் மீளவும் புலன்களின் வழித்திரும்புதல் செய்யார். சிவ ஆற்றலுக்குக் கேடின்மையால் மீண்டும் கருவிகளைக் கூடுதல் நிகழாது. ஆற்று நீர் அணையுடைந்து கடல்நீரோடு கலந்தால் பின்மீளாது. வாடகைக்குக் குடியிருப்போன் அடிக்கடி மாறிக் கொண்டே இருப்பான். தனக்கென நிலைத்த வீடுடையான் இடம் மாறவேண்டுவதில்லை. கருவிகள் வழிச் செல்லா ஆன்மாவினது கருவி கரணங்களைச் சிவகரணமாக மாறியதென மதிப்பர். தெய்வத்தின் சார்புற்ற பொருள்களைத் திருநீறு, திருமெழுக்கு, திருக்குளம் என மதிப்பது போலும் இச் செய்கை. ஆண்டவன் ஆன்மாக்களிடத்தும் அருமாயையினிடத்தும் ஒப்ப நிற்கிறன். எனினும் ஆவியினிடத்து நிற்பது ஆன்ம அறிவு கண்ணிடத்து நிற்பதை நிகர்க்கும். கண், சென்று பற்றும் சிறப்புடையது. ஏனைப் புலன்கள் நான்கும் வந்ததைப் பற்றும் இயல்பின. விளக்கு, திரி, நெய், தீ என்பன இருந்த இடத்தே இருப்பன. ஒளி சென்று பற்றும் தன்மை உடையது. இதுவே போல்வது கண்ணியல்பு. இவ்வாறே ஆன்ம அறிவும், கருவிகளும் முதல்வனுல் தூண்டப்படினும் ஆன்ம அறிவே பரந்து பட்டறியும் தன்மை வாய்ப்பது.

திருவடியிலே அழுந்தப் பெற்ற நெஞ்சுடைய ஆன்மாக்கள் பயிற்சி வயப்பட்டு ஓரொருகால் உலகினை நோக்கலுறும். அப்போதும் இறைவன் உடங்கியைந்து இயக்குவதால் ஒண்மைத் தொழிலாகும். ஆற்று நீர் கடலிற் கலந்தபின்னும் ஓரொருகால் எதிர்ப்பிளுல் ஆற்றினுள் சிறிது தூரம்

மீள்வதுண்டு. அப்போது அந்நீர் முன்புபோல இராது. கடல்நீரின் தன்மையையே அடைந்து காட்டும். இவ்வாறே ஆசானருள்பெற்ற ஆன்மா, உள்ளுதல், உரைத்தல், ஒழுகுதலாதி செயல்களை ஆண்டவன் பக்கலே பூண்டொழுகும் என்க! ஆதலால், திரு ஐந்தெழுத்தினை ஆன்மா எண்ணிக் கிடப்பதே ஆசானருளியவழி தலைப்படுதலெனப்படும். இதனால் ஆசானருளை மறத்தல் தீது எனத்தேறலாம். நீங்காது நினைத்தலே நன்றியாகும். இங்ஙனம் ஒழுகின் ஆண்டவன், பிழைதவிர்த்து ஆட்கோடல் செய்யும். நம்பியாரூரர் வரலாறு இவ்வுண்மை உணர்த்தும். "பிழைப்பனாகிலும் திரு அடிப்பிழையேன்" என்பர் இவர். "பிழுக்கை வாரியும் பால்கொள்வர்" என்ற உலக வழக்கினை இவர் எடுத்துக்காட்டுவர். திருவைந்தெழுத்தினை ஓத ஓத, நீர்ப்பாசி கல்லெறியும்வழி நீங்கல்போல் மலமாயை கன்மங்கள் அகலும். இருட்டு எப்போதும் விளக்கற்றம்பார்த்து நிற்கும். ஆதலால், கருவிவழி உலகமாயையுட்படல் தீது என்று தெரிதல் நேரிதாம். பயிற்சி வன்மை கடக்கும் உரம் ஆசானருளால் விளைவது. "காய்ந்த இரும்பு கனலை அகன்றாலும் வாய்ந்த கனலென வாதனை நிற்கும்" என்ற உவமை பயிற்சியின் வன்மை காட்டும். இதனால், கருவி வாதனை பயிற்சி வாதனையாதிய நீங்குதற்கு நமக்குதவுபவன் ஞானாசாரியனே எனத் தெளிந்து, அவனுபதேசத்தால் தேகாதிகளை வேறெனத் தெரிந்து பற்றறுத்து, தான் திருவடியே தாரகமாகப் பற்றிக் கிடக்கும் நிலையினை உணர்ந்து, ஆண்டவன் தம்முள்ளே பிரகாசிக்கும் சிறப்பினைத் தெரிந்தொழுகுதல் வேண்டும் என உணர்வோமாக! இதனை இங்

நூலாசிரியர் இப்பாவினுள், "**தம்மில் தலைப்படுதல் தாமுணரின்**" என உணர்த்தியருளியுள்ளார்.

### தம்மின் ஓரிருவர் நிலைப்படுதல்

இறைவன் பெத்தநிலையில் உயிரோடுறைகின்றானெனினும் மறைந்து நிற்கின்றானவன். நெருங்கிய மலர்மாலையில் உள்ளே பிணித்திருக்கும் நார் தெரிவதில்லை. நட்சத்திரங்கள் இருள்வயப்பட்டிருக்கையில் சூரியன் மறைந்தே நிற்கிறான். இவ்வாறே இறைவன் ஆன்மா தற்போதமுற்றுள்ள நிலையில் மறைந்து நிற்கிறான். அப்போது ஆன்மா ஒருபொருளைத் தான் கண்டதாகக் கருதுகிறது. தனக்குள்ளிருந்து காட்டுவோனை அறிகிறதில்லை. சுட்டு நிலையில் ஆன்மா ஆண்டவன் என்னும் இருவராலும் அறியப்படும் பொருளை ஆன்மா முனைப்பினால் தானறிவதாகக் கருதுகிறது. அப்போது ஆண்டவன் ஆன்மாவிடம் மறைந்து ஆவி வழி நிற்கிறான்.

வீட்டு நிலையில் மேற்கூறிய முறை மாறுபடும். முனைப்பொடுக்கம் ஆன்மாவுக்குண்டாகிறது. இதனால் ஆன்மா திருவருள் அறிவால் சிவப்பொருளைத் தன்னறிவு முதலியன ஒன்றுபட்டு ஆண்டவன் வழி நின்று காண்கிறது. தெளிவு நிலையில் முனைப்பறுகிறது. மோருடன் நீரைக் கலந்தால் அக் கலப்பு நிலையில் மோர் மேலே நிற்கிறது. ஆனால் தெளிந்த நிலையில் மோர் கீழே அடங்கி நிற்கிறது. இவ்வாறு உண்மை நிலையில் முன்பின் மாற்றம் நிகழும். குதிரை ஓடும் போது ஓட்டுபவன் பின்னே ஆகிறான். குதிரையை நடத்தும்போது ஓட்டுபவன் முன்னே சென்று

இழுக்கிருன். "நும் பின் எம்மை நுழையப் பணியேல்" என்பர் திருமுறைத் திருமறையில் இம் முறையினை. "என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்பதும் இஃதுணர்த்தும். யான், எனது என்ற செருக்குகள் அறப்பெற்ற நிலையே தற்போதமற்ற நிலையாம். இந் நிலையில் ஆன்மா ஆண்டவன் சத்தி வயப்பட்டுத் தலைவனடிக் கிடக்கும். சுட்டுணர்வு அற்றபின் வருவது சிற்றுணர்வு இருத்தலை அறியு நிலை. இதன் பின்னர் வருவது முற்றுணர்வுளழுந்து நிலை. "சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றாம்" நெறி இதுவாம். ஞாதுரு ஞானம் ஞேயம் எனப் பகுத்துக் காணும் நிலை தெளிவு நிலையாகாது. வழக்குரிஞன் வாதாடுகையில் வழக்காளி அடங்கி அவன் வழி நினைதல் போல்வது தெளிவு நிலை. ஏகனுகி நிற்றல் தெளிவு நிலையாம். இந் நிலையினை எய்தவேண்டுமெனத் தெரிவித்தற் பொருட்டே ஆசிரியர், "**நம் பின் நிலைப்படுவர் ஓரிருவர்**" என்றார்.

அப்பால், ஆன்மா காண்கிறேம் என்னும் தன்மை முற்றும் நீங்கி இறை பரப்புள்ளழுந்தி யனுபவித்தல் வேண்டும். அதுவே சிவமாகிப் பிரகாசிக்கும் நிலை எனப்படும். இந்நிலையில் காண்பான், காட்சி, காணப்படு பொருள் என்ற பிரிவே தோன்ருது. இங்ஙனம் பிரிப்பற நின்று துய்க்கும் இன்ப நிலையே சிவத்தைத் தலைப்படுமுறையாம். இதனையே, "**நீக்கி நிலையாக்கித் தலைப்படுவர் தாமத் தலை**" எனக் கூறியருளினர் ஆசிரியர். எனவே, முத்தி நிலையில் உயிர் முதல்வனேடு உடனாய் நின்று உயிர் அறியினும் அவ்வுயிர் முதல்வனின் வேருகக் காணப்படாமல் முதல்வனேடு ஒற்றுமைப் பட்டு

நிற்கும் என்பதாம். "ஏகனாகி நிற்க" என இஃது உரைக்கப்படும். இதனைச் சிவானந்த நிலை எனவும் செப்புவர்.

மற்றும், இக் கருத்துக்களை, "ஏகனுமாகி அநேகனும் ஆனவன் நாதனும் ஆனான்—நம்மையே ஆண்டான்"; "நம் செயல் அற்று இந்த நாமற்றபின் நாதன் தன் செயல்தானே" என்னும் திருவுந்தியார் திருவாக்குகளுடன் ஒப்பு நோக்கியும் அறிதல் தக்கதே.

---

## செய்யுள் — 3

### பரம்பரை வாசகம்

என்னறிவு சென்றளவில் யானின் றறிந்தபடி
என்னறிவி லாரறிக என்றொருவன்—சொன்னபடி
சொல்லக்கேள் என்றொருவன் சொன்னான்
சொல்லக்கேள் நானுனக்கச் சொல். [எனக்கதனைச்

#### கருத்து

பசுஞானம் நீங்கிய பரம்பரைச் சொல்.

#### விளக்கம்

இந்தத் திருக்களிற்றுப்படியார் நூலாசிரியர் உய்யவந்ததேவ நாயனார் ஆவர். இவர் திருக்கடவூரினர். இவர் திருவியலூர் உய்யவந்ததேவ நாயனாரின் சீடராவர். தாம் இவ்வாசிரியரிடம் ஈடுபாடுடையவராகி ஞானோபதேசம் பெற்றனர். ஞானோபதேசத்தை எந்த ஞானாசிரியரும் எளிதில் செய்யமாட்டார்.

சீடனின் பக்குவ நிலையினைப் பல்காலும், பல்வகை யாலும் பரிசோதித்தறிந்த பின்னரே போதிப்பர். ஞானோபதேசம் வீண்படலாகாதென்பது இவர்கள்தம் கருத்தாம். இவ்வாறே இத் திருக்களிற்றுப் படியார் நூலின் ஆசிரியரும் தமது ஞானாசிரியரது நம்பிக்கைக்கு ஆளாகிய பின்னரே உபதேசம் பெற்று ராதல் வேண்டும். ஆதலால், தாம் இந்த நூலின்கண் கூறும் ஞானச் செய்திகள் மேலானவை எனவும், அவை தாமே கற்பித்துக் கூறியன அல்ல எனவும், இவ்வுபதேசம் பாரம்பரியமாகப் பாதுகாக்கப்பட்ட பழைமை வாய்ந்த மூலதனம் எனவும், இதனை ஏனைப் பொருட்செல்வம் போன்று அசட்டை செய்தலாகா தெனவும், இதனை, உடையார்முன் இல்லார்போல் அடங்கிய ஒருங்கிய உள்ளத்தோடிருந்து பெறவேண்டு மெனவும், அங்ஙனம் பெற்று அவ்வுபதேச நெறியே நிற்பின் பசுபோதம் தொலைந்து பதிஞானம் தலைப்படு மெனவும், இதனாலே முத்தி சித்திக்கும் எனவும், இவ் வழியன்றி வேறு நெறியில்லை எனவும், பசுஞானத் துடன் கூடிய எந்த ஞானோபதேசமும் ஆன்ம சித்தி அளிக்கமாட்டா எனவும் இப் பாடலால் முந்துறக் கிளக்கலானார் என அறியலாம். எனவே, இந்த ஞான சன்மார்க்கம் முழுமுதற் பரம்பொருளிடமிருந்து பரம்பரை பரம்பரையாக வரும் புனிதமுடையதும், மேலானதும், இன்றியமையாததுமாம் எனப்பட லாயிற்று.

ஆசாரியன், தன்னிடமுள்ள இயல்பான கருணை யாலே சீடனுடைய குற்றங்களையெல்லாம் போக்கிப் பக்குவ நிலையை ஆக்கி நிறுத்துகின்றான். அங்ஙனம் நிற்குமளவில் ஆசாரியன் உரைத்த நெறியிலே

உறைத்து நிற்பின் அநுபவ முறையிலே ஆனந்த நிலையினை அடையலாகும். அவ்வாறின்றி, ஆராய்ச்சி செய்யத் தொடங்கின் ஜீவபோதம் தலை தூக்குவதாகித் திரும்பவும் பாசக் கடற்குளே வீழ நேரும். இதனால் ஆசாரியனுடைய சொல்லில் திடமான நம்பிக்கையே தேவை என்பது தெளியலாம். சிவஞானத்திலே விருப்பமற்றவர்க்கு இந்த நம்பிக்கை வாய்த்தலரிது: பசியில்லானுக்குப் போனகம் பயன்படாது. நீர் வேட்கையில்லாற்கு நீரின் தூய்மை புரக்கும் எண்ணம் எழாது. இவ்வாறே அருள் தாகமற்றவர்க்கு ஞானோபதேசத்தில் நாட்டமேற்படாது.

ஞானகுருவே மேலானகுரு ஆவான். அவனைச் சிவாலயமும் சிவனடியாரும் என மதித்து வழிபட வேண்டும். ஞானகுருவே அகத்தொழில் புரிவோரை நிகர்ப்பர். ஏனையோர் புறத்தொழில் புரிவார்போல்வர். அகத்தொழில் செய்பவர்கள் புறத்தொழிற்கும் உரியராவர். ஆனால், புறத்தொழில் செய்வோர் அகத் தொழிற்கு அருகதை உடையவராகார். ஆதலால், ஞான குருவை, ஈசனிவனே என்றேத்துதல், அவ் வாசிரியனால் நன்மையடைதற்கு வாயில் ஆகும். மருந்து மந்திர முதலிய அற்ப சித்திகளை ஏனையோரிட மிருந்தும் பெறல் கூடும். ஆனால் சிவபெருமான் திருவடியை அடையும் ஞானம் ஞானாசிரியன் திருவருளாலன்றி வேறெதனாலும் விளையாது. இந்த ஞானகுரு அருளால் முற்கூறிய சித்திகளையும் ஒருவன் எய்த விரும்பின் எய்தலாம். ஃ சொரூப சிவமும், தடத்த சிவமும், சிவலிங்காதி மூர்த்தங்களும் யாவும் குருமூர்த்தமே ஆகும். இத்தகைய ஞானாசிரியரைத் தலைப்பட்டு வழிபட்டால், சிவபெருமான் இக்

குருவினை ஆவேசித்து நின்று கோழிபோன்று பரிச தீட்சை புரிந்தருளியும், ஆமைபோல் பாவனைதீட்சை ஆற்றியும், மீனைப்போல் சட்சுதீட்சை செய்தும் சிவமாகச் செய்தருளுவன் என்பர். இத்தகைய சிறப்புடையவனாகிய ஞானாசாரியரைத் தாம் வழிபட்டு அநுபவிக்கப்பெற்ற பேருகும் இக் களிற்றுப் படியாருட் கூறப்படுவதென நம்மனோர்க்கு உணர்த்தும் பொருட்டே, "**என்னறிவு சென்றளவில் யானின்றறிந்தபடி என்னறிவிலாரறிக**" எனக் கட்டுரைத்துக் கூறலுற்றார் இவ்வாசிரியர், இதனால் பசு ஞானநீக்கம் பகரப்பட்டதென வுணரலாம். தாம் பெற்ற இந்த ஞானானந்தானுபவம் தன்னுடைய ஞானாசாரியரால் அனுக்கிரகிக்கபட்ட தெனவும், அவருக்கும் அஃது அங்ஙனே பரம்பரையாக வந்த பழந்தனம் எனவும் நமக்குத் தெரிவித்தற் பொருட்டே, "**என்று ஒருவன் சொன்னபடி சொல்லக்கேள் என்று ஒருவன் சொன்னான் எனக் கதனை**" என்று மொழிந்துள்ளார். இதனில் இரண்டுமுறை **ஒருவன்** என்ற சொல் வருவதினின்றும் இந்த அநுபவம் பாரம்பரிய முடையதென நாமறியலாகும்.

இங்ஙனம், தான்பெற்ற இவ் வின்பத்தினைத் தானே புசித்துப் பிறர்க்களிக்காமல் இருப்பது ஞானியர் இயல்பன்று. "யான்பெற்ற இன்பம் இவ் வையகம் பெறுக" என்பதே இவர்தம் திருவுள்ளம். அவ்வாறே, இவ்வாசிரியரும், தாம் தமது ஞானாசாரியரிடமிருந்து பெற்ற பேற்றினை உலகினர்க்கு வழங்கி அவரையும் அருள்வயப்படுத்தற்கு அவாவுகின்றாராயினர். உயர்ந்த இமயத்துக்கும், ஆழ்ந்த கடலுக்கும் இவற்றிடையே பிரவகிக்கும் கங்கையால்

தொடர்பு ஏற்படுவதுபோலச் சிவத்திற்கும் சீவர்க்கும் நல் தொடர்பினை உண்டாக்குதற்கு இவ்வாசிரியர் நயக்கின்ற நீர்மை போற்றிக் கோடற்குரித்தாம். இதனை, "**சொல்லக்கேள் நானுனக்கு அச்சொல்**" என்ற வாசகத்தால் அறியலாம். நீண்டதொரு பிரசங்கமாயின் கேட்பார் பொறுமையற்றிழப்பராதலால், அங்ஙன மன்றென ஞானஉபதேயத்தின் சீர்மை புலப்படுத்தற் பொருட்டு, "**அச்சொல்**" என்றார். மேலும், **உனக்கு** என்றமையால் பக்குவிகளின் அருமை புலப்படுத்தியுள்ளார் எனலும் ஆம் "**கேள்**" என்ற சொல்லால் பராக்காயிருக்கும் தன்மையின் விலக்கி ஜீவனை ஆட்கொள்ளும் முறைமை தெரியலாம். இதனால் அவமுகப்படாமல் சீடன் சிவமுகப்படுதல் தெரியப்படும். பாசப் பழக்கம் நீங்கிப் பதியிலழுந்தும் பழக்கம் இவ்வொரு சொல்லால் வருதல் ஒருதலை என்பதைத் திருவுந்தியாரில் "பழக்கம் தவிர" என்ற வாசகம் புலனுறுத்தும்.

## செய்யுள் — 4

## ஆசாரியன் நிலை

**அகளமய மாய்நின்ற அம்பலத்தெங் கூத்தன்**
**சகளமயம் போல்உலகில் தங்கி—நிகளமாம்**
**ஆணவ,மூல மலமகல ஆண்டான்காண்**
**மாணவக என்னுடனாய் வந்து.**

**கருத்துக்கள்**

1. இறைவன் நிலை.
2. அம்பலக் கூத்தன் தொழில்.
3. ஆசாரிய வடிவம்.
4. ஆணவ மலம் போக்கல்.
5. இறைவன் கருணை ; உடனாதல்.

**விளக்கம்**

எப்போதும் அழியாதிருக்கும் பொருள்கள் மூன்றென்ப. அவை பதி பசு பாசம் எனப்படுவன. இவற்றுள் பசுப்பொருள் எப்பொழுதும் பதிப்பொருளையே தாங்கும் முதலாகக் கொண்டியல்வது. பாசம் இறைவன் ஆணைப்படி பசுவினைப்பற்றிப் பயன்படுவது. ஆகாயம், ஏனை நான்கு பூதங்கட்கும் இடமளிப்பது. அவற்றின் ஊடேயும் உறைவது. இதனால் ஆகாயத்தின் பெருமை புலப்படும். இங்ஙனமே பதிப்பொருள் தான் யாவற்றையும் அடக்கிக்கொண்டிருப்பது. யாவற்றின் ஊடேயும் நின்றியக்குவது. இப்படி ஒரு பொருளியலாவிடின் பசுவும் பாசமும் அனவரதமும் மல்லாடி அவத்தைப்பட வேண்டிவரும். இவ்வவத்தைக்கு முடிவே இராது.

இறைவன், "அந்தம் ஆதியாய், அவையே தானே ஆய், ஆணையில் நீக்கமின்றி நிற்கும் நிலையினனாய், தமியருள் புரிபவனாய்ச்" சார்ந்தாரைக் காக்கும் ஐந்தொழில் உடையவன் ஆவன். முழுமுதல்வன் சித்துச் சத்தாய் நின்று அருள் புரிபவன். அறிவால் ஆசானாகிய அருட்கோலம் கொண்டருளி, ஆன்மாவினை ஐம்புல வேடரின் நீக்கி ஐந்தெழுத்து எண்ணுவிப்பன். ஆற்றலால், இறைபணியில் நிற்பிப்பன். காட்டிக் காண்டலும், தொழுவித்தலும் புரிந்தருள்வன். இவ்விறைவனே உலகுக்கு நிமித்த காரணன் ஆவன். இவன் கலப்பினால் உடலும் உயிரும் போன்று அவ்வுயிர்களேயாய்—பொருட்டன்மையால் கண்ணின் ஞாயிறுபோன்று அவ்வுயிர்களின் வேறுமாய்—உயிர்க்குயிராதல் தன்மையால் கண்ணொளியின் ஆன்ம

போதம் போல உடனுமாய் நின்று ஆணை எனப் படும் தனது சிற்சத்தியினுல் வரும் நல்வினை தீவினை களால் ஆன்மாக்கள் பிறப்பும் இறப்பும் அடையச் செய்து தாம் அந்தச் சிற்சத்தியினின்று பிரியாது சம வேதமாய் நிற்பர். இதுவே இறைவனுடைய தடஸ்த லக்ஷணம் எனப்படும் **பொது இயல்பாம்.**

சிவபெருமான், பாசஞானம் பசுஞானங்களால் அறியப்படுபவரல்லர். அங்ஙனம் அறியப்படுவரேல் அசத்தாய் முடிவர். முயற்கோடு, ஆமைமயிர்க் கம்பலம் இவைபோல ஒருவாற்ருனும் அறியப்படாத பொருளுமல்லர். அங்ஙனமாயின் சூனியப் பொரு ளாவர். ஆதலால், இவ்விருவகையுமின்றி ஒருவாற்ருல் பாசஞான பசுஞானங்களால் அறியப்படாத **சிவமாயும்,** ஒருவாற்ருல் பதிஞானமொன்ருல் அறியப்படும் (நுகரப்படும்) **சத்தாயும்** இவ்விரு வகையால் **சிவ சத்தே** ஆகியவர் என்பர். ஆதலால், பாசஞான பசு ஞானங்களைக் கடந்து சிவஞானத்தினுல் ஒற்றுமைப் பட்டு நின்று உணரும் அநுபவ மாத்திரைக்கே புலப் படுவது சத்தாகிய சிவம். இது சொரூப இலக்கணம் எனப்படும் **சிறப்பியல்பு** ஆகும். வாக்கு மனுதீத கோசரமாய் நிற்பவன் என்பதும், மாற்றங் மனம் கழிய நின்ற மறையோன் என்பதும் இச் செய்தியுணர்த்தும். வாக்கு என்பது நூலுணர்வினையும் குறிக்கும். "நூலுணர்வறியா நுண்ணியன் காண்க" என்பதும் இப்பொருளை உறுதிசெய்வதாகும். இதனுல் முதல்வன் நுகர்வுணர்வுக்கே உரியவன் என்பதாயிற்று. ஒட்டி (வேறற விரவி நின்று) உணரப்படுவான் என்பது **விளக்கம்.** சுட்டுணர்வாலும், சிற்றுணர்வாலும் அறியப்படாமையின் சிவம் என்பர். ஆண்டவன்

உண்மை வடிவம் அறிவு வடிவாம். "வால் அறிவன்" என்றார் வள்ளுவனாரும். அறிவை அறிதற்கு அறிவே கருவியாம். எனவே முழுமுதல்வனை அவனோடு பிரிப்பின்றி நின்றருளும் அவனுடைய முற்றுணர்விலைன்றி வேறுவகையால் உணர்தல் இயலாதென்க. முதல்வன் சத்துப்பொருள் ஆதலால் உள்ளதாம் தன்மை பற்றி உணரப்படுபவன் என்பர். மற்றும், "வாய்மொழியான் மெய்யான் மனத்தான் அறிவிறந்த தூய்மையதாம் மைதீர் சுடர்" எனவும் இந்நிலை கூறப்படும். பாவனைக்கும் எட்டாத பொருள் சிவம். திருவருளால் தான் இப் பொருளை அறிதல் இயலும். "இந்தப் பிரமம் அருளினால் அடையற்பாற்று" என்று கூறும் கடவல்லியும். இங்ஙனம் பசு பாச ஞானங்களைக் கடந்து முழுமுதற் பொருள் நிற்றலால் "அகளமாய் நின்ற" என்றார் ஆசிரியர். இதனால், பாச பசு ஞானங்களைக் கடந்து நின்று அறிதற்கு வல்லமையுடைய ஒருவன் சிவப் பொருளை அப் பொருளோடு ஒன்றுபட்டு நின்று அப் பொருளின் அருளாலறிவன் என்பது கருத்தாம் நின்ற என்ற சொல்லாற்றல் இஃதுணர்த்துவதாம். இவ்வாறு கூறுவதால் அப் பொருளை அறியும் அநுபவத்தில் அறிவு நிகழ்வதற்கு ஆன்மாவின் அறிவுடன் கலந்து ஒன்றாயும், அறியப் படுவதற்குப் பொருட்டன்மை பற்றி ஆன்மாவின் வேறாகியும், அறிதற்றொழிதல் நிகழ்தற்கு ஆன்மாவின் அறிவைச் செலுத்தி அவ்வறிவோடு உடனாயும் இவ்வாறு நிற்பது இறை நிலையாம். இதுவே அத்துவித நிலை எனப்படும். கண், சூரியனை அறியுங்கால் கண்ணொளியோடு சூரியன் கலந்து ஒன்றாயும், காணப் படுவதற்குச் சூரியன் கண்ணின் வேறாயும், காணுங்

தொழில் நிகழ்ச்சிக்குச் சூரியன் கண்ணொளியைச் செலுத்தி உடனுய்ர் நிற்றல் இதற்குவமை கூறப்படும். மற்றும் இறைவன் அகளமாய் நின்ற நிலைபற்றிய விரிவுரைகளை இத் திருமடத்தினின்றும் இதன் முன்னர் வெளியிட்டருளப் பெற்ற " **திருவுந்தியார்—தெளிவுக் கட்டுரை** " நூலில் முதற்பா விளக்கத்தே காண லாகும்.

இங்ஙனம் மனுதிதமாயும் கோசரமாயும் உள்ள முழு முதல்வனே ஆன்மகோடிகள் அடியடைதற் காவன அறிந்து எந் நிலையிலும் புரியவல்லானுவன். இஃது இறைவன் கருணையால் மேற்கொண்ட கடமையேயாம். இதனை விளையாட்டெனவும், ஐந் தொழில் ஆடல் எனவும் அறைகுவர். உயிர்கள் அறிவிக்க அறிவன; இறைவன் அறிவிக்க வேண்டாத-வன் ஆதலால் உயிர்க்கு ஆவனவற்றை அவனே புரிய வேண்டுவதாயிற்று. இதனுல் இறைவன் உயிர்களின் பொருட்டுக் கேவலாவத்தையில் அறிதல் வகையில் **சூக்கும ஐந்தொழிலையும்**, சகலாவத்தையில் விடயத் தைத் தோற்றுவிக்கும் முறையில் சிருட்டியாதி **தூல ஐந்தொழிலையும்**, அச்சகலாவத்தையினுள்ளும் சாக்கிரத்தில் இன்ப துன்பப் பலனை ஊட்டுவிக்கு முறையில் **அதிசூக்கும ஐந்தொழிலையும்** செய்து துதவுவன். உயிர்கட்குப் பசுத்துவத்தை நீக்கிச் சிவத்து வத்தை அளித்தற்கண் இறைவன்பால் உளதாகிய இரக்கமே **அருள்** எனப்படும்.

சூக்கும ஐந்தொழிலாவது—சர்வசங்கார காலத்தே மலபரிபாக நிலைகளுக்கு ஏற்ப அறிவிக்கத் தக்கவர்களை அறிவித்தல் **அநுக்கிரகமாம்**. மறைக்கத் தக்கவர்களை

மறைத்தல் **திரோபவம்.** ஆன்மாக்களின் சஞ்சித கன்மங்களைப் பக்குவப்படுத்தல் **சங்காரம்.** மாயா காரியங்களை வெளிப்பட ஏற்றவையாக்குதல் **திதி.** தோன்றுதற் குரிய சித்துப் பொருளையும் சடப் பொருளையும் பார்த்துக் கொண்டிருத்தல் **சிருட்டி.** இவை உயிர்கட்காக இறைவன்பால் நிகழ்வன.

தூல ஐந்தொழிலாவது — தனு கரண புவன போகங்களைத் தோன்றச் செய்தல் **படைப்பு.** அவற்றை நிலைக்கச் செய்தல் **திதி** (காப்பு). அவற்றை அழித்தல் **சங்காரம்.** அவற்றுள் அனுபவிக்க வேண்டாதவற்றை மறைத்து அநுபவிக்க வேண்டுவனவற்றுள் அழுத்தல் **மறைப்பு.** அநுபவிக்க வேண்டியவற்றைத் தோன்றச் செய்தலும் முத்தி பயத்தலும் **அநுக்கிரகம்.** இவ்வைந்தொழில்கள் உயிர்களின் பொருட்டு உயிர்களினிடத்தும் உலகாகிய பாசத்தினிடமும் நிகழ்வனவாம். இவற்றுள் மறைத்தலும், அருளலும் உயிரின் மாட்டு நிகழ்வன. ஏனைய மூன்றும் பாசத்தின் பாலன.

அதிசூக்கும ஐந்தொழில்—ஆன்மாவிற்கு அறிவித்தல் **சிருட்டி.** அறிந்தவற்றுள் அழுத்துதல் **திதி.** முன்னறிந்தவற்றினின்றும் பிரித்தல் **சங்காரம்.** ஒன்றை அறியவேண்டுங்கால் பிறிதொன்றை அறியவொட்டாது செய்தல் **திரோபவம்.** அறிந்தவற்றை அநுபவிக்கச் செய்தல் **அநுக்கிரகம்.** இவை உயிரினிடம் நிகழ்வன. இங்ஙனம் உயிர்கள் நற்றுளடைதற் பொருட்டு நடிக்கும் இடமும் உயிர்நிலையும் பெருவெளியும் அம்பல மெனப்படும். இக் கூத்தினை நிகழ்த்து முதல்வனைக் கூத்தன் என்பர்.

இங்ஙனம் பொதுவகையால் ஐந்தொழில் நிகழ்த்துவது நிகழாக்கால் உயிர்கட்கு உய்தி இலதாம். ஆதலின் பொதுவகையால் இங்ஙனம் இறைவன் புரிந்தருளும் செய்கையை இவ்வாசிரியர், "அம்பலத்தெங் கூத்தன்" என்னும் முறைமையால் தெரிவித்தருளினர் என்ன லாம் ஆன்மாவுக்கு நலம் எனப்படுவன போகமும் மோட்சமுமாம். இறைவன் அம்பலத் தாடுதலால் ஆன்மாவிற்கு ஐம்பொறி வழியாக விடயங்களை அறிவித்து அங்ஙனம் அறிவித்தலால் ஏகதேச அறிவை நிகழச்செய்து உலக போகத்தைக்கூட்டி அப்போக அநுபவத்தால் பல பிறவிகளை எய்துவித்து அவ்வநுப வத்தால் வெறுப்பூரச் செய்து பருவம் முதிர்ந்தபோது வியாபக அறிவை விளக்கி அவ்வறிவுக்குப் பயனுகப் பர போகமாகிய பேரின்பத்தைக் கொடுத்தருளுவன் என்னலாகும்.

ஆன்மாக்கள் தூல அறிவுடையன. படிப் படியாக இந்த அறிவு விளக்கம் பெறவேண்டியுள்ளது. இதனால் பல பிறவிகளை எய்துகின்றது. பல் பிறவி களிலும் சரியை, கிரியை யோக சாதனைங்களைச்செய்ய நேருகின்றன உயிர்கள். இதனை முற்செய் தவம் என்பர். வேள்வி முதலியன செய்தலும் புண்ணியச் செயல் எனப்படினும் அவை சுவர்க்க முதலிய நிலை யற்ற போகங்களைப் பெறுவிப்பனவாதலால் உண்மைத் தவமாகா. பசித்து உணவுண்டு பசி போக்கியவன் திரும்பவும் பசி தோன்றப் பெறுவதுபோலும் நிலை யற்ற போகப் பேறு. ஆதலால், இதுகாறும் அகத்தே உறைந்து உண்மை நெறி உணர்த்திவந்த முழு முதல்வன் வெளிப்பட்டு உயிருக்கு அதன் உண்மை

நிலையினை உணர்த்தவேண்டியுள்ளது. ஞானத்தாலன்றி முத்திப்பேறு எய்துதல் இயலாது. இந்த ஞானம் ஞானாசாரியரால் தரப்படுவது. இந்தக் குருவருள், உயிர்க்குச் சரியை முதலிய நற்றவம் செய்தலால் உண்டான புண்ணிய முதிர்ச்சியால் இருவினை ஒப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் விளைய, அதன் பயனாக ஏற்படும். இக் குருவருளே உயிர்க்கு அதன் உண்மை நிலையினை உணர்த்துவது; நற்போது ஐம்புல வேடருட் பட்டு அல்லற்படுவதை அறிவிப்பது. கொற்றக் குடையும், மணிமுடியும், அரியணையும் மன்னவ குமாரனுக் குரியவை என வேடருட்பட்ட மகற்கு அறிவுறுத்தப் படுவது போலும் இச் செயல் நிகழும். எனவே, உயிரின் அறிவு, இச்சை, செயல்களை நல்வழிப் படுத்துவதை இது குறிக்குமென்னலாம். குடை கூறப்பட்டுள்ள குறிப்பு அறிவு திருத்தப்படுவது உணர்த்தும். "கண்பொர விளங்கும் நின் விண்பொருவியன்குடை — வெயில்மறைக் கொண்டன்றோ அன்றே வருந்திய குடிமறைப்பதுவே கூர்வேல் வளவ" என்னும் புறப்பாட்டடிகளும் இக் குறிப்புக்குத் துணையாம். மணிமுடி அன்பினை (இச்சை) நல் வழிப்படுத்தலைத் தெரிவிக்கும். முடி. குடிகளால் தரப்படுதல் இதனை வலியுறுத்தும். அரியணை ஆற்றலாம் செயல் திருந்துதலை உணர்த்தும் குறிப்புடையதெனலாம். இதனால் மூழுமுதல்வன் அறிவு ஆதியன உயிரின் அறிவாதியவற்றை ஒழுங்கு படுத்துதல் தெளிதலாம். எனவே, மேற்கூறிய நற்றவத்தாலன்றி மெய்யுணர்வுக்கும் நன்னெறிக்கும் வேறு வழியில்லை என்னலாம். இதனாலேயே திருக் கண்ணப்பரைப் பற்றிக் குறிப்பிடுகையில் சேக்கிழார்

பெருமான், "பெற்றியால் தவம் முன் செய்தான்" எனவும், "முன்பு செய்தவத்தின் ஈட்டம் முடிவிலா இன்பமான அன்பினை எடுத்துக்காட்ட" எனவும் விதக்கலாயினர்.

உயிருக்கு அறிவு இச்சை செயல்கள் குணங்களாம். ஆதலால், உயிர்கள் யாதானும் ஒன்றை இச்சிக்கும். அதனை நிறைவேற்றும் உபாயத்தை அறியும். அவ்வுபாயத்தால் நலம் எய்தும். சுவர்க்க முதலிய நிலையிலாப் போகங்களை விழைதலும் உயிர்க்கு இச்சையால் வருவதாகும். இதற்கான வேள்வி தலைப்படுதல் உபாயமாகக் கொள்ளும். இத்தகைய நிலையற்ற போகத்தைத் தரும் உபாயங்களை நாடலாகாது. சிவபெருமான் திருவடியடைதலையே நிலைத்தவிருப்பமாகக் கொள்ளவேண்டும். இதற்கான உபாயமே சரியை முதலிய தவம் எனத் தெரிந்து சிவபுண்ணியத்தைச் செய்தால் இருவினையொப்பு விளையும். இருவினையொப்பு எனப்படுவது, நல்வினை தீவினை என்னும் இருவகை வினைகளும் பொன்விலங்கும் இரும்பு விலங்கும்போல உயிர்களைப் பிறப்பு இறப்புகளில் கட்டுப்படுத்தும் தன்மையில் ஒப்பான வாறுமெனா ஆன்ம அறிவிலே விளக்கம்பெற்று அவ்விருவினைகளையும் ஒப்பநாடி உவர்த்துவிடுதலாம். அதாவது, நரகத்துக்கு அஞ்சித் தீவினை நீத்தலொப்பப் பிறப்புக்கு அஞ்சிச் சுவர்க்க இன்பங் குறித்து நன்மைகளைச் செய்யாமல் பிறவுயிர்கட்குச் செய்யவேண்டிய நன்மைகளைப் பயன்கருதாமல் தன் கடமையாக எண்ணிச் செய்வதாகும். பதி நல்வினையையும் சாலோகாதி பதங் கருதாமல் புரிதல் வேண்டுமென்பது இதனாலறியப் படும். "இன்பத்துள் இன்பம் விழையாதான்

துன்பத்துள் துன்பம் உறுதல்இலன்" என்னும் குறள் இங்குக் கருதத்தக்கது.

**மலபரிபாகம்** எனப்படுவது ஆணவமல காரியமான மோக முதலிய கெட்ட குணங்கள் ஆன்ம அறிவைவிட்டு நீங்கப் பெறுதலாகும். மலம் தனது சக்தி தேய்தற்குரிய துணைக்காரணங்கள் எல்லாவற்றோடும் கூடுதலாம்.

**சத்திநிபாதம்** என்பது திருவருட்சத்தி பதிதல் ஆம். சிவபெருமான் திருவடியை அடையவேண்டுமென்ற நாட்டம்பற்றி ஆன்ம அறிவில் சிவசத்தி பதிதலாகும் இது. ஒரு சபையில் ஒரு கல்வீழ்ந்தால் அக்கல் அங்குள்ளவர்களை அச்சபையிலிருந்து அஞ்சி ஓடச்செய்யும். "ஆயிரம் காக்கைக்கு ஓர் கல்" என்பது நீதி. "காகமானது கோடி கூடுகின்றாலுமொரு கல்லின்முன் எதிர்நிற்குமோ — கன்மமானது கோடி கூடுகின்றாலும் உன் கருணைப்பிரவாக அருளைத் தாகமாய் நாடினரை வாதிக்கவல்லதோ"என்பது தாயுமானார் கருத்தாம். இவ்வாறே ஓரான்மாவுக்கு இறையடியடைய வேண்டுமென்னுங் கருத்துப் பதிந்தால் அச்சத்திநிபாதம் அவ்வுயிர், மனைவி மக்கள் முதலிய உலக பாசப் பொருட்களை அஞ்சியோடிச் சற்குருவைத் தேடும்படி செய்யும். இருவினை ஒப்புவாய்ந்த பருவமே இவ் அருள் வீழ்ச்சிக்குரியதாகும். இதனால், இதுகாறும் உடனிருந்து உயிரினை மறைப்பாற்றலாகித் தொழில் செய்துவந்த திருவருளே வனப்பாற்றலாக (கருணைச் சத்தியாக) வாய்ந்து உடையானடி உயிரினை உய்ப்பதற்கான் திருவருட் சத்தியாகிவிடும் என்பர். இச்சத்தியானது ஆன்மாவினோடு ஒன்றிப் படிப்படியாக நலம்

செய்யும். கண்ணுடி முகங்காட்டிக் களிப்புறுத்தும். ஆசான், மாணவர்க்கு வேண்டுவன ஆக்கி அருள்புரிவன். பெற்ருேர் மக்கட்கு ஆவன ஆற்றுவர். இவ் வண்ணமே இச்சத்தி புரிவதும் நிகழும். "சேவிப்பதன் முன்னே தேவியை உத்வாகனத்தால் பாவித்து இதய கமலம் பதிவித்து அங்கு யாவர்க்கும் எட்டா இயந்திர ராசனை நீவைத்துச் சேமி நினைந்தரு தருமே" என்பது பத்தாந் திருமுறை. "பாவிக்க வேண்டா ஆண்ட பரனருள் பற்றினேர்க்கே" என்பது சிவப்பிரகாசம். இம் முறைமை நோக்கிஞல் தாயானவள் இளம் பருவத்தே தொண்டெல்லாம் செய்து துணைபுரிகிருள். பின்னர் காளையாம் பருவத்தே தொண்டினை இயற்றுவிக்கத் துணைபுரிகிருள். முதுமைக்கண்ணே தொண்டாற்றல் கண்டுகளிக்கிருள் என்பதுபோல் இயலும். "சினமருவு திரோதாயி கருணையாகித் திருந்திய சத்தி நிபாதம் நிகழும் அன்றே" என்ற சிவப்பிரகாசக்கூற்று இங்குச் சிந்திக்கலாவதாம். இந்தச் சத்திநிபாதம், மந்தரம் முதல் நான்கு வகைப்பட்டு நிகழும். இவற்றுள் தீவிரதர சத்திநிபாத நிகழ்வின் போது உயிர்கட்கு உலகப்பற்று அறவே நீங்கும். திருவருட் சத்திமுற்றும் பதியும். அப்போது உயிரானது மெய்ஞ்ஞான மயப் படும் என்க

மாசுடைய பளிங்கு தன்னிடம் வைத்த ஒளியினை மழுங்கக் காட்டுவதன்றி விளக்கமுறக் காட்டாது. அவ்வாறே இதுகாறும் மாசகலா உயிரினிடம் இறைவன் மறைந்து தோன்றிப் பாலில் நெய் போன்று நின்றருளுவன். சாமானிய ஆசிரியர்களிடம் முழு முதல்வன் கலப்பால் ஒன்ருய் நின்று பொதுவான அதிட்டான பக்கமாகி உதவுவன். மேற் சொல்லிய

தகுதியுற்ற ஆன்மாவுக்கு ஞானசாரியனாகி மக்கள் யாக்கையினை நிலைக்களமாகக்கொண்டு அருளாசானாகித் திருவருள் புரிவன் முழுமுதல்வன். இறைவன் ஞானசாரியன்பால் ஒன்றும் தன்மையில் விளங்குவன். தயிரின் விளங்கும் நெய் போல்வது இந் நிலை. ஆன்மாவுக்கு மெய்யுணர்த்தற் பொருட்டுக் கருதும் இறைவனுக்கு ஞானசாரியரே எளிய நிலைக்களமாவர். இவர்களை இடமாகக் கொண்டருள்வதை ஆவேச பக்கம் என்பர். ஆவேச பக்கம் என்பதும் சிறப்-பதிட்டானம் என்பதும் ஒன்றும். இதனில் ஆண்டவன் தாங்கப்படுவோனாகிறான். ஆனேற்றமர் நிலை இஃதுணர்த்தும். ஆசான் திருக்கோலத்தினை ஆண்டவன் மேற்கொள்ளுங்கால் ஆன்மாவினையே இருக்கையாகக் கொள்வன். நமக்கு அவ்வான்மாவின் ஆக்கையே இருக்கையெனத் தோன்றும். ஒரு கல்லின் மேல் துணியை விரித்து அதன்மீது ஒருவன் அமர்ந் தாலும் அவனைத் துணிமேல் அமர்ந்தவனாகக் கூறாமல் கல்லின்மேல் அமர்ந்தவனென்றே கூறுதல் மரபாம். இத்தகைய நிலையில் ஞானசாரியன் ஐம்பொறிகளும் ஐந்தவித்த பொறிகளாம். இவர்தம் திருமேனி ஞான ஒளியாக விளங்கும். இங்ஙனம் நம் பக்குவ நிலைக் கேற்ப முழு முதல்வன் குருமூர்த்தமாக எழுந்தருளி மும்பிணிகளையும் போக்கியருளுவன் என்பது முறையாம். இவ்வாறு மானிடயாக்கையை இடமாகக் கொண்டு முழு முதல்வன் அருள்புரிதலைச் சாதாரம் என்பர். குழந்தையைக் காணின் தாயினிடம் அன்பு வெளிப்பட்டுத் தோன்றுவது போல் ஆன்மாக்கட்கு மேற்சொன்ன பக்குவ நிலை வாய்ந்தவுடன் ஆண்டானும் ஆசானாகி வெளிப்பட்டு அருளுவன்.

தாயைவிட்டு அன்பு பிரிக்க முடியாமைபோல் ஆன்மாவினை விட்டு இறைவனையும் பிரித்தல் இயலாது. நீருக்கு நிழல் உண்டு. கண்ணாடி முதலியவற்றில் நம் நிழல் பிரிந்து தோன்றும். ஆனால் நீர் நிழல் பிரிந்து வேறாகத் தோன்றாது. இதனால் நீருக்கு நிழலில்லை எனல் கூடாது. இந்நிழல் கட்புலனுக்கு எட்டாமையால் அருவம் என்பர். ஆண்டவன் இப்படித்தான் ஆன்மாக்களிடம் பிரிப்பின்றி நிற்கிறான். ஆட்கொள்ளக் கருதும்போது பிரிந்து தோன்றுவன். என்றாலும், வேறாகாது ஒன்றாகவே நிற்பன். கற்ற செய்திகள் நெஞ்சத்துள் இருத்தலறியா வண்ணம் ஒன்றியுள்ளன. நினைக்குங்கால் தம்மிடம் பிரிந்து தோன்றும். உரைப்பின் கேட்பாரிடம் பிரிந்து தோன்றும். எழுதுங்கால் காண்பாரிடம் பிரிந்து தோன்றும். இங்ஙனம் பிரிந்து தோன்றினும் ஒற்றுமைக்கு மாறுபாடில்லை என்பது தெளிவாம். மெய்யுணர்வை ஆசானால் உணரப்பெற்ற உயிர் முதல்வன் திருவடியைத் தலைப்படும். அருமறை பகர்ந்து அருளாசான் ஆட்கொண்டபின் ஆன்மாக்கள் ஐம்புலன் வழி மீளா. பயிற்சி வயத்தால் மீள நேரினும் உண்மை உணர்ச்சியால் அவ்வழி போகாமல் நீங்கும். ஆசானிடம் ஆன்மாவுக்குளதான இறவாத அன்பு இங்ஙனம் புரிந்திடும். இதுகாறும் கூறியவாற்றால் முழு முதல்வனே குருவாக வந்து ஞானத்தை உணர்த்துவன் என்பது கருதலாகும். இதனையே இவ்வாசிரியர் இத் திருப்பாடலில் "**சகள மயம்போல் உலகில் தங்கி**" என்று குறிப்பித்தருளியுள்ளார். மான் காட்டி மான் பிடிப்பது போல்வது இச் செயலாதலால் **சகள மயம்போல்** என்றார். வெளிப்பட்டுத் தோன்றுதலைத் தெரிவித்தற்கே உடலில் தங்கி

உயிரில் தங்கி என்னுமல் உலகில் தங்கி என்றார். இதனுல் ஒன்ருய் நின்றே பிரிந்து தோன்றும் நிலை புலப்படுத்தியதாயிற்றென்க. இதனுல் சாதன அறிவு தலைப்படுதல் கூறப்பட்டது.

## நிகளமாம் ஆணவ மூலமலம் அகல ஆளுதல்

முதல்வனும் உயிரும் சித்துப்பொருளே. முதல்வனுக்கு அநாதியே மலமில்லை. அதனுல் அவனறிவு அந்தக்கரணக் கூட்டுறவினை வேண்டாமலே நிகழும். உயிருக்குச் செம்பிற் களிம்புபோல அநாதியே மலம் உளது. ஆதலால் கருவிகளோடு கூடினலன்றி அறிவு நிகழாது. கருவிகளோடு கூடாத இறையறிவு பேரறிவாம். கரணங்களோடு கூடி நிகழுமறிவு சிற்றறிவாம். ஆணவமலம், கேவல நிலையில் உயிருக்கு அறியாமையைச் செய்யும். இது இதன் சிறப்பிலக்கணம். இதன் பொது இலக்கணம் சகல நிலையில் கருவிகளோடு கூடினபோது விபரீத உணர்வைச் செய்யும். விபரீத உணர்வாவது ஒன்றைப் பிறிதொன்ருக அறிதலாம். தானல்லாத கருவிகளைத் தாளுகக் கொண்டு, கண் கண்டதை நான் கண்டேன் எனவும், காது கேட்டதை நான் கேட்டேன் எனவும் அறிதல் போல்வது விபரீதமாம். ஆணவத்தைச் சகசமலம் என்பர். இது உயிர்பால் தொன்மையிலேயே உள்ளது. இது அறிவை மறைப்பது. கண்ணிலுள்ள மாசு பொருள்களை மறைப்பதுபோலும் இச் செயல். கண், கண்ணுடியின் துணையால் பொருள்களைக் காணும். உயிரும், மாயா காரியமான உடலின் கருவிகளைக் கொண்டு உணரும். காலில் உள்ள நோய் நடக்கவொட்டாமல் தடை செய்யும். கையிலுள்ள

கோல் நடக்கத் துணைசெய்யும். இம்மாதிரியில் மலம் அறிவை மறைக்கிறது. மாயை அறிவை விளக்குவது. வினையானது (கன்மமானது) கத்தியையும் கண்ணாடியையும் முறையே தீட்டுவதாலும், துடைப்பதாலும் விளக்கமடையச் செய்வதுபோல அறிவை மாயை விளக்குவதற்குத் துணைசெய்வது. எனவே மாயையும் கன்மமும் இடைசேர் மலங்களாம். இவை இறைவனால் உயிருக்குப் பொருத்தப் படுவனவாம். இம்மலமே (மூலமலமே) நோய் நிகர்க்கும். கண்ணில் ஒளி கலவாமல் மறைப்பது படலம். படலம் என்பது ஒளியின் இல்லாமையன்று. திரையானது பொருளைக் காணவொட்டாமல் மறைப்பது. அது பொருளின் இல்லாமை ஆகாது. படலமும் திரையும் தடைகள் எனப்படும். இவ்வாறே மலம், ஆன்ம அறிவை மறைக்கின்றது. எனவே மலம் அறிவின் இல்லாமை அன்று; அறியாமையாம். அறிவின் மறைப்பே அறியாமை எனப்படும். மலமும் மாயையும் இருளும் ஒளியும் போல்வன. இதனால் மாயை என்பது மலமன்று. • மலமானது உயிரைத் தன்னகத்து மறைத்து மலமே எனக் கூறுமாறு நிற்கும். உயிர், மலத்தை அருளால் நீக்கி அறியாமையாகிய இருளும், சிற்றறிவாகிய மருளும் அகலப்பெற்று நல்லறிவாகிய தெருள்பெற்று அருளே எனும்படி நிற்கும். இதனால் உயிர், மலத்தைக் கெடுக்குமியல்பினது எனவும், மலம் பொருந்தியதனால் உயிருக்குக் கேடில்லை எனவும் அறியலாம். விறகில் தீ போல்வது மலமும் ஆவியும் ஒன்றுகை. சூரியகாந்தக் கல்லிலும் தீ உள்ளது. ஆனால் மறைந்துள்ளது. இதிலடங்கியிருக்கும் தீயானது பகலோன் கதிர் ஆகும். வெய்யிலில்

கிடக்கும் பஞ்சு எரியாது. வெங்கதிர்க் கல்லின்முன் கிடப்பின் எரிந்து சாம்பராகும். இவ்வாறே "ஆரியன் தோற்றமுன் அறும் மலங்கள்" என்பர் திருமூலர். மும்மலத்தர் விறகில் தீ நிகர்ப்பர்; ஆண்டவன் அருளால் ஆசிரியத் திருக்கோலம் கொண்டு உபதேயம் தீக்கையாதிய புரிய நன்னிலை எய்துவர். விறகும் தீயும் பொருளால் இரண்டாயினும் தோற்றத்தால் ஒன்றே யாய்க் காணப்படும். இங்ஙனமே ஆணவமும் உயிரும் பொருளால் இரண்டாயினும் தோற்றத்தால் ஒன்றேயாய்க் காணும். ஆனால் "பதி அணுகில் பாசம் நில்லா". ஆணவ மலத்தின் காரியம் ஏழு வகைப்படும். அவை, மோகம், மதம், இராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் என்பன. உயிர்கட்குப்பக்குவம் வருதற்காக ஆணவ மலத்தின் வழியாய் நின்றே திரோதான சத்தி (மறைத்தல் சத்தி) மோக முதலிய காரியங்களைச் செய்விக்கும். இது சிவ சங்கற்பத்தால் நிகழ்வதாகும். திரோதான சத்தியை ஆணவமலத்தில் அடக்கியும் கூறுவர். அநாதியே கூடியுள்ள ஆணவ மல சேட்டையால் உண்டாகும் விருப்பு வெறுப்புக்கள் **மூலகன்மம்** எனவும் சொல்லப்படும். இச்செய்தி, "செம்புறு களிம்பென" என்ற செப்பறை அகிலாண்டேசுவரி பதிகச் செய்யுளாலும் அறியப்படும். ஆணவமல காரியமான மோகம் முதலிய ஏழையும் தொகுத்துக் கூறின் இறுமாப்பு என்னலாம். இதனை "மகிழ்ச்சியின் மைந்து" என்பர். இவ் விறுமாப்பு பொருந்தக்கூடாதது. இதனாலேயே,

"இகழ்ச்சியிற் கெட்டாரை உள்ளுக தாந்தம் —
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து" என்றார்

திருவள்ளுவரும். ஆணவமலத்துக்கு இடம் உயிர்.

ஆனால் மாயை கன்மங்கட்கு இடம் இறைவன். இதனால் மாயை கன்மங்கள் உயிரை அநாதியே கூடுவனவல்ல எனத் தெரியலாகும். ஆணவமலம் ஒன்றேயாய் இருந்து, உயிர்கள்தோறும் தனித்தனி வேறு வேறு விதமாய் மறைத்து நின்று நீங்கவேண்டிய காலத்தில் நீங்குவனவாகிய சத்திகள் பலப்பல உடையது. நித்தமானது. வியாபகமானது. பசுத் துவம் முதலிய பல பெயருடையது. இங்ஙனம் உயிரினை அநாதியே அதன் வியாபகத் தன்மையினின்று அணுத் தன்மையைப் பொருந்தும் வண்ணம் செய்ய வல்ல ஆணவ நோயினை இறைவன் நீக்கியருளுகிறான். ஆணவம் என்னும் இயற்கை நோய் இருவினையாகிய செயற்கை நோயொடும் கூடும். ஆதலால், இன்ப துன்ப மருந்துகளை மாயைக் கலத்தினின்று ஆருயிராம் நோயாளிக்குக் கொடுத்துவரும் முழுமுதல்வனாகிய மருத்துவன் வினை மாசுகள் தேய்ந்த அவதரத்தில் வெளிப்பட்டு நோய் முற்றிலும் பரிகரித்து வீடடையச் செய்கிறானவன். இலவச மருத்துவக் கோட்டத்தே சேர்வித்து, நோய்நாடி, நோய் முதல்நாடி மருத்துவன் கண்ணெதிரே நின்று மருந்தாதிய சிகிச்சைகளால் முற்றி லும் நோயாளியைக் குணப்படுத்தி வீட்டுக்கனுப்புதல் போல, இறைவனும் ஞானசாரியனாகப் பக்குவ நிலை யிலே தானாகவே வெளிப்பட்டுப் பேரருள் செய் கின்றான். இங்ஙனமன்றி ஆணவநோய் அகலாது. இது குறித்தே ஆசிரியர், "**நிகளமாம் ஆணவ மூலமலம் அகல ஆண்டனன் காண்**" என்று கூறியுள்ளார் ஆவர். சிறைப்பட்டாற் போல்வது உயிர். மலம் தாரக மாக இருப்பதென்பதை **நிகளமாம்** என்ற சொல் விளக்கும். (நிகளம்—விலங்கு). வேரறுபட்டால் செடி

முழுதும் வாடி ஒழியும். அதுபோல மூலமலம் அற்ருல் துன்பமெல்லாம் அகலும் என்பது தெரியலாம்.

ஞானகுருவின் உபதேயவழியே ஞானம் நிகழும். பின்னர், அவ்வழியே உயிர் நின்று சாதனம் புரிதல் வேண்டும். அதாவது சிந்தித்துத்தெளிந்து நிட்டை கூடல் வேண்டும். முழுமுதல்வன் அருள்புரிந்த திருவடி ஞானத்தைத் துணையாகக் கொண்டு அம்முதல்வனைக் கண்ட காட்சியில் சலியாமல், பாசத்தின் நீங்கித் தன்னைக்கண்டபின் நிலைத்திருத்தல் வேண்டும். இதனைத் தெரிவிக்கும் பொருட்டே இதன்கண் ஆசிரியர். "**மாணவக! என்னுடனுய் வந்து காண்** "என்றுள்ளார். **மாணவக** ! என்றமையால் உயிர் என்றும் அடிமையே என்பதுணர்த்தப்பட்டது. **காண்** என்பதால் அநுபவம் கூறப்பட்டது. அநுபவித்தற்குரியது உ யி ர் எ ன் ப து இதனுல் விளங்கும். காட்டும் அதிகாரம் உயிருக்கு முத்திப் பேற்றினும் இல்லை என்பது வெளிப்படையாம். இதுகாறும் கூறியவாற்ருல், முழுமுதல்வனே ஆசாரிய ஞகின்ருன் என்பதும், அவனே எல்லா ஐந்தொழில் களும் புரிந்து நம்மை ஆட்டிவைக்கின்ருன் என்பதும். மூலமலநோயினை அவனே பக்குவங்கண்டு வெளிப் பட்டுப் போக்கியருளுகின்ருன் என்பதும், அவனன்றி வேறு கதியில்லை என்பதும், அந்த ஞானுசாரியன் உபதேச நெறியிலே ஒழுகுதலே சிவப்பேறளிக்கும் என்பதும் தெரியலாகும். இதனுல் ஞானமும் அது பயக்கும் ஞானுசாரியனும் இன்றியமையாதவர் என்பது தெளிவாம். இதனை, "காட்டிடும் கரணமொன்றும் இல்லையேல் காணுந்தாம் — நாட்டிய இவற்ருல் ஞானம் நணுகவும் ஒண்ணு முன்னம்—ஈட்டிய தவத்தி னலே **இறை அருளுருவாய் வந்து—கூட்டிடும்.**

இவற்றை நீக்கிக் குரைகழல் குறுகுமாறே" என்னும் சிவப்பிரகாசப் பாடலோடு ஒப்பிட்டுக் காணல் தகும். "விண்ணின்றிழிந்து" என்னும் திருமூலர் உபதேசமும் இஃதுணர்த்தும் பான்மைத்து என்னலாம்.

## செய்யுள் — 5

### ஆசாரியன் திருவருட் செயல்

ஆகமங்கள் எங்கே அறுசமயம் தானெங்கே
யோகங்கள் எங்கே உணர்வெங்கே—பாகத்து
அருள்வடிவும் தானுமாய் ஆண்டிலனேல் அந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு.

**கருத்துக்கள்**

1. ஈசன் பெருவடிவு அறிய இயலாமை.
2. அருள்வடிவு ஆளும் பெற்றியது.
3. சரியையாதி நிலைகள் அருளப்படுதல்.

**விளக்கம்**

சா்தாரணக் கடலின் மறுகரையே நம் கண்களால் கண்டறியக் கூடுமாயில்லை. கண்களின் பார்வைச் சிறுமையும் கடலின் பரப்பினது பெருமையும் இதற் குரிய காரணமாகும். இவ்வாறே இறைநிலை, சீவர்கள் உணர்ந்துணர்ந்துணரினும் உணர்தற்கியலாத பெருமை வாய்ந்ததாகும். கடலுக்குள் வாழும் மீன் அக் கடல் முழுவதையும் அறியமாறில்லை. அவ்வாறே கடவுளெல்லைக்குள் கட்டுப்பட்டுள்ள நாம் கடவுட் பெருவெளியினைக் காண்டல் அரிதாம். யாவற்றையும்

இருந்தாங்கறியும் பேரறிவுடைப் பெரும்பொருளைச் சுட்டுணர்வும், சிற்றறிவும் உடைய நாமறிய இயலாமை இயல்பேயாகும். உயிரானது இறைவனைத் தன் அறிவினால் அறியக் கூடுமென்னில், அவன் உயிர்க்கு வேறாகும் பொருளாக இருத்தல் வேண்டும். ஆனால் அவன் உயிரோடு அத்துவிதமாகக் கலந்திருப்பவ னாதலால் தன்னைவிட்டுப் பிரித்து உயிர் அவனை வேறாக அறிதல் ஒருபோதும் இயலாதென்ப. மற்றும் அவன் உயிரறிவிற்கு அப்பாற்பட்டு நுட்பமாய்க் கலந்திருப்பவனாதலால் தூலமாகிய தன்னறிவினாலே, கடந்துள்ள முதல்வனை உயிர் அறிதல் இயலாது. உயிரானது கண்ணுக்குப் பொருள்களை உணர்த்து ஆனால், அங்ஙனம் தனக்குணர்த்தும் உயிரினை )யமாட்டாது. இறைவன் உலகத்துப் பொருள் போல் அறியப்படுபவனாயின் அவனும் அழிபொரு ளாகக் கருதப்படுவன். அழிபொருள் என்பது சித்தாந்த ரீதியில் நுண்ணிய நிலையிலிருந்து பருமைநிலையாய்த் தோன்றித் திரும்பவும் நுண்ணிய நிலையை அடையும் பொருள் ஆகும். உயிர்க்கு எந்த நிலையினும் தனக்கு வியஞ்சகமாக (காட்டாக) அறிவிக்கும் ஆண்டவன் அறிவு அவசியமாக வேண்டப்படும், எனவே உயிர் களின் அறிவு விளக்க விளங்கும் இயல்புடையதாகும். ஆதலால், இறைதுணையின்றி (அருள்துணையின்றி) இறைவனை அறிதல் ஆகாது. அரிபிரமர் யாரும் அறி வரிய நிலையினன் என்னும் புராணக் கூற்றுகளும் இவ் வறிவுற வாரா இறைநிலை உணர்த்துவனவாம். உலகா தீதன் முதலிய சுருதி மொழிகளும் இக்கருத்தின என்ப. இதுபற்றியே, இறைநிலையின் பெருமையை நம் உளத்து ஓர்வித்தற்கருதி இவ்வாசிரியர், "**அந்தப் பெரு**

வடிவை யாரறிவார் பேசு" என்ருர், அந்த என்ற சொல்லால் அழுந்தி அனுபவிக்கப்படும் உள்பொருள் இறைவன் என்பதும், உயிர்கள்யாவும் அவனருளெல்லைக்குள் அடங்கியவை என்பதை நாமுணர்தற் பொருட்டுப் 'பெருவடிவை' என்ற சொற்றெடர் பெய்துள்ளார் என்பதும், மும்மூர்த்திகளாதி யாராலும் அறிய இயலாதென்பதை யாரறிவார் என்ற சொல்லாலுணர்த்தியுள்ளார் என்பதும், பாச பசுஞானங்களால் மனத்தால் வாக்கால் பேச இயலாதென்பதை அறிவுறுத்துமாறு பேசு என்ற சொல் அமைத்துள்ளார் என்பதுமாகிய பத சாரங்களை நாம் எண்ணி இன்புறுதல் கூடும்.

உயிர்கள் சுட்டுணர்வுடையன. சுட்டுணர்வு என்பது, அருள்துணை கொண்டு காணுங் காட்சியாகும். இதே அருள் துணையாக அறிவில் காணும் காட்சி சிற்றுணர்வு எனப்படும். ஆனல், அருளில் அழுந்தி உணரும் உணர்ச்சி முற்றுணர்வு எனப்படும். எனவே, உயிர்கள் உலகினை அறிவதாயினும், தம்மையே அறிவதாயினும், இறைவனை அடைவதாயினும் முழுமுதல்வனுடைய அருளே துணையாக இருந்துதவிபுரிவதை அறியலாம். ஒரு புத்தகத்தில் உள்ள விஷயத்தைப் பார்த்துப் படிப்பதுபோலும் உள்ளது சுட்டுணர்வாம். அப்பகுதியை நெட்டுருப்படுத்தி மனத்துக் கோடல் சிற்றுணர்வு எனப்படும், தானகவே பாடுதல் அல்லது எழுதுதல், பேசுதல், என்பது முற்றுணர்வுக்கு ஒப்பாவது. சுட்டுணர்வு புறத்தறிவாம். சிற்றுணர்வு அகப்புறத்தறிவாம். முற்றுணர்வு அகத்துணர்வாம். இங்ஙனம் எவ்வறிவுக்கும் இறைவனருளே வேண்டும் என்பது தெளிவாம், "கண்ணுல் யானும் கண்டேன்

காண்க''; ''இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்கா தான் தாள் வாழ்க'' என்ற வாசகங்கள் மேலுள்ள தன்மைகளை அறிவிப்பனவாகும். இத்திருவருளே சத்தி எனப்படும். சத்தி பதிதலால் சிருட்டியாதி புரிபவர் அயன் முதலோர். சத்தியே வடிவாய் நிற்றலால் சிவனுக்குச் சிருட்டி முதலிய ஆக்குவிக்கும் இயல் புளது என்ப. சிவன் எல்லாச் சத்திகளுமுடையன். சிவனே சத்திமான். இதனாலேயே போக மோக்ஷங்கள் யாவும் அரன் கருணையால் நினைந்தவாறன்றி ஆகாவாம். தக்கன்வேள்வி, பாற்கடலில் நஞ்செழுதல் இவை சிவ பெருமான் திருவுள்ளம் (திருவருள்) இன்றித் தொடங்கப்பட்ட செயல்கள் பழுதுபட்டமை வெளிப் படை. மார்க்கண்டன் வாழ்நாள் சிவன் திருவருளோடு (திருவுள்ளத்தோடு) ஒன்றுபட்டமையால் வென்று விளங்கியது. சத்தியின் வடிவு ஞானம் எனப்படும். இது உயிர்கட்கு அனுக்கிரகம் குறித்தது. இந்த ஞானமே உயிர்கட்கு மலபரிபாகம் வருதற்பொருட்டு ஐந்தொழில் செய்தலைக்குறித்துச், சிறப்புவகையால் கூறுங்கால் ஒரு பகுதியால் திரோதான சத்தியாய் நின்று அன்பு அறிவு ஆற்றல் என முத்திறப்பட்டுத் தொழிற் படும். இச்சையும் கிரியையும் ஞானத்தின் வியாபார விசேடங்களாம். எனவே பராசத்தி ரூபம் தடைசெய்யா ஞானமாம். திருவருளின் மேலான பொருள் எதுவும் உலகத்து இல்லை. நாம் நமது காரியங்களைச் செய்தற்குச் சூரியன் துணையாய் நிற்பதுபோலத் திருவருளும், புண்ணிய பாவமுதலான செயல்களைச் செய்யவும் பயனை அருந்தவும் ஒளியாகி எங்கும் நிறைந்துநிற்கும். யாரும் அருள் அறிந்து அறிவித்தே அறியமுடியும். அருளை அறியாது அவத்தைப்படுவது பாற்கடலில் வாழும்

மீன் பாலை அருந்தாது பூச்சிகளை அருந்திப் பசி தீர்ப்பது போலாம். அருளின்மீது நாட்டம்கொண்டு பேரின்பத் துக்கு வழி தேடவேண்டும். அதனைச் சிற்றின்பத்துக்கே துணையென மதித்தொழுகுதல் கூடாது. அங்ஙனம் துணைக் கொள்ளாமல் சிற்றின்புக்கே புல்லறி வாண்மை யால் பயன்படுத்திக் கொள்வரேல், "பால் கலன்மேல் பூனை கரப்பருந்த நாடும் கடன்" போல்வதாகும் என்பர். ஆதலால், இத் திருவருள் எனப்படும் முழுமுதல்வ னுடைய கருணையே ஆன்மாக்களை ஆண்டருள்கின்ற தென்னலாம். பிரிப்பற விளங்கும் சத்தியே வடிவாகக் கொண்டு பரம்பொருள் ஆளாக்கால் ஆன்மாக்கட்கு உய்யுமாறில்லை. இனி, இவ்வருள்வடிவே உயிருக்கு யாவகை நலனும் புரிந்து திருவடிக்கு அருகதைஆக்கி யுதவுகின்றதென நாமுணரல் தக்கதாம். இச்செய்தி யினை ஆசிரியர், **"பாகத்(து) அருள்வடிவும் தானுமாய் ஆண்டிலனேல் எங்கே!"** என்று கூறியருளியுள்ளார்.

ஒருவர் உள்ளக் கருத்தை அவர் வெளியிட்டுச் சொன்னாலல்லது நாமறிதல் இயலாது. அச்சொல் சைகையானும் நிகழலாம். எவ்வாறெனினும் கருத்-துடையானே தன் கருத்தினை வெளியிடவேண்டி யுள்ளமை தெரியலாம். வெளியிட்ட பின்னர் அதனைக் கேட்டு அக் கொள்கையின்னதெனத் தெரிகிறோம். இதனால் வருவது கொள்கைவிளக்கம் ஆகும். இக் கொள்கை வழியே நாம் ஒழுகுவது செறிவெனப்படும். இதனால் கொள்கைக்கும் நமக்கும் தொடர்பு விளை கின்றது. இத்தொடர்பொழுக்கத்தால் விளைவது தெளிந்த அறிவாகும். இத் தெளிந்தஞானமே கருத் துடையாற்கும் நமக்கும் இயைபு உண்மையில் ஏற்படுத்துகின்றது. இவ்வியைபு அல்லது ஒருமை

படிப்படியாக ஏற்படுமுறை இதுவாகும். கருத்து வெளியீடு ஆகமம் வெளியீடாகும். ஆகமநெறியே சமயம் எனப்படுவது. சமயநெறிநிற்றல் யோகமாகும். இவற்றால் விளைவது அறிவுதயம். இவ்வறிவே பூரணப்படுவது உணர்வு (மெய்யுணர்வு) எனப்படும். இம் மெய்யுணர்வே இன்பம் பயப்பது. இவற்றைச் சரியை கிரியை யோகம் ஞானம் எனவும் கூறுதல் ஒல்லும். இவ்வழிகளை அறிவித்து அவ்வழியில் நிறுத்தி நிலைப்படுத்தி அநுபவ இன்புக்கு ஆளாக்கிவைப்போர் ஞானகுரு ஆவர். இந்த ஞானகுரு மேற்கூறப்பட்ட இறையருள் வடிவினரேயாவர். கட்புலனுகாது உட னிருந்துகாத்து நடத்தின அருளே கண்ணுற் காணப் ப வடிவினை உடையதாகிறது. அவ்வடிவே ஞான குரவர் திருவடிவாம்.

படித்திருக்கிற வித்துவான்கள் ஞான குரவராகி-விடமாட்டார். ஏனெனில் ஆன்மாக்களின் உள்ளுறு நோயினை அறிந்து நீக்கும் திறன்மை இவர்க்கிலதாம். "அகத்துறு நோய்க்கு உள்ளினரன்றிச் சகத்தவரும் காண்பரோ தான்" என்ற திருவருட் பயன் திருக்-குறள் இஃதுணர்த்துவதாகும். ஆனல் உலகினர் இக் குருவடிவை அருள் வடிவென உணர்கிலர். படைப்பு, நிலை, ஈறு, மறைப்பு என்னும் நான்கினையும் தோன்ருது செய்துவந்தாற்போலவே அருள் என்னும் தொழிலினையும் தான் பண்ணுதது போலப் பண்ணும்படி மானுடத் திருமேனி என்னும் அங்கியால் மறைத்துக் கொண்டுவந்து இக்குருவடிவம் உண்மைப் பொருளை இருவினையொப்பில் நிகழ்த்துகின்றது. நிலையாத காய வாழ்க்கையும், மலமறைப்புற்ற உணர்வும், ஞானம் என்னும் செல்வமும் இல்லார்,

அறிவுமயமாகிய அருளும், அவ்வருளாலமைந்த தேசிக வடிவும் ஆகிய உண்மைகளை ஒருபோதும் உணரார். இதனால் அகளமாய்நிறைந்த அருளே குருவடிவு தரிப்ப தென்பது உறுதியாம். யாதொரு நூற்பொருளும் குரவரையின்றி உணரப்படாது. ஆசாரியனால் அல்லது நமது பாசம் அகலாது. விடம் தீண்டித் தலை மண்டைகொண்டு கிடக்கையில் கீரியைக் கொண்டு வந்து கழுத்திலே கட்டினாலும் விடம் நீங்காது. ஆனால், உண்மையான பிடாரகன் வந்து தன்னையும் கீரியாகப் பாவித்து அவனையும் கீரியாகப் பாவிக்கவே விடம் நீங்கும். இங்ஙனமே, ஆசாரியனும் சிவ சொரூபமாய் இருந்து சீடனையும் சிவசொரூபமாக ஞானக்கண்ணினால் பார்த்தலும் அந்தகார மலமாயாதி கன்மங்கள் மாயும். சகலருக்கு அவர்தம் பக்குவ நிலையிலே அறுவகைத் தீட்சையினாலே மும்மலத்தை யும் நீக்கிக் கிரமமாகச் சிவஞானத்தினைக் கருத்தா பிரகாசிக்கச் செய்வன். மந்திரம் முதல்கலை ஈறாகிய ஆறத்துவாவும் கடந்த வீட்டு நெறியினை, நிறைந்த ஞானத்தையுடைய இறைவனே குருவுருக்கொண்டு வராதுபோனால் அறியவல்லார் யாருமிலர். சூரியனில்லாமல் சூரியகாந்தக் கல்லினிடத்து நெருப்புத் தோன்றாமை இதற்குவமையாம். ஆதலால், செந்நெறிக்குரிய சீலம், நோன்பு, செறிவு, அறிவு ஆகிய நான்கும் குருவருளால் விளைவன என ஓர்தல் கூடும். இவை ஆகமங்களாலும், சமயங்களாலும், யோகங்களாலும், உணர்வாலும் இறைவனால் உணர்த்தப்படுவன என்க. உயிர்கள் நல்வழி அறிந்து நாடுதற்பொருட்டு இறைவன் தமது கருத்தினைக் கருணையால் தெரிவிக்கின்றனன்.

நூல்கள் பொதுவாகப் பகுப்பின் உலகநூல் வீட்டுநூல் என இருபிரிவினவாகும். வேதாகமங்கள் வீடுபேறு பற்றி விள்ளுவன. இவற்றுள் வேதங் கூறுவன நாம் அறிதற்குரியன. வேதம், அறம் பொருள் இன்பம் வீடு பற்றி அறியத் துணையாவது. ஆகமம் உணர்வுநூல் ஆகும். அதாவது அறிந்ததை அநுபவிக்கத் துணை செய்வது. வடமொழி அறியாதாரும் திருக்குறள், நால்வர் தமிழ் இவற்றை வேதமாகக் கொள்ளலாகும். திருமந்திரம், மெய்கண்டார்நூல், இவற்றை ஆகம மாகக் கோடல் தகும். ஆகமம், பாச, பசு, பதிபற்றி அறிவிக்கும்நூல் என்பர். அன்றி மலத்தை நாசம் பண்ணி ஞானத்தை உதிப்பித்து, முத்தியைத் தரும் நூல் எனவும் பொருளுரைப்பர். மேலும், ஆன்மாக் கட்கு வேண்டும் மெய்யுணர்வை நிறைய அளிப்பது எனவும் சொற்பொருள் உரைப்பர். எவ்வாறு கொள்ளினும், பதி—பசு—பாசம் என்னும் முப்பொரு ளுண்மையை உணர்த்தும் நூல் ஆகமம் என்பது தெளிவாம். எக்காலத்தும், எத்தேயத்தும் பெரி யோர்கள் விரும்புவது மெய்யுணர்வுக்கல்வியாகிய முப் பொருள் உண்மையே. இதனை, "வேண்டியகல்வி யாண்டும் மூன்று இறவாது" எனத் தொல்காப்பியம் கூறும். சிவாகமங்கள் இருபத்தெட்டென்ப. திருமூலர் ஒன்பது ஆகமங்களைக் குறிக்கின்றார். "பெற்றநல் ஆகமம்" என்னும் திருமந்திரப்பாடல் இவற்றை வெளியிடும். எதனைக்கற்றாலும், "அண்ணல் அறைந்த அறிவு அறியாவிடின்"......நீர்மேல் எழுத்தாம். இறை வனே ஆகமங்களை அருளியவன். "அண்ணல் அருளால் அருளும் சிவாகமம்—எண்ணில் இருபத்தெண்கோடி நூறாயிரம்—விண்ணவர் ஈசன் விழுப்பம் உரைத்தனர்"

என்பர் திருமூலர். ஆகமங்களைப் பின்பற்றிச் சமயங்கள் கொள்கைகள் நிலவுவன. இவற்றைத் தொகுத்து அறுசமயம் என்பர். இவற்றின் விரிவினைத் திருவுந்தியார்—தெளிவுக்கட்டுரை 113 ஆம் பக்கத்திற் காணலாம். தற்காலத்தே பிரசித்தமாக விளங்குவனவும் ஆறு சமயங்கள் என்னலாம். அவை, சைவம், வைணவம், பவுத்தம், சமணம், கிறிஸ்தவம், மகமதியம் என்பனவாம். எல்லாச் சமயங்களும் முத்தி நெறியின் சோபானங்களே. இவ்வாறு கொள்ளின் சமயப் பிணக்குக்குக் காரணமிராது. சித்தாந்தசைவம் அனைத்-துச் சமயசாரங்களையும் தன்னகத்தேகொண்டு மிளிர்வதென்பது அவ்வாகம மறிந் தோர்க்கு நன்குவிளங்கும். யோக நெறிகளும் முத்திக்குப் படிகளேயாம். ஆதார யோகம்—நிராதாரயோகம் என யோகநிலைகள் வகுத்துக் கூறப்படும். மனமடங்க யோகநிலை உதவுவது. இதன் விரிவினையும் மேற்குறித்த நூலில் 59, 60 ஆம் பக்கங்களில் காணலாகும். மெய்யுணர்வே (ஞானமே) முத்திக்கு வித்தாம். கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டைகூடல் ஆகிய நெறிகளில் ஏறிச் செல்லச் செல்ல சீவன்முத்தராகி உடலூழ்க்கழிவின் பின்னர் சிவானந்தப்பேறெய்துவர் சீரியர்.

ஆகமமாதி யாவும் சிவனருளால் வந்தனவேயாம். இவையின்றேல், அடர்ந்த காட்டில், இரவில் இருளில், கண்ணில்லா ஊமன் வழியறியாது திரிவதுபோன்ற நிலைமை நமக்கு நிகழ்வுறும். இறைவன், தவத்திற் சிறந்த பெரியார் வாயிலாகவும் அருள்நூலுண்மைகளை அறிவுறுத்துவன். ஆதலால், இறைவனே நல்லாசான். ஞானாசாரியனே நல்லிறைவன் என்க. "ஓரால் நீழல் ஒண்கழல் இரண்டும் — முப்பொழுது ஏத்திய

நால்வர்க்கு ஒளிநெறி காட்டினை" என்பது ஆளுடைய பிள்ளையார் திருவாக்காகும். மந்திர நெறியே அறிய விரும்புவோர்க்கும் அவ்விறைவனே அருள் புரிகின்ருன் என்பதை, "மன்னுமாமலை மகேந்திரமதனில் சொன்ன ஆகமம் தோற்றுவித்தருளியும்" என்னும் திருவாசகத்தாலறியலாம். இங்ஙனம் எல்லா ஞானியரும் ஒருபடித்தாகக் கூறும் இவ்வுண்மையினை நமக்கு அறிவுறுத்தி ஞானசாரியரடிக்கண் ஆற்றுப்படுத்த எண்ணியே இந்நூலாசிரியர், "**ஆகமங்கள் எங்கே அறுசமயந்தான் எங்கே—யோகங்கள் எங்கே உணர் வெங்கே......ஆண்டிலனேல்**" என்று எடுத்து விளக்கியுள்ளார். இதனுல் நாம் அனைவரும் பிறவிப் பெரும் பயனுக மலர்மிசை ஏகினுன் மாணடி சேர்ந்து, இடும்பையகன்று, புகழ்புரிந்து, ஒழுக்கநெறி நின்று, மனக்கவலை மாற்றி அந்தணன் தாள்சேர்ந்து பேரின்பம் துய்த்து வாழவேண்டுமென்பது பெறப்பட்டது. இவ்வாறன்றிக் கற்றதனுல் ஆய பயன் ஏதுமின்ரும். பொறிவாயில் ஐந்தவித்தான் புகழே மன்னுக !

## செய்யுள் — 6

### சாத்திர ஞானம்

**சாத்திரத்தை ஓதினர்க்குச் சற்குருவின் தன்வசன**
**மாத்திரத்தே வாய்த்தவளம் வந்துறுமே—ஆர்த்தகடல்**
**தண்ணீர் குடித்தவர்க்குத் தாகம் தணிந்திடுமோ**
**தெண்ணீர்மை யாய்இதனைச் செப்பு.**

**கருத்துக்கள்**

1. நூல்களால் வருவது அபரஞானம்.
2. ஆசாரியனுல் வருவது பரஞானம்.

**விளக்கம்**

சிற்றின்பப் பயன் எத்தகையதெனக் கீழ்ப்பட்ட பல பிறவிகளால் கண்டுணர்ந்து, அதனை நெறிப்படுத்தி உவர்த்து நீக்கிப் பேரின்பப் பிறவாநெறியினை எய்து தற்பொருட்டே இந்த மக்கட் பிறப்பு நம்மனோர்க்கு இறையருளால் தரப்பட்டுள்ளது. இன்ப துன்பம்; நன்மை தீமை; சிறுமை பெருமை; பொய்ம்மை, மெய்ம்மை ஆதியவற்றைக் கூர்ந்துணரும் பகுத்தறிவும் இம்மக்கட் பிறப்பினர்க்கே அருளப்பட்டுள்ளது. ஆத லால், இம்மாண்புடை மக்களாவார் தம் அறிவினைத் தெளியவைத்துக் கொள்ளுவதே செய்தக்க முயற்சி யாக நாடுதல் வேண்டும். எனவே உணர்வுக்கு வாய்ப் பாகவே மொழிகளும் நூல்களும் உதவப்பட்டுள. மொழிகளையும், நூல்களையும் துணைகளாகக்கொண்டு தாமெடுத்துள்ள இப்பிறப்பிலேயே அன்பு அறிவுகளை வளர்த்துப் பேரின்பப் பெருவாழ்வுறல் தக்கது. இவ்வாறன்றி, மொழிகளையும் நூல்களையும் மோத விட்டு வாதங்கிளப்பி வந்த காரியத்தை மறந்து இறந் தொழிதல் நேரிதன்ரும். மொழித்திறனும், நூற்கல்வி யும் எப் பிறப்புகட்கும் வாய்த்தில. நமக்கே இவ் வாய்ப்புண்டு. மொழியையும் நூலையும் ஒன்றுபடுக் கூறினுல் கல்வி என்னலாம். எனவே, நமக்குத் தனு கரணபுவன போகங்களாகிய நிலையில் செல்வம் ஒரு புறமும், கல்வியாகிய நிலைபேறுடைய செல்வம் ஒரு புறமுமாக அமைந்துள்ளன. இவற்றுள் கல்வியே போற்றப்படல் வேண்டும். இதனைப் போற்றற்கண் சாதனமாவனவே பிற செல்வங்கள். இதனாலேயே கல்வி சிறந்த செல்வம் எனப்பட்டது. "கேடில் விழுச் செல்வம் கல்வி ஒருவற்கு—மாடல்ல மற்றை யவை"

என்பது திருக்குறள். மற்றையவை எனப்படுவன தனு கரண புவன போகங்களாம். மாடுஎன்ற சொல் லால் மற்றையவை சிறந்த பேறல்ல என்பதுணர்த்தப் பட்டது. மேலும் மாடு என்றசொல் பக்கம் என்னும் பொருளுமுடையது. இப்பொருளைக் கொண்டு நோக்கின் கல்வி ஒன்றே இறப்பினும் நம்பக்கத்திருந் துதவுவது என்றும், மற்றையவை நம்மைவிட்டு இறப்பின்காலை நீங்குவன என்பதும் தெளியலாம். இதனையே "ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு-எழுமையும் ஏமாப்பு உடைத்து" என்று பின்னும் வலியுறுத்திக் கூறப்பட்டது நாயனாரால். எனவே விழுப்பம் என்பது எப்போதும் நீங்காமைப் பெருமை என்பது தெரியலாம். கண்களில்லையேல் காண இயலாது. வழிதெரியாது. இருளில் மூழ்கிக்கிடந்து இன்னல்பல எய்தல் ஒருதலை. அவ்வாறே, கல்வி கற்கவில்லையேல், அறிவு விளையாது. சன்மார்க்கம் தெரியவாராது. அறியாமையுட்பட்டு நரகத்துக்கே வித்தாகவேண்டி வரும். கல்வி பொதுவாக நோக்கின் ஒழுகலாறு உணர்த்தும் பெற்றியதாகும். ஒழுக்கமே கல்வியாலாம் விழுச்செல்வம். கல்வியின் உடன்விளைவு அறிவாகும். இவ்வறிவின் பயனே ஒழுக்கம். கல்வி, பெரும்பான்மை நூல்களைக் கற்றலாலும், கேட்டலா-லும் விளையும். நூல்கள் முற்கூறிய மாடல்லா உடல் உறுப்பு உலகு ஊண்களுக்கே உதவுவனவும், உயிருக்கே அறிவு விளைத்தற்கண் பயன்படுவனவும் என இருவகையுள்ளடங்கும். இவற்றுள் முற்கூறுந் திறத்தனவற்றை உலகநூல் என்று வழங்குவர் நீதி நூலோர். இவற்றின் இழிபினை, "உலகநூல் ஓதுவ தெல்லாம் கலகல கூவும் துணையல்லால் கொண்டு

தடுமாற்றம் போகும் துணையறிவாரில்" "கல்லாத பேர்களே நல்லவர்கள்......எவரையும் மருட்டிவிட வகைவந்த வித்தை என்? முத்தி தருமோ?" என்ற பெரியார்கள் பொன்னுரைகள் தெரிவிக்கும். ஆகவே, உயிர்க்குறுதி பயக்கும் நூல்களே ஓதத் தக்கனவாம். இதனையே, "நீரொழியப் பாலுண் குருகின் தெரிந்து" என்ற இடம் உணர்த்தும். இதனால் கல்வி என்பது சிறப்பு முறையால் ஞான நூல்களையே குறிக்குமெனல் விளங்கும். யாவர்க்கும் அவரவர் மொழியானியன்ற வேதாகமங்களே ஞானநூல்கள் எனப்படும். இவற்றுள் வேதத்தைப் பொது எனவும் ஆகமத்தைச் சிறப்-பெனவும் ஓதுப. இவற்றை ஓதுவதால் வருவது கலைஞானம். இதனை அபரஞானம் என்றும் கூறுவர். அறிவு இருதிறப்படும்; அவை ஆராய்ச்சியறிவு, அநுபவ அறிவு என்பன. இவற்றுள் அபரஞானத்தால் கிடைப்பது ஆராய்ச்சியறிவாகும். ஆராய்ச்சிகளின் முடிபாகக் கிடைப்பதே முப்பொருள் உண்மையுணர்வு. இவ்வளவும் நூல்களால் வருதலால் அபரஞானமெனப்படும். எனவே அபரஞானம் நூலறிவாகும். இந்த நூலறிவால் சிவபத்தி விளையும். அங்ஙனம் விளையுமாயின் இதனைச் "சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்" என்று கூறிச் சிறப்பிப்பர். தலைவனையே நினைந்துருகும் தலைவிபோல இந்த அன்பு நிலை தோன்றிப் பெருகுமாதலால் "திருப் பெருகு" எனப்பட்டது. இதனை "உவமையிலாக் கலைஞானம்" எனவும் ஓதுப. இந்த அபரஞானமொன்றே போதுமென ஒரு சிலர் கருதுவர். சிவப் பேற்றிற்கு இஃதொன்றே காரணமாகிவிடாது. இதனையே சாலுமென மதிப்பது, கையின்கண் உள்ள

கோலையே பெரிதென வழித்துணையாக நம்பி, முகத்திரு கண்களையும் கெடுத்துக்கொண்ட கதையை நிகர்க்கும். உண்மையில் விழித்துணையே வழித்துணையாம். இவ்வாறே, அபரஞானம் உயிருக்கு வீடு பேறெய்துதற்கான தகுதி (அதிகாரம்) விளக்கும் கருவியாகும். இதுவே வீடு பேற்றினை நல்கிவிடாது. இதனை, "நூலடைந்த கொள்கையாலே நுன்னடி கூடுதற்கு மாலடைந்த நால்வர்" என்ற இடம் புலப்படுத்தும். இதனையே, "மலைவு இல்லார்" என்ற சாத்திரச் சொற்றொடரும் சாற்றும். இவையொன்றுங் கருதிப் பாராமே நூலறிவே அமையும் என்பார் வீடு பேறெய்தல் இயலாதென்பதைப் புலப்படுத்தற் பொருட்டே, தாகந் தணியவிரும்புமவன், கடலிலுள்ள உவர்நீரை எவ்வளவுதான் பருகினாலும் நீர் வேட்கை தணியாது என்ற உவமையால் இவ்வாசிரியர் விளக்கியுள்ளார். "**ஆர்த்தகடல் தண்ணீர் குடித்தவர்க்குத் தாகம் தணிந்திடுமோ**" என்பது இவ்வுவமையாம். இதே நீர், பருகுவானது வேட்கை தணித்தற் பொருட்டு மேகத்தால் உவர்நீக்கித் தரப்படின் ஒரு சிறிது பருகிய மாத்திரையானே தாகத்தைத் தணித்தின்பூட்டுகிறது. இவ்வாறே, முற்கூறிய அபரஞானத்தால் எழுந்த வேட்கையின் பின்னே ஒழுக்க முதிர்வின் போது ஆசாரியன் எழுந்தருளி அநுபூதி ஞானத்தை விளக்கின்றுவன். இது பரஞானம் எனப்படும். இந்தப்பரஞானமே, "பவமதனை அற மாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம்" எனப் புகலப் படுவது. இது மெய்ஞ்ஞானம் எனவும் சிவஞானம், பதிஞானம் எனவும் பலபடக் கூறப்படும். இஃது ஆராய்ச்சியின் விளைவன்று; ஆசாரியனுபதேயத்தால்

விளைவது. ஆதலால், உணர்வரிய மெய்ஞ்ஞானம் எனப்படும். இவ்விரண்டுமுடையார் ஞானத்தின் திருவுருவாகவே விளங்குவர். நாம் அறிந்தொழுகுமாறு தானனுட்டித்துக் காட்டலால் **ஆசாரியன்** எனப்படுகின்றான். நம் பக்கல் வந்து உண்மை தெளியக் காட்டலால் அவனுரை **உபதேசம்** எனப்படுகின்றது. இச்செய்தி "மாலடைந்த நால்வர் கேட்க, நல்கிய நல்அறத்தை—ஆலடைந்த நீழல்மேவி அருமறை சொன்ன தென்னே!—சேலடைந்த தண்கழனிச் சேய்ஞ்ஞலூர் மேயவனே" என்ற திருப்பாட்டால் உணரப்படும். இவ்வாசிரியக்கோலம் அருட்கோலம் எனப்படும். நூலறிவு நம் உள்ளத்தே அன்பைவிளைப்பது. இவ்வன்பு ஆசாரியன் (இறைவன்) அருளுக்கு நம்மை இலக்காக்குகின்றது. இதனாலேயே "அருளென்னும் அன்பீன்குழவி" என அன்பருளொற்றுமை கூறப்பட்டுள்ளது. ஆன்ம உறுதிக்குரிய எல்லாச் செய்திகளையும் கூறுவது சாத்திரம். இது தருவது அபரஞானமாகிய சிவஞானம். இதன்பின்னர் இவ்வாராய்ச்சியறிவு அநுபவ அறிவாக ஆசாரியனாலாக்கப்படுகின்றது. இதனால் விளைவது தெளிந்த அநுபவம். இதனை ஆசாரியன் சின் முத்திரைகாட்டியும், ஆப்தவாசகம் செவிக்கணூட்டியும் எளிதில் விளைத்தருளுகின்றான். மரத்தை வளர்ப்பதற்குப் பயன் பழம்கொண்டு புசித்தலேயாம். இவ்வாறே கல்வியின் பயன் சிவபோகம் பெறுதலே ஆம். இதனையே, கம்ப நாடனும், "ஏகம் முதற்கல்வி" என்ற பாட்டின் இறுதியில் "போகங்கனி ஒன்று பழுத்தது போலும்" என்ற தொடரால் விளக்கியுள்ளானவன். இதுகாறும் கூறியவற்றால், சாத்திரஞானம் மட்டில் இருப்பது சாலாது; சற்குருவின் வசன

விளைவாலுண்டாகும் வளமான அநுபூதிஞானம் இன்றி யமையாததென நாம் உணர்தல்தகும். இவ்விடயமே இச்செய்யுட்கண் "சாத்திரத்தை ஓதினர்க்குச் சற்குரு வின் தன்வசன மாத்திரத்தே வாய்த்தவளம் வந் துறுமே" என்ற இடம் புலனுறுத்தும். ஈண்டு வசன மென்றது மஹாவாக்கிய மெனப்படுவது. இஃது ஐந் தெழுத்து ஓதுமுறையும் நிற்குமுறையும் ஒன்றுதல் எனப்படும். இதன் மேலான செல்வம் பிறிதில்லை யாதலால் வாய்த்தவளம் எனப்பட்டது. நூலறிவுக்குப் பலகாலம் செலவாவதை "வசனமாத்திரத்தே......... வந்துறும்" என்பது புலப்படுத்தும். இவ்வேற்பாடே நியதியென நாம் தெரிந்துகோடற் பொருட்டே "தெண் ணீர் மையாய் இதனைச் செப்பு" எனப்பட்டுள்ளது. இஃது தெளிந்த அறிவினர் எல்லாரும் ஒப்ப முடிந்த முடிபு (சித்தாந்தம்) என்பதுணர்ந்தற் பொருட்டுக் கூறப்பட்டுள்ளதென்னலாம். ஆசாரியனை வழிபடாத செருக்குடையார்க்கு இவ்வுண்மை புலப்படாதென்ப தைத் "தெண்ணீர்மையாய்" என்பது தெரிவுறுத்தும். வரும் என்னுமல் வந்துறும் என்றமை மேற்சொன்ன உண்மையின் துணிவு புலப்படுத்தியவாறும். இங்ஙனம்

என்பதைத் திருவுந்தியார் நூலின் இரண்டாம் செய்யுள் செப்பும். இதனல் நாமனைவரும் வாழ்நாளை அவம் போகவிடாமல் ஞான நூல்களை ஓதி அன்பையும் அறிவையும் விரிவுபடுத்தி ஆசாரியன் திருவருளுக்கு இலக்காகி அநுபூதிமான்களாகவும் திகழவேண்டுமென்பதே இந்நூலுடையார் பெரு விருப்பென்க ! ஞானப் பனுவல்கள் பல்குக ! ஞான குரவர் திருவருள் மல்குக !

## செய்யுள் — 7

### குரு திருமேனி மாண்பு

இன்று பசுவின் மலமன்றே இவ்வுலகில்
நின்ற மலமனைத்தும் நீக்குவதிங்—கென்றால்
உருவுடையா னன்றே உருவழியப் பாயும்
உருவருள வல்லா னுரை.

**கருத்து**

1. இறையருள் குரு திருமேனியுள் மன்னுதல்.
2. மல நீக்கம்.

**விளக்கம்**

உலகில் ஓர் இடத்தின் தூய்மையின்மையைப் போக்குதற்குப் பசுவின் மலத்தையே பயன்படுத்துகின்றனர். பசுவின் மலத்தில் தூய்மை விளைக்கும் பண்புகள் இருத்தலையும், நுண்ணிய நோய்க் கிருமிகளைக் கொல்லும் திறனும் உள்ளன என்று ஆய்வறிஞர் கூறுகின்றனர். எனவே, நோய்க் கிடஞ்செய்யும் கிருமிகளைக் கொன்று தூய்மையை விளைக்கும் இந்தப் பண்பினை நாம் தனித்து நம் கண்களாற் காண இயல்வதில்லை. பண்பு தனியே காணப்படும் இயல்பினதன்று. பண்பு என்பது பண்பியாலன்றி அறிதரப்படுவதில்லை. எனவே, மேற் கூறப்பட்ட தூய்மையுறுத்தும் தன்மை பசுவின் மலத்தின் வடிவாக நின்றே செயலாற்றுகின்றது. அதன் செயல் மல நீக்கம் செய்வது. இச் செயல் பசுவின் மலத்திலே நிலைத்துச் செய்கின்றமை கண்கூடாம். எந்தக் கிருமி நாசனியின் இயல்பும்

இத்தகையதே. ஆதலால், மலநீக்கப் பண்பு, தான் மலத்தினை ஆதாரமாகக் கொண்டே, தானல்லா மலங்களைப் பரிகரித்துத் தூய்மையும் தருகின்றது என்பது தேற்றம். இதனாலேயே பசுவினது பெற்றமும் புலப்படுகின்றது. பசியாற்றி இன்புறுத்துதற்கான பாலையும் பசு, தருகிறது. மல நீக்கத்துக்கான மல வடிவுள்ள தூய்தன்மைப் பொருட்களையும் அப்பசுவே அளிக்கின்றது. இவ்விரு செய்கைகளும் பசுவின் அருட் செய்கையேயாம். இதனை " விடுநில மருங்கின் படுபுல் ஆர்ந்து, நெடுநில மருங்கின் மக்கட்கெல்லாம், பிறந்தநாள் தொட்டும் சிறந்ததன் தீம்பால்——அறந்தரு நெஞ்சோடு அருள் சுரந்தூட்டும்" என்றுரைப்பர் சீத்தலைச் சாத்தனாரும். இதனை இப் பாடலின் முதலிரு வரிகள் தெரிவித்தல் காணலாம்.

இவ்வுலகில் நின்ற பசுமலமல்லாத ஏனை மலங்கள் போலும் நம் இடத்தே ஆணவமாதி மலங்கள் உள. இவற்றுள் ஆணவமே மூலமலமாம். இப்படியொரு மலமிருந்து நம்மை விபரீதப்படுத்துகின்றது; இதனை அநுபவத்தால் ஒரு சிறிது தெரிதற்குதவப்பட்டதே மாயை. இதனைச் சரிவரத் துய்த்து நல் நெறி செல்ல வொட்டாதபடி இருவினைகளின் மூலம் செய்து விடுகிறது. இம்மாயை கன்மங்களைக் கொண்டு படிப் படியாகச் சிவநெறிக்குச் செல்லும் தகுதி நமக்கு உண்டாம் வண்ணம் இறைவன் உடனிருந்து செய்துதவுகின்றான். உயிர்களின் படிப்படியான பக்குவ நிலையில் இருவினை ஒப்பாகிய நேரிட்டவழி இறைவன் உயிர்கள் முழு விடுதலை எய்தித் தமது திருவடியின்பத்தே அழுந்துகைப்பொருட்டு மானிடத் திருமேனியினை ஆதாரமாகக் கொண்டு தேசிக

மூர்த்தியாக எதிர்ப்படுகின்றான். அங்ஙனம் இறைவன் கொள்ளும் திருவுருவினை நம்போன்ற சாமானிய வடிவமாக எண்ணலாகாது. இறைவனுடைய பேரறிவு அதிட்டிக்கப்படும் தூய ஆன்மாவினையே தன் உடலாகக் கொண்டு வெளிப்படுகின்றது. இதனால் அதிட்டிக்கப்பட்ட ஆன்மா அருட்கோலத்ததாகின்றது. இங்ஙனம் மேற்கொண்ட மானிடத் திருவுருவம் முழு முதல்வன் அருள் வடிவேயாம். வினையாலமைந்துள்ள உடலினையுடைய உயிர்கட்கு அநாதியாகவுள்ள மூல மலம் மகல இத் திருவுருவே பயன்படுகின்றது. இச் சாதார ரூபத்தினால் மல நீக்கத்துக்கான இறைமை நிறைந்துள்ளது. ஆதலால், இவ்விறைமைக் கொள்கலமாகிய திருமேனியை நாம் சாதாரணருடைய வினையுடம்புபோன்று ஒருபோதும் கருதலாகாது. பசுவின் தூய்மையினைத் தன்னுட் கொண்டுள்ள பசுமலம் பிற மலங்களை அகற்றுதல் போலவே இறைமைப் பெருமையினைத் தன்னகத்தே முழுதும் கொண்டுள்ள குருமூர்த்தமெனப்படும் சாதார ரூபம், தன் முற்பட்ட பக்குவ சீடனின் மலமனைத்தும் நிக்கையாதிகளால் போக்கித் தூய்மையாக்கிச் சிவ நெறியே செலுத்துகின்றது. இங்ஙனம் இறைவன் புரிந்தருளாவிடில் வேறு வழி உயிர்க்கு இன்றாம். சுத்த ஞானத்தைப் பிரகாசிப்பிக்க வல்ல சாமர்த்தியத்தினை உடைய இத் திருவுருவினைச் சிவமாகவே கொண்டு நாம் மலமகன்று உய்திபெற வேண்டும். இங்ஙனம் புரிவதால் பிறப்புகள் நீங்கும். ஞானம் பிரகாசிக்கும். இதனையே, "**உருவுடையா னன்றே உருவழியப் பாயும் உருவருள வல்லான்**" என்ற தொடரால் இவ்வாசிரியர் அருளியுள்ளார். எந்த

உருவும் இறைவற்கு உடைமையாதல் பற்றி **உருவுடையான்** என்றார். "**பாயும்**" என்னும் பதத்தால் மலநீக்க விரைவு புலப்படுத்தவாறாயிற்று என்க. உரை என்ற சொல், இந் நெறியே துணிவாம் என்பதுணர்த்துகின்றது.

---

## செய்யுள் — 8

### ஆசானருட் பிரசாதம்

கண்டத்தைக் கொண்டு கரும முடித்தவரே
அண்டத்தி னப்புறத்த தென்றதே—அண்டத்தின்
அப்புறமும் இப்புறமும் ஆரறிவும் சென்றறியும்
எப்புறமும் கண்டவர்கள் இன்று.

**கருத்துக்கள்**

1. முப்பொருளுண்மை உணர்தல்.
2. கன்மங்களைக் களைதல்.
3. ஞானசொரூப இயல்பு அறிதல்.
4. ஞான ஐக்கிய நிலை.
5. யாவும் உணர்நிலை.

**விளக்கம்**

இந்நூலாசிரியர், தமதாசிரியர் வழிநின்ற பரிபூரண ஞானியாதலால், தமது ஆசிரியர் உபதேசத்தையே யன்றி அவர் சொல்லினையும் தாம் பின்பற்றுதல் நமக் கறிவிப்பதன்பொருட்டு, "பொன்னே போல் போற்றுவம்" என்னும் இலக்கணத்துக்கு இலக்காகும்படித் திருவுந்தியார் நூலில் உள்ள "**கண்டத்தைக் கொண்டு**" என்ற சொற்றொடரைக் கொண்டே

இப் பாடலைத் தொடங்கியுள்ள முறைமை நாமறியத் தக்கது. இதுவே கருமம் முடித்தற்காம் உபாயமாதல் புலப்படும். மற்றும், திருவுந்தியார் நூலின் மூன்றும் பாடலின் விளக்கமாகத் திருவுந்தியார்—தெளிவுக் கட்டுரை நூலில் கூறப்பட்டுள்ள செய்திகளும் ஈண்டைக்கு ஏற்பனவாகும்.

கண், சூரியன் ஒளியால் வழியின் நன்மை தீமைகளை அறிந்து உடம்பை நல்ல வழியில் செல்ல வைக்கிறது. பொருள்களையும் அவற்றின் தோற்றமாகிய கண்டு இது வேண்டுவது இது வேண்டாதது என உணரச் செய்கிறது. கண் சொன்ன வழியையும், பொருளையுமே உடம்பு பற்றுகின்றது. அங்ஙனம் செய்வதால், உடம்பு ஊறு எதுவும் எய்தாமல் நல்லன உடுத்தும், உண்டும், அணிந்தும் இன்பம் துய்க்கின்றது

உடம்பிலுள்ள சிறந்த உறுப்பாகிய கண்ணின் வழியே உடம்பு நின்று நலம் துய்ப்பது போலவே நம் உயிரும் ஒழுகவேண்டியுள்ளது. உயிர்கள் அறிய வேண்டிய பொருள்கள் மூன்றென்ப அவை, பதி-பசு-பாசம் என்பன. இம்மூன்றும் என்றும் உள்ள மெய்ப் பொருள்களே. காணப்பட்ட உலகங்கொண்டு காணப்படாத கடவுளை உணர்தல் வேண்டும். அப்பதியே முழுமுதல் ஆவர். "தோற்றியதிதியே" எனவும், "ஒடுங்கி உளதாம்" எனவும் இவ்வுண்மை புலப் படுத்தப்பட்டுள்ளது இச்சிவபரமே ஐந்தொழிலும் இயற்றுவித்து எவற்றையும் இயக்குகின்றானவன். இவன் அநாதியே பூரணமானவன். நமக்குத் தோன்றாமல் நிற்பவன். ஏனெனில், ஆண்டவன் அறியுமுயிர்

களுடன் ஒன்றாயிருப்பவன். அவனோடு உடங்கியைந் தழுந்தின் உணரப்படுபவன். உயிர்க்கு உள்நின்று உணர்திவருமிவனே வெளிப்பட்டுக் குருவாய் எழுந் தருளுவன். அப்போது உபதேசம் அருளுவன். அதன் பின்னர், உயிரின் இயல்பு இன்னதென்பதும், ஆண்டவனே உயிரின் உண்மை உறவினன் என்பதும், ஆணவப்பகையும் புலனாகும்.

**உயிர்**, இறைவனாகிய உடையானையும், பாசமாகிய உடைமையையும் அழுந்தியறியும் இயல்புடையது. உயிரறிவு உடலோடு பொருந்தின் சுட்டறிவாய் நிற்கும். பின்னர் யான் அறிந்தேன் என்னும் நிலையில் சிற்றறிவுடையதாய் நிற்கும். இறைவன் திருவருளைப் பற்றின் முற்றறிவாக அடங்கும். உயிர்கள் பல. மலவாற்றலின் வன்மை மென்மை, காலஎல்லை முதலிய வற்றால் வேறுபாடுடையனவாகக் காணப்படும்.

**தளை**—மலம், மாயை, கன்மம் என மூன்று திறப் படும். இந்த மும்மலச் சார்பினால்தான் உயிர்கள் கட்டுற்றுள்ளன. முழுமுதற் சார்புற்றதும் விடுறும். மலம்—மாயை—கன்மங்கள் காரணநிலையில் இருக்கை யில் தனித்தனி ஒவ்வொன்றாய் இருக்கும். காரியநிலை யில் மலம் பல்வேறு ஆற்றல்களாக விரியும். ஒவ்வோ ருயிரையும் தனித்தனி மறைக்கும். மாயை மூவகைப் பட்டுத் தனு முதலனவாகி மலம் நீங்கவும், அறிவு விளங்கவும் துணைபுரியும். கன்மம் என்பது இருவினை யாகிப் பிறப்பைத்தரும்; இறைபணியாம் போது மலமறைப்பை அகற்றிப் பிறப்பறுக்கும். மலம் அகலுதல் என்பது, உயிர்களைத் தனித்தனி பிணிக்கும் மலஆற்றல் உயிரினைப் பிரிந்து மலத்து ஒடுங்குதலாம்.

சூரியன் மாலைக்காலத்தில் பகலெல்லாம் விரிந்து காய்ந்த கதிர்களையெல்லாம் கூட்டித் தன்னிடம் ஒடுக்கிக் கொள்வது போலும் உள்ளது மல ஒடுக்கம். சுருக்கிக் கூறினால் - ஆணவமலம் ஒன்று; அது அழிவில்லாதது; அறிவில்லாதது: அதன் ஆற்றல்கள் பலவாக விரியும். அவ்வாற்றல்கட்கு அழிவுண்டு — எனவும். — காரண மாயை ஒன்று; அறிவிதற்கில்லை; அழியாத இயல்பினது; காரியமாயை மூவகைப்படும். அழிவடையும் எனவும் —வினை ஒன்று. அறிவில்லாதது; அழியாதது: நல்வினை தீவினை என இஃது இரண்டாகும். இவ்வாக்கத்துக்கு அழிவுண்டு எனவும் கூறலாம். இங்ஙனம் முப்பொருளுண்மையும் நாம் அறியும்வண்ணம் உதவுபவன் ஆசாரிய மூர்த்தியாவான். இவ்வாசாரியனருளால் தம்முடைய உடம்பினைத் தாமல்லவென உணரலுறும் உயிர்கள். உடம்பு நாமல்லவென அறிந்த தம்மையும் அறியலுறும். இவ்வாறு பதி—பசு—பாசம் என்னும் முப்பொருளுண்மையும் அவற்றினியல்பும் கண்டு கொள்வதே வீட்டு நெறிக்கு அடிப்படையாம். இந்த உண்மையினைக் கைந்நழுவவிடாமல் யாண்டும் கருத்துட் கொண்டொழுகவேண்டுமென அறிவித்தற் கருதியே ஆசிரியர் இச் செய்யுள் முகப்பில் "**கண்டத்தைக் கொண்டு**" என்றுள்ளார். பதியாதிய பொருள்கள் ஒன்றனுள் ஒன்று வியாபக வியாப்பிய வியாப்தியாக அடங்கிக் கிடத்தலின் கண்டனவற்றை எனப் பன்மையாக மொழியாமல் **கண்டத்தை** என ஒருமைப்படுத்துரைத்தார் எனலாம். இவ்வுணர்வே கருவியாக நின்று வீடு பேற்றுக்குத் துணை புரிதலால் கருவிப் பொருள் தரும் **கொண்டு** எனலானார் என்க.

## கருமம் முடித்தல்

கருமம் மூவகைப்படும். அவை **சஞ்சிதம்** (எஞ்சு வினை); **பிராரத்தம்** (ஏன்று கொண்டவினை); **ஆகாமியம்** (ஏறும்வினை) என்பனவாம். இம் மூன்றும் **மலமறுதல், மலப்பற்றறுதல்** என்ற இரண்டாகி நிகழும். இவற்றுள் மலமறுதல் என்பது முழு முதல் குருவாகி அருள்புரியுங்கால் நிகழும். மலப்பற்றறுதல் என்பது ஆசான் அருளிய நெறியே இறைவழிபற்றி ஒழுகுதலால் விளையும். இவ்விரு கூறும் சித்திக்கப் பெறுதலே கருமம் முடிதலாகும்.

உயிர்கள் பழமையாகவே மலச்சார்புடையன. அந்நிலையில் உயிரின் இச்சை ஞானம் கிரியைகளை மல ஆற்றல் விளங்கவொட்டாது மறைத்துக் கிடக்கும். இஃது ஆடையின் அழுக்கு ஆடையின் இயல்பான வெண்மையை மறைத்துக் கிடப்பதுபோலாம். மேற் சொன்ன மல ஆற்றலை நீக்குதற்கே ஆண்டவன் படைப்பினை நிகழ்த்துகின்றான். அதாவது, மாயையினையும், கருமத்தினையும் உயிர்களுடன் இணைக்கின்றான் என்பதாகும். "மாயைகொடு மலம் ஒழிப்பான் முன்னோன்" என்ற சித்தியார் வாக்கு இதனை உணர்த்தும். உயிர்கட்கு இறைவன், முதற்கண் நுண்ணுடலை அளிக்கின்றான். இந்தச் சூக்கும உடம்பு உயிர் பிறப்பொழியும்தனையும் பருவுடலங்களை மாறி மாறி வரப்பண்ணும். முத்தி அடையுங்காலை விடுபடும். ஓரறிவுயிர் முதல் ஆறறிவு வரையுள்ள எல்லா உயிர்கட்கும் நுண்ணுடல் ஒரேமாதிரியில் உள்ளதேயாம். நுண்உடல் என்பது மாயாகாரியமாகும். குருடனுக்குக் கோல் கொடுப்பது போன்று இஃது இறைவனால்

முதற்கண் அளிக்கப்படுகின்றது. இஃது எட்டு உறுப்புக்களைக் கொண்டது. அவை சுவையாதி தன் மாத்திரைகள் ஐந்தும் மனம், அகங்காரம், புத்தி என்னும் மூன்று அந்தக்கரணங்களுமாம். மனத்துடன் தொல்வினை இறைவன் கூட்டக்கூடும். பின்னர் மல ஆற்றலுக்கு ஏற்றவண்ணம் மனம் விருப்பு வெறுப்பு அடையும். இவற்றிற்கு ஏற்பப் பருவுடல் தோன்றும். இவ்வகை விருப்பு ஒரு குருடனுக்குக் கோலின்கண் உண்டாதல் போன்றதாகும். குருடனுக்கு அருளுடையான் கோல் தந்துதவுவது போலவே முதல்வன் உயிர்களின் மனநிலைக்கு ஏற்பப் பருவுடல் விளையச் செய்கிருன். இச்செய்தியினை, "கண்ணிணைமறைத்த கடிய தொழில் ஆணவத்தால் — எண்ணும் செயல்மாண்ட எவ்வுயிர்க்கும்—உள்நாடிக் கட்புலனுல் காணுர்தம் கைக்கொடுத்த கோலேபோல்" என்ற உவமையால் உமாபதி சிவாசாரியார் கூறியருளுதலால் அறியலாம். அரிசி, செவ்வியாகச் சமைக்கப்படின் உண்ண ஏற்றதாகும். செவ்விமாறிக் குழைந்தாலும், வேவாதிருந்தாலும் பயன்படாது. இவ்வாறே இறைபணியால் வினை செவ்வியுறும். நல்வினை தீவினையால் செவ்வி மாறும். நோயின்வகைக்கும் வேகத்துக்கும் ஏற்றபடி பிதற்றல், புரளல், ஓடுதல் முதலியன நிகழ்வது போலவே மலத்தினது ஆற்றலுக்கு ஏற்றபடி இருவினை நிகழ்ச்சி நடைபெறும். எவ்வாருயினும் வினையே, விளைவுகட்கு ஏற்ற காரணமாகநிற்றல் அறியலாம். இச்செய்தியையே தொல்காப்பியரும் "வினையே.........தொழில் முதல்நிலையே" என்ற சூத்திரத்தால் தெரிவித்துள்ளாராவர். இருவினையின் காரியமே இன்பமும் துன்பமுமாம். மூலமலம் உயிர்களைக் கட்டுப்படுத்தி உயிர்களை இன்ப துன்ப

நுகர்ச்சிக்குரிய தன்மையவாக்கி நிலைபெறுத்தும். இது நெல்லுக்கு உமிபோல்வது. "பண்டுமுளைப்பது அரிசியே ஆனாலும் விண்டுமிபோனால் முளையாதாம்" என்ற பாடல் மூலமலம் வினைவிளைவுக்குப் பொருட்டுக் காரணமாதலை உணர்த்துவதாம். இனி, வினையானது, முளைப்பாற்றலைத் தோற்றுவிக்குமதுபோல இன்ப துன் பங்கட்கு முதற்காரணமாய் நிற்கும். மாயை, அரிசியொடு நிற்கும் தவிடுபோல் உயிர்கட்குத் துணைக் காரணமாய் நின்று தனு கரண புவன போகங்களாகி உயிரை இறைவனாணைப்படி இயங்குவிக்கும். இவையன்றித் திரோதானசத்தி எனப்படும் மறைப்பாற்றல் மலம் செவ்வியடையும் பொருட்டும், உயிர் இறைவனடி சேர்தற் பொருட்டும் சிவத்தின் திருவுள்ளத்திற்கு ஏற்ப மூலமல காரியங்கள் எழுமையும் தொழிற் படுத்தும். மாயையின் காரியம், மாயேயம் எனப்படும். இவ்வெல்லாம் சேர்ந்து **ஐந்து மலங்கள்** எனப்படும். இதுகாறும் கூறிய வாற்றால் **வினை** ஒன்றை நல்வழிப் படுத்தி விட்டால் எல்லாம் நன்மையாகிவிடும் என்பது தெரியலாம். இனி, வினை எங்ஙனம் ஈட்டப்படுகின்ற தென்பது காண்போம். வினை எனினும் கன்மம் எனினும் ஒன்றே,

வினை ஒன்றே மூவகைப்படும். அவை ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் என்பன. வினை, செருக்குடன் செய்யப்பட்டு நன்மை தீமைகளாகி **இருவினை** எனப் பருமையாய்க் காணப்படும். பரு உலகில் இந்தத் தூல உடம்புகொண்டு செய்யப்படும் வினைகள் நன்மையும் தீமையுமாகப் பெயரடைகின்றன. ஒருவன் உடம்பைத் தடவிக்கொடுப்பது போல்வது நல்வினை. கிள்ளுவது போல்வது தீவினை. இவை முனைப்புடன்

செய்யப்படுவதால் **ஆகாமியம்** எனப்படும். இதனை ஏறுவினை என்றும் இசைப்பர். இதனால் நல்வினை தீவினை முயற்சியே ஆகாமியமாதல் தெரியலாகும். சஞ்சித பிராரத்தங்கட்கு இது முதலாயிருத்தலால் மூலம் என்றும் கூறப்படும். **வித்தை நிலத்திலிடுதல் போல்வது ஆகாமியம்.** உயிர்கள் செய்யும் இந்த நன்மை தீமைகளை உயிர்கள் நன்கு அறியமாட்டா. நன்மையில் தீமைவிளைதலும் தீமையில் நன்மை விளைதலும் நிகழ்வதுண்டு. ஆதலால் இதம், அகிதம் என்பனவற்றை இறைவனே அறிந்து அவற்றிற்கு ஏற்ப இன்பத் துன்பப் பயன்களை நல்குவன். இது **இறைவன் கருணைச்** செயலால் நிகழ்வதேயாம். ஆகாமியத்தினைத் **தூலகன்மம்** எனவும் வழங்குவர். மந்திரம், பதம், வன்னம், தத்துவம், புவனம், கலை என்னும் ஆறு அத்துவாக்களிடமாக ,மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றினாலும் செய்யப்படும் நல்வினை தீவினைகள் எனப்படுகின்ற இருவினைகளும் ஆகாமியமாம் என்க. மற்றும், நல்வினையானது, உலகவினை, வைதிகவினை, அத்தியான்மிகவினை, அதிமார்க்கவினை, மாந்திரவினை என ஐவகைப்படுமெனவும், இவற்றின் எதிரிடை ஐந்தும் தீவினை எனப்படும் எனவும் ஓதுப. இவை, அசுத்தம், சுத்தாசுத்தம், சுத்தம் எனப்படும் போகங்களைத் தருமென்ப.

### சஞ்சித கன்மம்

பருவுடல் கொண்டு நாம் செய்யும் வினைகள் யாவும் நன்மை அல்லது தீமையுட்பட்டுத் தம்பருமைத் தன்மையினின்றும் நுண்மைப்பட்டுப் புண்ணிய பாவங்களாகி ஆன்மாவின் புத்தி தத்துவத்

தைப் பற்றுக் கோடாகக்கொண்டு மாயையில் தங்கும். புத்திதத்துவம் என்பது சூக்கும உடலகத்தே உள்ளது. நல்லவர் பொல்லாதவர் எனவும் புண்ணியர் பாவியர் எனவும் ஒருவர் கூறப்படுதற்கு இவ்வினைத் தன்மையே ஏதுவாகின்றது. புண்ணியமும் பாவமும் பண்புகளாக மாறிப் பண்பியினுள் விரவி நுட்பமாக இருக்கும். பழமும் அதனிடம் உள்ள சுவையும் போலும் உள்ளது இத் திறம். பழம் பருமை நிலையது. அதன் சுவை நுண்மை நிலையது. சுவையின் தன்மைக் கேற்பப் பழமும் பெயரடைகின்றது. ஆதலால், சஞ்சித வினை நுண்மைத் தன்மை உடையதென அறியலாம். முயற்சி இருவகைப்படும். பிராரத்த அநுபவத்துக்குத் துணையாகும் முயற்சி எனவும், சஞ்சிதவினை பக்குவமாதற்குத் துணையாகும் முயற்சி எனவும் அவை மொழியப்படும். பிராரத்துவ அநுபவ முயற்சி பயனேடுகூடியது. சஞ்சித கன்மபக்குவ காரண முயற்சி பயனேடுகூடாதது. எனவே புத்திதத்துவத்தே உள்ள வாசனை ரூபமான சஞ்சிதம் மென் மேலும் முயற்சிக்கப்பட்டு இனி முயற்சிக்கவேண்டா நிலை எய்தியபோது பிராரத்தமாக மாறிப் பயனுக்கு வரும். இதனல் சஞ்சிதம் எஞ்சு வினையாயிருக்கு மட்டும் முயற்சியொன்றையே அவாவியதாய்ப் பயனளியாத நிலையிலிருக்குமெனல் தெரியலாம். வித்து முளைத்துப் பலன்தரும் வரையில் பூமியில் தங்கி யிருப்பது போல்வது புண்ணியபாவ நுண்மை வினைகள் புத்திதத்துவம் பற்றுக்கோடாக மாயையில் இருப்பது. சஞ்சிதம், சூக்கும கன்மம் எனவும், அபூர்வம் எனவும், பெயர்பெறும். புண்ணிய பாவப்பெயர்களும் சஞ்சிதத்தின் பரியாயப் பெயராகும். கட்டுப்பட்

டிருக்கும் இச்சஞ்சித கன்மத்துக்கு முற்பிற்பாடு கூற இயலாது. முன்செய்த வினையை முன்னும், பின்செய்த வினையைப் பின்னும்தான் அநுபவிக்கவேண்டும் என்ற முறை, நிலை வேறுபாட்டின்படியும், காலநீட்டிப் பின்படியும் அமையாது. பக்குவப்படும் ஒரே செவ்வி யினை இது சாரும். பட்டும், கம்பளியும், பருத்தியும் கொண்டு நெய்யப்பட்ட ஆடைகளை ஒருவன் முறையே வாங்கினாலும் அவற்றை உடுத்துதலும் அம் முறைப்படியே நிகழவேண்டும் என்பதில்லை. காலச் செவ்வியினை உடுத்துமுறை சார்ந்து நிகழும். இத் துணைக்காரணத்தின் செவ்வி நோக்கியே சிலப்பதி-காரத்தும் "பட்டினும் மயிரினும் பருத்திநூலினும்" எனப்பட்டது. நாம் உடுத்த எடுத்த ஆடை பெட்டி யில் இருப்பது போல்வது வினையானது மாயையில் தங்கியிருப்பது. அந்த ஆடை எடுத்தவனுடைய நினை வில் இருப்பதை நிகர்ப்பது வினைபுத்தி தத்துவத்தில் தங்கியிருப்பது என்னலாம். எண்ணம் வலுவடைந் நதும் ஆடை பெட்டியினின்று எடுத்து உடுத்தப்படும். அவ்வாறே அவா (எண்ணம்) வலுப்பட்டதும் பிறப்பு அதற்கேற்ப ஏற்படுகின்றது என்க. "அவா என்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும் தவாப் பிறப்பீனும் வித்து" என்ற திருக்குறள் இவ்வுண்மை புலப் படுத்துவதாம். இதனால் சஞ்சிதத்தின் செவ்விக் கேற்றபடி சாதி, ஆயுள் முதலிய கொண்ட சரீர வகைகள் சமைகின்றதென்னலாம். இங்ஙனம் சமைப்பிப்பது இறைதுணையாலாம். சில கருமங்கட்கு இம்மையிலேயே பலன் கிடைப்பது, இந்தச் செவ்வி விரைவினால் ஏற்படுவதாகும். வினை அறிவு முனைப்பால் செய்யப்படின் அது நல்வினையாகும். அறியாமை

ரப்பால் ஆக்கப்படின் தீவினை எனப்படும். அறிவுக்கு அருளியல்பு அடிப்படையாம். அறியாமைக்கு ஆணவம் அடிப்படையாம். வினைப்பயன் முடுகிக் கைகூடியமைக்கு மூர்த்தி நாயனார், வடுகக் கருநாட மன்னன் அநுபவங்கள் எடுத்துக்காட்டாகும் என்பர். இத்தகைய சஞ்சிதவினையும் குருதிருவருளால் தீக்கையால் போக்கப்படுதல் ஒருதலை. எரிமுன்னர் வைத்தூறு கெட்டொழிவதன்றி வேறென்னாகும் ?

**பிராரத்த கருமம்.**

முயற்சியின் பயனாகிய இன்பதுன்பம் பிராரத்தம் எனப்படும். பலன் அநுபவத்திற்கு வருதல் பிராரத்தமாம். சஞ்சிதத்தில் பக்குவப்பட்டுவிட்டவை பிறகு பயனாய் வருங்கால் இன்பதுன்பமாக, செல்வம் வறுமையாக, உயர்வு இழிவுகளாக ஊட்டும். இதனை ஏன்றவினை எனவும் இசைப்பர். இவ்வேன்றவினை பயனைத்தரும்போது ஆதிதைவிகம், ஆத்தியான்மிகம், ஆதிபௌதிகம் என முத்திறப்படும். மின்னல் இடி, காற்றுமழை, தீ முதலிய பூத முன்னிலையாக வரும் இன்பதுன்பங்கள் **ஆதிபௌதிகம்** எனப்படும். **ஆத்தியான்மிகம்** எனப்படுவது மானுடர், மிருகம் முதலிய ஆன்மாக்கள் முன்னிலையாகவரும் இன்பதுன்பங்களாம். **ஆதிதைவிக**மாவது சனனம், மரணம் நரைதிரை நோய் முதலியவாய் உயிர்கள் முன்னிலையின்றித் தெய்வ முன்னிலையாக வருவதாம். இந்த வினைப்பயன்கள் கட்புலனாம் உடலில் கட்புலனாம் உலகில் துய்க்கப்படும். இன்பதுன்ப உலகங்களும் உடல்களும் ஆங்காங்குள்ளார்க்குப் புலப்படுந் தன்மையனவாம். இன்ப உலகத்தைத் துறக்கம்

என்பர். துன்ப உலகினை நரகம் என்பர். நாம் வாழும் இந்நிலவுலகம் இவ்விரு வேறு இயல்பும் கொண்ட தாகும் "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான் உறையும் தெய்வத்துள் வைக்கப்படும்" என்ற குறளினால் இன்ப அநுபவமும், "நகல்வல்லர் அல்லார்க்கு மாயிருஞாலம் பகலும் பாற்பட்டன்று இருள்" என்ற குறளினால் துன்பத்துய்ப்பும் இவ்வுலகின் கண்ணே நிகழ்வன எனப்புலப்படுத்தப் பட்டிருத்தல் காணலாம். தூல உடம்பால் இவ்வேன்ற வினையை நாம் துய்க்கின்றோம்: துய்க்கின்றவனும், பிறரும் நேராகக்கண்டு தீவினை செய்தற்கண் அச்சங்கொள்ளற்கும், அறவினை செய்தற்கு உள்ளம் கோடற்கும் இந்தவினை யநுபவம் தூல உடம்பில் வைக்கப் பட்டுள்ளதென்னலாம். எங்ஙனமாயினும் வினைப்பயனை ஊட்டுவிப்போன் முழுமுதல்வன் ஆவன். இந்த வினைகள் மூன்றன் முறைமையினையும் ஊழ் என்பர். இப்பிராரத்தம் புசிக்கும்போதே இறைவழிப்படாமைபற்றி ஆகாமியம் விளையும். இவ்வாகாமியமே சஞ்சிதமாகும். இச் சஞ்சிதமே பிராரத்தத்துக்கு இடனாம். இந்த நியதியினை நன்குணர்ந்து ஆண்டவன்பால் உள்ளம்வைத்து உடலூழ்வினை ஒழிப்பர் ஆசானருள் வழியொழுகுபவர். மயக்கமருந்து கொடுத்து அறுப்புச் சிகிச்சை வைத்தியன் புரியும்போது நோயாளியின் உள்ளம் உடம்பின்கண் ஒட்டாமையால் துன்பம் சிறிதும் உணரப்படுவதில்லை. இங்ஙனம் ஆசான்வழிநிற்போர் ஆகாமியத்தை ஒழிப்பர். சஞ்சிதம் ஆசாரியனால் கெடும். பிராரத்தம் தணியும். இதுவே கருமத்தை முடிக்கும்நெறி. இதனைவிட்டு வேறுமார்க்கம் இலதாம்.

இங்ஙனம் செய்தவர்களையே கருமத்தை முடித்தவர் என்கிறார் இந்நூலாசிரியர். இதனால் யாவும் சிவன் செயல் என எண்ணி ஆசாரியன் கூறிய உபாயநெறியே ஒழுகல் வேண்டுமென்பது வெளிப்படை. "செய் வினையும், செய்வானும், அதன்பயனும், சேர்ப்பானும் —மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள் எனக் கொண்டே—இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக் கில்லை" என்னும் சேக்கிழார் திருவாக்கும் இதனை யுணர்த்தும்.

இங்ஙனம் கருமமுடித்தற்கண் பேரருள் புரிவானை — ஞான சொரூபனை — எங்கும் நிறைந்தவனைக் கருதுதல் வேண்டும். இவன் அண்டத்து அப்பாலான் என எண்ணி எட்டாதவன் என்று விட்டுவிடுதல் கூடாது. அல்லது மானிடத் திருமேனி தாங்கிக் காட்சிப்படுதலின் நம்போன்று அண்டத்துள் கட்டுப்பட்டவன் எனலும் தவறும். எங்கும் இருப்பவன் எனவும், அவன் தத்துவ அதீதனாக இருப்பவன் எனவும், அந்தத் தத்துவங்கட்கெல்லாம் உள்ளீடாக இருப்பவன் எனவும், ஆன்மாக்களுக்கு ஆன்மாவாக இருப்பவன் எனவும், ஆசானருளிய ஞான நெறியிலே படிதல் வேண்டும். நாமும் பரிபூரண ஞானமேயாய் நிற்கவேண்டும். இவ்வாறு நிற்றலால் ஞான ஐக்கியம் விளையும். அப்போது நாமும் சிவமாயே நிற்றல் கூடும். இங்ஙனமாகிய நிலைமையடைந்தால் எல்லாப் பொருளையும் உணர்தல் கூடும். இதுவே பரிபூரண கலியாண நிலை எனப்படும். இதனையே, "அண்டத்தின் அப்புறத்தது என்றதே—அண்டத்தின் அப்புறமும் இப்புறமும், ஆரறிவும் சென்றறியும்—எப்புறமும்

கண்டவர்கள் இன்று" என்ற வரிகளால் ஆசிரியர் புலப்படுத்துள்ளார் ஆவர்.

---

## செய்யுள் — 9, 10

### சிவ சொரூபநிலைப் பெருமை

9. அன்றுமுதல் ஆரேனும் ஆளாய் உடனாகிச்
சென்றவர்க்கும் இன்னதெனச் சென்றதிலை—இன்
[றிதனை
எவ்வா றிருந்ததென் றெவ்வண்ணம் சொல்லுகேன்
அவ்வா றிருந்த தது.

10. ஒன்றுங் குறியே குறியாத லாலதனுக்
கொன்றுங் குறியொன் றிலாமையினால்—ஒன்றோ
டுவமிக்க லாவதுவுந் தானில்லை ஒவ்வாத்
தவமிக்கா ரேயிதற்குச் சான்று.

**கருததுககள**

1. உண்மைச் சுகரூபம்.
2. அறிவர வாரா நிலைமை.
3. உவமையில்லாமை.
4. ஒன்றுபட்டமுந்தியறிவது.
5. குறியின்மை.
6. இரண்டற நிற்றல்.
7. சிவாநுபவிகளுணர்வுக்குரிமை.

**விளக்கம்**

எந்தப் பொருளுக்கும் பொதுவும் சிறப்பும் என்ற இரண்டு இயல்புகளுள. அங்ஙனமே முழு முதல்வற்கும் உள. முதல்வன் கலப்பினால் ஆன்மாக்கள் பலவுமாய்,

பொருள் தன்மையால் தானேயாகி, உடனுதல் தன்மையால் இவ் ஆன்மாக்கள் பலவும் தானே ஆய் நிற்பன். கையும் எழுதுகருவியும் சேர்ந்து எழுதியதைக் கை எழுதியதென்றும், எழுதுகருவி தான் எழுதியதென்றும் பிரித்துச்சொல்ல வாராது. இரண்டும் கலந்தே எழுதப்பட்டது எழுத்து எனக் கோடலே பொருத்தம். முதல்வனும் உயிர்களோடு உடனுகக் கலந்து அவ்வுயிர்களை உடலுடன் பொருந்தி உலகத்தில் உண்டுடுத்துழைத்து உலவுவிப்பன். அன்பு அறிவு ஆற்றல்களின் கலப்பால் இங்ஙனம் நிகழ்த்தப்படுகின்றது என்னலாம். மாடுகளைத் தக்க இடந் தந்து மேய்த்தல் அன்புத் தொழிலாம். ஆசாரியன் சீடர்கட்கு ஓதுவித்தல் அறிவின் இகத்தொழிலாம். பெற்றேர்கள் மக்களை நடப்பித்தல் ஆற்றல் புறத்தொழில் ஆம். உள்ளிருக்கும் பண்பே வெளிப்பட்டுத் தொழிற்படுவது ஆற்றல் எனப்படும். உயிர்கட்குச் சார்பினுல் நிலைப்பும், தகைமையால் அறிதலும், தனித்துணையால் நெறிச் செல்லுதலும் நிகழும். இவை முறையே அன்பறிவு ஆற்றல்களின் கலப்பாம் இதனுல் ஆண்டவன் உயிர்களுடன் ஒன்ருய் வேருய் உடனுய் மன்னிப் பெருந்துணை ஆகின்ருன். முதல்வன் உயிர்களோடு அன்பால் அவையே ஆகிருன்; அறிவால் தானேயாகின்ருன்; ஆற்றலால் அவையே தானே ஆகின்ருன். இவற்றைக் கலப்பினுல் ஒன்ருய், பொருள் தன்மையால் வேருய், உயிர்க்குயிராதல் தன்மையால் உடனுய் இருப்பன் என்றும் கூறுவர். உயிர் உடம்புடன் விரவிப் பிரிப்பின்றி உடம்பே ஆய் நிற்பது. முதல்வன் உயிர்கள் பொருட்டு அவ்வுயிர்க

ளோடு கலந்து அவையேயாதற்கு எடுத்துக் காட்டாம். உயிர், உடம்பின் பெயரால் அழைக்கப்படுதல் இவ்வொற்றுமைக்குக் காட்டப்படும். திருஞான சம்பந்தப் பெருமானும் பூம்பாவைப் பெயரிட்டழைத்தே எலும்பினைப் பூம்பாவையை என்பது தெரிந்த செய்தியாகும். முதல்வன் இங்ஙனம் உயிர்களுடன் ஒன்றாய் நிற்பினும், வேருயும் நிற்பன். உயிரானது, உடம்பாயும் வேறாயும் நிற்கும். உயிர் உயிரே; உடம்பு உடம்பே. உயிரும் முதல்வனுகாது. நீராவி வண்டி பிற வண்டித் தொடரோடு ஒன்றுபட்டு இழுத்தேகுகிறது. அது தனியாகவும் செல்லும். தொடர் வண்டிகளோடும் செல்லும். பிறவண்டித்தொடர்கள் முன் இயந்திர வண்டியோடு இயைந்தே செல்லும். தனித்துச்செல்லா. இவ்வாறே உயிர், முதல்வனேடு இயைந்தே செல்லும். தனித்து நடவாது. முதல்வன் தனித்துச்செல்லும் இயல்பினன். உடம்பு உயிரோடு இயைந்தே செல்லும். தனித்துச் செல்லாது. உயிர் உடம்பின் வேருகச் செல்லும். கூடுவிட்டுக் கூடுபாய்தலில் இந்நிகழ்ச்சியைக் காணலாம். இவ்வுண்மை திருமூலரான் உடல்மாறி அறிவுறுத்தப் பட்டுள்ளது. உபாத்தியாயர் மாணுக்கரோடு மாணுக்கனுகவும் ஓதுகிருர். மாணுக்கரை ஓதுவித்து ஆசானுகவும் தனிக்கிருர். அகர உயிர் இயற்கை ஒலியாகும். இது கடவுளைப்போல்வது. அகர உயிருடன் உள்ள பிற உயிர்கள் பசுக்களை நிகர்க்கும். மெய்கள் பதினெட்டும் மாயையினை ஒக்கும். அகரம் பிறவுயிர்களோடு கலந்து அவ்வுயிர்களை நடத்துகின்றது. மெய்களுடன் கலந்து மெய்யெழுத்துக்களையும் நடத்துகின்றது. ஏனை உயிர்களோடும்

அவ்வுயிர் பொருந்தும் மெய்களோடும் உடங்கியைந்து அவ்விரண்டினையும் ஒருங்கு இயக்குகின்றது. இங்ஙனமே இறைவனும் உயிரோடும் உடலோடும் ஒருங்கியைந்து நடத்துகின்றனவன். "அகரம் முதலின் எழுத்தாகி நின்றாய்" என்பது ஆளுடை நம்பிகள் காட்டும் ஒப்பாம். இறைவன் உயிரோடும் உலகு உடல்களோடும் இயைந்து இயக்கினாலும் முற்றறிவு முடிவில் ஆற்றல் முதலியவற்றால் வேறாய் நிற்பன். வண்டி ஓட்டி, வண்டி எருது இவையாகான் என்பது தெரிந்த செய்தியாம். ஓட்டுபவன் ஆறறிவினன் ஆதலால் வண்டியுள்ளிருப்பினும் வேறாவான். இறைவன் அவையே தானேயாதலுடையான். அவையே தானேயாதல் எனினும் உடனாதல் எனினும் ஒன்றே. கடவுள் கலப்பால் ஒன்றாயும், பொருள் தன்மையால் வேறாயும் விளங்குதல்போன்று உதவுதல் தன்மையால் உடனாயும் நிற்பன். ஆசான் கற்பித்தவற்றை மாணாக்கன் பிறகு எப்போது தான்மட்டில் ஓதினும், அவ்வாசான் ஓதுவித்ததையே ஓதுவதாக முடிதலால் ஆசான் உடன் ஓதுவதாகவே கொள்ளப்படும். மாணாக்கன் தானே ஆய்ந்து பல கண்டோதினும், அவையாவும் முன்னதன் அறிவால் முளைத்தனவேயாம். வித்தினின்று பெருகிய விளைவெல்லாம் அவ்வித்தின் விளைவாகவே கொள்ளப்படும். மூலமானவித்தில்லையேல் விளைவும் இராதன்றோ! உயிரின் நிலை ஒன்றாதலாலும், அதன் அறிவு வேறாதலாலும், அதன் நடக்கை உடனாதலாலும் விளங்குவனவாம். இதனாலேயே அத்துவிதம் என்பது மேற்சொன்ன முத்திறப்பாகுபாடும் ஒருங்கியைந்த நிலைமை எனப்படும். இதனை "நீர்தோண்டி ஓர் கலப்பாம், நீர் பொருளால் வேறாமால்—சேர்கயிறு

செய்கையுடனும்" என்று ஒருபுடையொப்புக் காட்டு வர். உடனும் தன்மைக்குப்பண்ணில் ஓசையும் பகரப் படும். பண் என்பது ஒலியின் பேதமாம். எனவே ஒலி தான் பண் ஆகிறது; ஆனால் எல்லா ஒலியும் பண் எனப் படாது. ஒலியெல்லாம் பண் ஆகாமையினால் ஒலியு மன்று. இங்ஙனம் ஒலியுமன்றாய் ஒலியின் பேதமே யாகிய பண் ஒலியைவிட்டுத் தனித்திராது. இங்ஙனமே சித்தின் பேதமாகிய சீவன், சிவனாகிய சித்தன்றாய்ச் சிவனையின்றித் தனித்து நில்லாதென்பர். " யானெனும் தன்மை நினையின்றி இல்லாத் தன்மையால் வேறலேன் " என்பர் தாயுமானார். எனவே, உடலும் உயிரும் என்னும் உவமையை ஒன்றாதற்கும், அகர உயிரினை வேறாதற்கும், பண்ணையும் ஓசையும் உடனாதற்கும் தனித்தனி உதாரணமாக விளங்குமாறு காட்டுவர் பெரியோர். ஒன்றாயும் வேறாயும் உடனாயும் இறைவன் நிற்றலை ஒருங்கே ஒரே உவமையில் அமைத்தற்கு அரக்கும் கற்பொடியும் ஒருங்கிருத்தல் காட்டப்படும். அரக்கும் கற்பொடியும் சாணைக் கல்லில் ஒன்றாயிருப்பது கலத்தல் ஆகும். பொருள் தன்மையில் அரக்கு வேறு கற்பொடி வேறுதான். கற்பொடியே கருவியைத் தீட்டுகிறது. ஆனால் அரக்கு உடன் துணையாகிறது. இஃது உடனாதலாம். " சிறு காரோடன் பயினொடு சேர்த்திய கற்போல் பிரியலம்" என்னும் அகநானூற்று முதற்பாடல் வரிகள் பிரியாமைக்குக் காட்டாகக் காட்டப்படுதலும் காண லாகும். உயிர்கள் கட்டற்றுத் தனித்து முழு முதல்வன் தாளுற்று அவனையே வேண்டின் (பாவிக்கின்) அவனருளால் உயிர்கள் விசுவரூபம் கோடலும் கூடும். இறையைச் சார்ந்து நிற்றல் என்பது உயிர்கள் இச்சை

அறிவு செயல்கள் என்னும் மூன்றும் சிவத்தின்பாலே அழுந்தி நிற்கப்பெறுதலாம். அதாவது அன்பால் சார்ந்து, ஆற்றலால் பற்றி, அறிவால் வேண்டல் ஆகும். இதனைச் சிவோகம் பாவனையில் நிற்றல் என்பர். தங்களையே சிவமாகக் கருதலாவது தங்கள் உடல் உயிர்களை ஆண்டவன் திருவருளால் அவன் திருமேனி எனக் கொள்ளுதலாம். இதனால் உயிர்கள் சிவமாய் மாறிவிடமாட்டா. நோயாளி மருத்துவ னருளால் மருந்துண்டு நோயின் நீங்கி இன்புற்றாலும் மருத்துவனாகிவிடமாட்டான். உலகியலின் கண்ணும், ஒரு வீரன் தன்மறம் அரசன்மேல் வைத்துக் கூறுத லாகிய நெடுமொழி வஞ்சியால் இஃது உணரப்படும். "என்னை முன் நில்லன்மின் தெவ்வீர்! பலர் என்னை முன் நின்று கல் நின்றவர்" என்னும் குறட்பாவினுள் தானும் அரசும் ஒன்றுதலை நில்லன்மின் என்ற சொல்லாலும், தான் அரசின் வேறுதலை என்னை என்ற சொல்லாலும், தானும் அரசும் உடன் அமராற்றியதை நின்றவர் என்ற சொல்லாலும், ஒருபடைமறவன் கூறு மாற்றால் திருவள்ளுவர் குறித்தலும் காணல் தக்கதாம். இவற்றால் ஆண்டவன் நம்முடனிருப்பினும் இப் பெத்த நிலையில் அவனருளாலன்றி அவனை அறிதல் ஒருபோதும் இயலாதென்க. அநாதி காலம் தொடங்கி இறைவன் ஏவலின்படி படைப்பு காத்தல்களைப் புரியும் செயலர்களாகிப் பிறகு ஒடுங்கும் காலத்தே இறைவனிடத்திலே கூடத் தக்கவர்களும் இறைவ னுடைய உண்மையான சுக ரூபம் இன்னவிதமா யிருப்பதென இதுகாறும் தெரிந்திலர் என்பர். "பூமன்னு நான்முகத்தோன் புத்தேளிர் ஆங்கவர் கோன்—மாமன்னு சோதி மணிமார்பன்—நாமன்னும்

வேதம் வேதாந்தம் விளக்கஞ்செய் விந்துவுடன் நாத
நாதாந்த நடுவேதம்—போதத்தால் ஆமளவும் தேட
அளவிறந்த அப்பாலைச் சேமஒளி" என இச் செய்தி
யினைப் போற்றிப் பலரெருடையும் போற்றித்
தொடங்குதல் காணலாம்.

இறைவன் சித்துச் சத்தாய் நின்று அருள்பவன். சிவசத்து என்பதும் இதுவே. சிவம் என்பது அறிவு. சத்து என்பது உண்மை. இவ்விரண்டும் அறிவாற்றலாம். பாசமாகிய மாயைமுதலியன அறிவில்லன. உயிர்கள் விளக்க விளங்கும் அறிவுள்ளன. உண்மை அறிவு இன்பு என்னும் மூன்றும் முதல்வன்பால் உள்ளன. உண்மையும் அறிவும் உடையன உயிர்கள். உண்மை ஒன்றேகொண்டது மாயை. முதல்வன் ஒருவாற்றானும் உணரப் படாதானல்லன். அவனருளாலே அவனை அறியலாம். "அருட்கண்ணார் கண்ணுக்கு இரவிபோல் நிற்கும் அரன் எய்ந்து" என்பது இஃதுணர்த்தும். தலைவன் அளவைகளால் அறியப்படின் அழிபொருளாம். அறியப்படான் எனின் பொய்ப்பொருளாம். இவ்விரண்டியல்பு முடைமையால் சிவசத்து என்பர். இதனால் சுட்டுணர்வாகிய பாசஞானத்தாலும், சிற்றுணர்வாகிய பசுஞானத்தாலும் உணரப்படான். முற்றுணர்வாகிய சிவஞானத்தால் அழுந்தியுணரப்படுபவன் என்பது கருத்தாம். இறைவன் சத்து. ஆதலால் உண்மைப்பொருளாய் உணரப்படுபவன் ஆவன். ஆனால், "கண் முதற்புலனால் காட்சியும்இல்லோன்." மாற்றம் மனம் கழிய நின்றோன். ஒருவருடைய அறிவை அறிதற்கு இன்னொருவரிடமுள்ள அறிவே கருவியாம். அறிவைக்காணல் இயலாது;

கருத்தால் நுகரலாம். இதனால் முதல்வனை அவன் பிரிப்பின்றி நின்றருளும் அவன்தன் முற்றுணர்வினால் உணரலாம். உணர்தலாவது நுகர்தலாம். இதனாலேயே, "வாய்மொழியால் மெய்யால் மனத்தால் அறிவிறந்த— தூய்மையதாம் மைதீர் சுடர்" என்றார் பெரியோர். சிவசத்தெனப்படுவதே இறைவன் சிறப்பியல்பாம். ஆதலால், சிவப்பொருள் நுகர்வுப்புலனுக்கே புலனாவதாம். காணவும் காட்டவும் ஆகாவாய் கருதற்கு ஆவனவாய் உள்ளவை பண்பெனப்படும். " ஒப்பும் உருவும்.........நுகர்வும் என்றாங்கு ஆவயின் வரூஉம் கிளவிஎல்லாம் நாட்டிய மரபின் நெஞ்சுகொளின் அல்லது காட்டலாகாப் பொருள என்ப " என்ற தொல்காப்பியருரையும் ஈண்டுக் கருதற்பாலதாம். இதனால், வேறறக் கலந்து காணும் விழுத்துணை முதல்வனை வேறு நின்று காணும் அழிபொருட்காட்சியால் எஞ்ஞான்றும் காண இயலாது என்பதறியலாம். " அன்றும் திருவுருவம் காணாதே ஆட்பட்டேன் — இன்றும் திருவுருவம் காண்கிலேன் — என்றும்தான் எவ்வுருவோன் நும்பிரான் என்பார்கட்கு என் உரைக்கேன் எவ்வுருவோ நின் உருவம் எது" என்னும் அம்மையார் திருவுள்ளமும் இவ்வுண்மை புலப்படுத்தும், திருமூலரும் "அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்" என்றருளியுள்ளார். மேலும் அவர் "கரையற்றதொன்றைக் கரைகாணல் ஆகுமோ" என்றும் கேட்டருளுகின்றார். கண்டேன் என்பார் கூற்றெல்லாம் "தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால்." இத்தகைய இன்பானுபவத்தினை — சிவத்தினை — ஞானச்செய்தியால் ஆசானருளால்

சிந்தையுள்ளே மருளெல்லாம் நீங்கிடலால் கண்டு (நுகர்ந்து) வாழலாம். இதனையன்றி வேறுவழி இலது. பொருள்கள் யாவும் மூன்றுவகையால் உணரப்படும். அவை, சுட்டுபுலனால் அறிவது, கருத்துப்புலனால் அறிவது, கலப்புப்புலனால் அறிவது என்பனவாம். உலகமுதலன சுட்டுப்புலனாலறியப்படும். அன்பு அறிவு முதலன கருத்துப்புலனால் அறிதரப்படும். கடவுளும் உயிர்களும் கலந்தின்புறுதல் கலப்புப் புலனாவதாம். பாழினுக்கு விளக்கங்காட்டும் "இமையோர் தேளத்தும், மறிகடல்வரைப்பினும் அவையில் காலம் இன்மையான" என்ற தொல்காப்பிய விதியும் ஈண்டைக் குறியற்பாலதாம். இதுகாறும் கூறிய ஆற்றால், இறைவன் "வாக்குமனாதீத கோசரமாம்" பொருள் எனத்தெளிதற்பாலம். இதனை உணர்த்துமாறு இந்நூலாசிரியர், "**அன்று முதல் ஆரேனும் ஆளாய் உடனாகிச் சென்றவர்க்கும் இன்னதெனச் சென்றதிலை**" எனவும், அகப்பொருளாம் இதனை, "**இன்றிதனை எவ்வாறிருந்ததென் றெவ்வண்ணம் சொல்லுகேன்**" எனவும், அவனருளால் அவன்தாளழுந்தி நுகரலால் அறியப்படுமென்பதை "**அவ்வா றிருந்தது அது**" எனவும் கூறிப் புலனுறுத்துள்ள நயம் உய்த்துணரத் தக்கதாம். "மகட்குத் தாய் மணாளனோடாடிய சுகத்தைச் சொல்லென்றால் சொல்லுமா றெங்ஙனே" என்றவிறுவாய் திருமூலரும் இக்கருத்தினை வெளியிடுதல் ஓர்தல்கூடும். இதனால் கூடி அநுபவித்தவர்க்கே சிவாநுபவம் புலனாகத் தக்கதென முடிவு கொள்ளவேண்டும் என்பது கருத்தாம்.

மற்றும், உலகம் அறிவுள்ளதும் இல்லதும் என இருவகைப்படும். அறிவில்லாதன ஏழுபொருள்கள்.

"நிலம் நீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப் பகலோன்" என்பன அவை. அறிவுள்ளது 'புலனுய மைந்தன்' எனப்பகரப்படும். இவை எட்டும் தெய்வத்திருவுரு எனப்படும். நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம், மதி, இரவி, ஆருயிர் என்ற அட்டமூர்த்தம் (குறி) உடையான் இறைவன் என்பர். இவை படிப்படியாக இறையின்பினை எய்துதற்குப் பயிலும் திருவுருவ வழிபாட்டிடங்களாக உள்ளன. பள்ளிக்கூடத்தில் வகுப்புகள்போல இவை பயிலப் படுவன. நிலத்தை யாரும் கண்கூடாகக் காண்டலின் இல்பொருள் என்னுர். நிலனை இறையாக வழிபட்டால் நிலனுருவாமீசன்; அறிவை உயர்த்தும் திருவருள் புரிகிருன். இப்படியே படிப்படியே அருவாம் வானம் வழிபாடாற்றும் இடனுகின்றது. பிறகு சார்பினுல் விளக்கும் சந்திரன், தானே விளக்கும் சூரியன் வழிபடு மிடங்களாகின்றன. இந்த ஏழ்நிலைவரை வழிபா டாற்றியோனுக்கு ஆருயிர் வழிபாட்டின் இன்றி யமையாமை புலப்படும். கண் பிற பொருள்களைக் காண்கிறது. தன்னைக் காணும் திறன் பெற்றிலது. அறிவுள்ள உயிர் இப்படியே தன்னைக் காண இயல வில்லை. இதனுல், தான் என்ற ஒரு முதல் இல்லை என்று உயிர் ஒருபோதும் கருதாது. கண், உயிரோடு ஒன்றித்து நின்று உயிர் காட்டக் காண்கின்றது பிற பொருள்களை. ஆனுல் தன்னைக் காணுது. அதுபோல் உயிரும் ஆண்டானுேடு ஒன்றுபட்டு அவன் காட்டப் புறப் பொருட்களைக் காணும். கண், தன்னைக்காண வேண்டின் முகக்கண்ணுடியுள் தன்னைத் தந்துகாண வேண்டும். அங்ஙனமே, உயிர் தன்னைக்காண்டற்கு முழுமுதல்வன் நற்ருட் கீழ்த்தங்கி அவன் காட்டாகக்

காணும். "காட்டுவித்தால் ஆரொருவர் காணாதாரே" என இவ்வுண்மை கூறப்படுகின்றது. இவ்வாறு உள் முதலாகிய தன்னைக்காண்டற்கே தலைவன் காட்டு முபகாரத்தை வேண்டிநிற்கும் உயிர், தலைவனைத் தன்னறிவுமட்டிலும் துணையாக எங்ஙனம் காண இயலும்? இயலாதெனல் சிறிது சிந்திப்பார்க்கும் புலப்படும். இதனாலேதான் இறைநிலை உணர்வரி தெனப்படுகின்றது. ஆனால், ஆண்டவன், ஆசானாகிச் சிவஞான தீக்கை புரிந்தவர்த்தின் உயிர், தன்னையும் தலைவனையும் அறியும். தலைவனை அறிதல் என்பது அவனுள் அனைத்தையும் காண்டலாம். இதனால், தலைவனருளாகிய ஞான நாட்டமின்றி இறைவன் பெருமை அறியொணாதென்பது ஐயமற்ற செய்தியாம். இதனை, "திருவிடை மருத! பொருவிடைப்பாக! மங்கைபங்க! கங்கை நாயக! நின்தெய்வத் திருவருள் கைவந்து கிடைத்தலின் மாயப்படலங் கீறித் தூய ஞானநாட்டம் பெற்றபின் யானும் நின் பெருந் தன்மையுங்கண்டேன்; காண்டலும், என்னையுங் கண்டேன், பிறரையுங்கண்டேன் நின்னிலை அனைத் தையும் கண்டேன்" எனப்பட்டினத்தடிகள் திருப் பாடல் தெரிவிப்பதும் காணலாம். ஆதலால், திருவுரு வப்பாம்வனைகள் யாவும் சிவனருள் பெறுதற்கான வாயில்களேயன்றி, அவையே சிவமாதலில்ல என்பது தெளிவாம். நம்கடமை திருவருள் வழிநின்று இறை திரு வுள்ளம் கருதிக்கிடத்தலே ஆம். இதற்கு யான் எனது என்னும் செருக்கறல்வேண்டும். நாம் என்றும் எங்கும் அடிமை என்ற உண்மை தேறவேண்டும். இதனால் நாம் முழு முதல்வனுக்கு அநாதியே தொடங்கித் தான் பிரிந்து நில்லாமல் அது அதுவாய் நிற்றலே அடை

யாளம் எனக் கோடல் தக்கதாம். இறைவற்குத் தனித்ததொரு வேறுபட்ட குறி ஏதும் இலது. இறைவனையன்றித் தனித்ததொரு பொருளுண்டானால் அதனை இறைவற்கு ஒப்பிட்டுப் பார்க்கலாம். அங்ஙன மின்மையால் ஒப்புடைப் பொருளுமில்லான் இறைவன் ஆவன். இறைவன் அநாதியே எப்பொரு ளுடனும் இரண்டற மறைந்து நிற்றல் போலவே, நாமும் ஆசானருளால் இறையடியில் ஒடுங்கி நின்று சிவானுபவத்தைத் துய்த்திருத்தலே துணிபாம். சிவ யோகிகள் இந்த முறையில்தான் சிவத்தினைக் கண் டிருப்பர். இதுவே நேரிய நெறியாம். இதனை நமக் குணர்த்தும்பொருட்டே, "**ஒன்றுங் குறியே குறி யாதலால்**" எனவும், "**அதனுக்கு ஒன்றுங் குறி யொன்றிலாமையினல்**" எனவும், "**ஒன்றோடு உவமிக்கலாவதுவும் தானில்லை**" எனவும், "**ஒவ்வாத் தவமிக்காரே இதற்குச் சான்று**" எனவும் இந் நூலாசிரியர் திருவாய்மலர்ந்துள்ளார். இத்தகைய சிவயோகியரே செம்பொருள் கண்டாராவர். இவரே ஞானசாரியர். இவரே கண்ணுற் காணத்தகும் சிவனதருளுருவத்தர் ஆவர். இவரால் செவியறிவுறூஉப் பெற்று அவ்வழியொழுகி அழுந்துதலே ஈடிலா ஈறிலா இன்பாம். இவ்வின்பம் கூற ஒண்ணாதது. அநுபவ மாத்திரையது. மானிடப் பிறப்பின் குறிக் கோள் இதுவேயாம். உண்மைச் **சீவன் முத்தி** பதமென இது புகலப்படும்.

---

## செய்யுள்—11

### சிவாநுபவம் இடையருமை

ஆற்றல் அலைகடற்கே பாய்ந்தநீர் அந்நீர்மை
மாற்றியவ் வாற்றான் மறித்தாற் போல்—தோற்றிப்
புலன்களெனப் போதம் புறம்பொழியும் நந்தம்
மலங்களற மாற்றுவிக்கும் வந்து.

### கருத்துக்கள்

1. சீவன் முத்தர் ஒழுகலாறு.
2. சிவபோதம் தலையெடாமை

### விளக்கம்

கடல் பெரிது. முந்நீர்மை உடையது. தனக்கிணையான நீர்நிலை ஏதும் இல்லாதது. அளவற்ற நீரினைக் கொண்டது. எல்லா நீர் நிலைகளுக்கும் புகலிடமாவது. "தொக்கிலங்கியாறெல்லாம் தொடு கடலே புக்கன்றிப் புறம் நிற்கமாட்டா" எனப் புகழப்படுவது. மேக முதலியவற்றிற்குதவுவது. உலகுயிர்களைக் காத்தல் செய்வது. உவராம் இயல்புடையது.

நதிகளும் நீருடையன. கடலை நோக்கச் சிறு பரப்பின. தத்தம் இயல்புக்கேற்ப உதவுவன. ஆனால் ஓடிக்கொண்டே இருப்பன. கடல் நீர் மழையாகி யுதவினாலன்றிப் பெருகும் இயல்பில்லன. கடலைப் புகலிடமாக உடையன. எவ்விடத்தே தோன்றினும் சமுத்திரத்தினையே நோக்கி ஓடிக் கலந்து அடங்கிக் கிடக்கும் இயல்புடையன. கடலில் கலவா முன்னம்

உவராம் சுவையில்லன. கடலுட் புக்கதும் தன் நீர்மை மாறுபட்டுக் கடலின் நீர்மையே ஏற்பன. ஒரு நதியானது பெருகிக் கடலில் போய்க் கலந்ததும் கடலோடு கடலாகிப் பிறகு மீளாமல் உவர் நீருடைய கடலேயாகப் பிறரால் கூறப்படுகின்றது. கடலுட் கலந்துவிட்ட நதிக்கு நதியென்னும் பெயரும் மாறி விடுகிறது. புண்ணிய தீர்த்தமெனப் பெயருறுகிறது. "ஊரங் கணநீர் உரவுநீர்ச் சேர்ந்தக்கால்—பேரும் பிறிதாகித் தீர்த்தமாம்" என்ற பாடல் இதனை உணர்த்தும். எனவே ஆற்றின் நன்னீர், கடல் நீருடனே ஒன்றுயின் தன் தன்மை கெட்டுக் கடலின் தன்மை எய்திவிடுதல் தெளிவாம். இங்ஙனம் கலந்து ஒன்றுபட்ட ஆற்றுநீர் ஒரொரு சமயம் கடலின் தொடர்பினை விடாமலே ஆற்றின் வழியே மீண்டு சிறிதளவு எதிர்ப்பதுண்டு. அப்படி எதிர்க்கும்போது, பழைய ஆற்றின் நன்னீராகத் தான் சுவைக்காமல், உவர்நீராம் சுவையுடையதாகவே ஆகின்றது. உப்பு நீரே ஆவதோடு சங்கமுகம் எனப்படும் பெருமையும் எய்திடுகின்றது. இதனால், அந்த நதிக்குப் பெருமைக் குறைபாடு எதுவும் ஏற்படுவதில்லை. தன்னில் மூழ்குவார் வினைகளைக் கடலேபோலத் தானும் போக்கும் ஆற்றலடைகின்றது.

இவ்வாறே, இறைவனோடு உள்ளம் ஒன்றுபட்டு எல்லாம் இறைபணியே என்றிருக்கும் சிவயோகியர் சிவமாகிய அச்சினை உணர்ந்தே நிற்றலால், பழைய பழக்கத்தால் ஒரொருகால் உலக முகப்பட்டு ஐம்புல வழியே செல்ல நேர்வராயின், அதனால் ஏனையோர் போல் ஆகாமியம் மூளப் பெறுவாரல்லர். தாமரை இலையானது தனக்கு ஆதாரமாய் நிலைத்த ஜலங்களினால்

எங்ஙனம் மதாடகக்குணணவலலமயா, அங்ஙனம் ஞானி சப்தாதி விஷயங்களில் தொடக்குருறுவன் என்பது சிவ தருமோத்தரம். ஏனெனில் சார்ந்ததன் வண்ணத்தது ஆன்மா என்னும் இயல்புணர்ந்தவன் ஞானி. அவன் உலகப் பாசத்தினின்று தன் ஜீவனை முத்தி (விடுதலை) செய்திட்டவன். சிவபிரான் திருவருளால் அல்லது ஒன்றையுங் காணுன். எல்லாம் சிவமயமாம் காட்சியிலே உறைப்புண்டு கிடப்பான். சிவனருள் வழியாகவே யாவற்றையும் காண்பதனுல் அவனுள்ளம் பாசத்தினைப் பற்றுவதில்லை. சிவ சத்தியோடிருக்கும் இயல்பு பூண்டிடுதலால் அவனைப் பாசம் பற்றுவதில்லை. ஒளிக்குமுன் எதிர்ப்பட்ட அந்தகாரம்போலப் பாசம் நாசமடைகிறது. சுடாமைக்குக் காரணமான அக்கினிஸ்தம்பனம் செய்ய வல்லவர், அக்கினியின் மத்தியில் இருப்பினும் தம் வெற்றிப் பாட்டினின்றும் நீங்கார். அசுவ சாஸ்திரம் வல்லோன் குதிரையின் வேகத்துட்பட்ட போதும் அதனை மீறவொட்டாமல் வெற்றி கொள்கிருன். இங்ஙனமே, ஐம்புலன்களில் அகப்பட்டு உழலாமைக்கு உபாயம் இன்னதென ஞானுசாரியனுல் அறிவுறுத்தப்பட்டு அவ்வழியே தெளிவடைந்து சிவத்தினைத் தலைப்பட்டவர், ஐம்புலன்களும், தம் முன்னே வியாப்பியமாய் அடங்க, தாம் அவற்றை வியாபித்து மேற்பட்டு நின்று, சிவபிரானது அருள் திருவடி வியாபகத்தைத் தலைப்பட்டு நிற்பராதலால் பந்தத்தில் தொடக்குண்பாரல்லர். பெருங்காயப் பாண்டம் காயமணம் சிறிது கமழப் பெற்றுலும், காயமிருந்தபோதில் பயன்பட்டவாறு கறி சமைத்தற்குப்பயன்படாது. அவ்வாறே தத்துவஞானி, தற்போதம்

முளைக்கும்போது தன் பகுத்துணர்வுதயத்தால் ஏகனாகி இறைபணி நின்று பிறழாமல் காத்துக்கொள்ள வல்லனாகிறான். சிவபெருமானும், தம்மைச் சார்ந்தோரைக் காக்கும் நடுவு நிலைமையனாதலால் இத்தகைய தொண்டரைக் காத்தளித்தே தீருவர். இதனால் கடலுடன் ஒன்றான நதிபோன்றார் அரனுடன் ஒன்றாகி நின்றோர் என்பதுணரலாகும். இவ்வாறாயினும் பிறர்க்கு இவர் இந்திரிய வயப்பட்டுச் சீவிப்பவரைப் போலக் காணப்படுவர். ஆனால், தம்மளவில் இவர் பசுகரணங் கூடப்பெருமையால் சிவகரணமே பிரகாசிக்கச் சுகரூப ஐக்கியப்பட்டே நிற்பாராவர். "சீவன் முத்தர் பரமே பார்த்திருப்பார்" என்பர் பெரியோரும். "உள்ளும் புறம்பும் ஒருதன்மைக் காட்சியருக்கு எள்ளும்திறம் ஏதும் இல்" என்பது அணைந்தோரியல் புரைக்கும் திருவாக்காம்.

இத்தகையோர், யான் எனது என்னும் செருக்குட்பட்டு அல்லற்படும் ஆன்மாக்களைக்காணின் தம்மிடத்து எழுந்த கருணையினாலே மிகவும் இரக்கத்தால் தளர்வர். "உம்மை நிரயத்து வீழ்வர் கொல் என்றஞ்சிப் பரிவதூஉம் சான்றோர் கடன்" என இவர்தம் இயல்பினை நீதிநூலும் எடுத்துப்போற்றும்.

இத்தகையயோர் செயலெல்லாம் சிவன் செயலாகவே அமைதலால், இவர்களைத் தரிசித்ததும், "நல்லாரைக் காண்பதுவும் நன்றே" என்பதற்கிணங்க இவர்தம் கருணையானது காண்போர்மீது படுதலால், கண்டோர் மலங்களும் விண்டோடும். இவர்களால் இரட்சிக்கவும்படுவர்.

இவ்வுண்மை எளிதின் நம்மனோர்க்கு விளங்கும் பொருட்டே இந்நூலாசிரியர், "**ஆற்றால் அலைகடற்கே பாய்ந்தநீர் அந்நீர்மை மாற்றி அவ்வாற்றான் மறித்தாற்போல்**" என்ற உவமை காட்டியுள்ளார். ஆறு கடல்நீரைக் கொணர்ந்து தருதல்போல் இவரும் சிவத்தினது திருவருளை நமக்கெட்டுமாறு செய்வர் என்பது இவ்வுவமையாற் போதரும். "**தோற்றிப் புலன்களெனப் போதம் புறம்பு ஒழியும்**" என்பதனால் ஞானிகள் அநுபூதி திரிந்தபோதும் இந்திரிய வசப்படார் எனவும், அவர்களை இந்திரிய வசப்பட்டாராக நாம் எண்ணுதல் தவறு எனவும் புலப்படும். இவர்கள் எப்போதும் இரக்கமே பெரிதுடையாராதலால், இவரை நாமடைந்து மலநீக்கம் பெறல் கூடும் என்பதை "**நம் தம் மலங்கள் அற மாற்றுவிக்கும் வந்து**" என்ற வாசகத்தால் அறியலாம். இதனால், ஞானிகளின் மெய்த் தன்மை கண்டு அவரை வழிபட்டு வாழ்வது நமக்கு வாழ்வு தரும் என உணரலாகும்.

---

## செய்யுள் — 12

### சிவஞானி செயல்

**பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்**
**காலனை அன்றேவிக் கராங்கொண்ட—பாலன்**
**மரணம் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தம்**
**கரணம்போ லல்லாமை காண்.**

**கருத்து**

1. சிவகரணமுடையார் பெருமை.
2. செயற்கருஞ் செயல்கள் செய்தல்.

**விளக்கம்**

உலகில் உள்ள ஆறுகள் பற்பல. இவையெல்லாம் ஒன்றுய்க் கூடினும் கடல் ஒன்றுக்கு ஒப்பாக மாட்டா. இவைகளும் ஏதாவதொரு வகையில் கடலிலே போய்க் கலந்தே தீருகின்றன. இவைகட்கு வேண்டும் நீரும் கடலினின்றும் கிடைப்பதேயாகும். கடல் வியாபகமுடையது. நீரினை உதவி ஆறுகளை அழகுபடுத்துவது. ஆறுகள் யாவற்றையும் தனக்குள்ளே அடக்கிக்கொள்ளும் ஆற்றலுடையது. எனவே ஆறுகள் யாவும் கடலுள் வியாப்பியமாவனவாம். கடலுட் கலந்துவிட்ட நதியானது கடலின் தன்மையைத் தானும் எய்துகின்றது. ஆற்றின் நீர் கடலின் நீரோடு ஒன்றிவிடுகின்றது. ஆற்றின் பரப்பு கடலின் பரப்போடு பரவிவிடுகிறது. ஆற்றின் செயல்கள் கடலின் செயலோடு கலந்துவிடுகின்றன. எங்ஙனம் நதியின் நீரும் பரப்பும் செயலும் கடலோடு கடலாகிவிடுகின்றனவோ அங்ஙனமே ஞானிகளின் அறிவு இச்சை செயல்கள் யாவும், சிவத்தின் அறிவு இச்சை செயல்களோடு ஒன்றிவிடுகின்றன. தன்னுடைய ஜீவனைச் சிவத்தின் திருவடிகளிலே பொருந்தியிருக்குமாறு செய்துவிடுகிறுன். இதனுல் அவன் ஜீவன் முக்தன் எனப்படுகிறுன். இவனுடைய நினைவெல்லாம் சிவத்தின் நினைவேயாம். இவன் சொல்லெல்லாம் சிவத்தின் மறைமொழியே ஆம். இவன் செயலெல்லாம் சிவன் செயலேயாம். இவன் கரணங்கள் யாவும் சிவகரணமாகின்றன. இத்தகைமை எய்தியவனுக்குத் தற்போதமே இராது. இவனது பசுபோதம் சிவபோதத்திற்குக் கவளமாகிவிடுகிறது. இவ்வுலகில்

இவன் இருக்குமளவும் இவனைச் சிவனே நடத்து கிருன் ; தாங்குகிருன். இவன் கண்ணுக்கு உலகம் சிவமயமாகவே காணப்படும் ; யாவும் சிவசொரூப மெனப்படும். இவனது நீர்மையனைத்தும் சிவத்தினது நீர்மையினின்றும் மாறுபடுதல் இல்லை. நீர்மை உலக முகப்படும்போதும் பஞ்சாக்கர சிந்தனையாதிய செயல் கொண்டு ஒழுகி நீர்மை கெடாதே பேணப்படும். இத்தகையோன் யாண்டும் சிவஞானத்திலே பதிந்தவ ஞதலால் இறங்க நேரினும் சிவனருள் எல்லையிலே தங்குவனேயன்றி அதனின் கீழான தத்துவக் கூட்டங்களுட்படுதல் இலன். மேற்படியில் இருப் பவன் காலைக் கீழே விட நேரின் அடுத்துள்ள கீழ்ப் படியிலேதான் வைப்பான். தான் கீழ்ப்படியில் இறங்கியதை உணர்ந்ததும் திரும்பவும் மேற்படிக்கே முயன்று ஏறிவிடுவான். இதுபோலத்தான் ஞானியின் சிவகரண ஏற்ற இறக்கம் நிகழும். ஆற்றில் கடல்நீர் ஏறிட்டு வருதல் உண்டு. எனவே கடலுட் கலந்த நதி தன் வழியில் முகத்துவாரத்தினின்று சிறிதளவு தூரம் ஒரோரு சமயம் மீளுவதுண்டு. அப்போது அவ்விடத்து ஆற்றுள் மீண்டுள்ள நீரை எடுத்துச் சுவைப்போமாயின் உப்புச் சுவையே பெற்றிருக்கும். தன்பால் முன்பிருந்த நல்நீர்ச் சுவைபெருது. திரும்-பவும் அவ்வுவர்நீர் கடலுக்கே சென்றிடும். அல்லது கடலோடே தொடர்புண்டு தேங்கிக் கிடக்கும். இங்ஙனம் நிகழ்வது சங்க முகத்தினின்று சிறிதுதூர மளவுக்கேயாம். சிவஞானி செய்கையும் இவ்வாருன நிகழ்வுடையதேயாகும். சாமானியர்க்கு இத்தகைய நிகழ்ச்சியநுபவம் இராது. நாம் தத்துவச் சுழலிலே அகப்பட்டுக் கிடத்தலால் இதற்கு அப்பாற்பட்ட

அந்த நிலையினை அறிய இயலாது. கோபுரத்தின் உச்சியில் நிற்போனுக்குக் காட்சி வியாபகம் பெரிதாம். அதனடியிலிருப்பார்க்கு அத்துணை வியாபகமிராது. உச்சி நின்றான் காணும் பொருட்களையெல்லாம் அடியில் நிற்போர் பலராயினும் பல கண்களை உடையராயினும் காணார். அடியில் நின்றார் காண்பனவற்றை உச்சி நிற்போன் அலட்சியமாகக் காண்பன். மதிமான் மண்ணிற் புலிக்கு அஞ்சுவதில்லையென்பது நன்னெறி.

சிவோகம் பாவனையில் உறைத்து நிற்போராகிய சீவன் முத்தர்கள் இவ்வுலகிடை வாழுமளவும், இறைவனை உள்ளுவதும், அவன் பொருள்சேர் புகழே பாடுதலும், அவன் திருவுருவினை உலகோர் பொருட்டு ஒப்பனை செய்தலும் ஆகிய இவையே தம் கடமையாகக் கொண்டொழுகுவர். இவ்வாறன்றி, ஓரொரு காலை உலக முகப்பட்டு உள்ளியும் பேசியும் செயல்பல புரிந்தும் ஒழுகுதல் கூடும். இங்ஙனம் நிகழுமாயின் அச் செயல்கள் யாவும் இறைவன் திருவருளால் உலகத்தவர் உய்தற்பொருட்டு நிகழ்த்தப்படும் செயல்களாகவே கருதப்படவேண்டும். சண்டேசுர நாயனார் செயல்கள், நம்பியாரூரர் திருத்தோற்றம் முதலன இவ்வுண்மை தெரிக்கும். இவர்தம் அருள் யாக்கையிற் காணப்படும் பொறி புலன்கள் சிவ கரணங்களெனப்பட்டு அருள்மயமேயாகும். இவை ஐந்தவித்த ஆற்றலுடையனவாம். இவர்தம் உடம்பிடை இறைவன் சிறப்பாக நின்று வினைபுரிவானவன், " மாயை மாமாயை மாயாவரும் இருவினையின் வாய்மை—ஆய ஆர் உயிரின் மேவும் அருள் எனில் ஒளியாய் நிற்கும் " என்பது சிவப்பிரகாசம். இவர்கள் செயல்கள் செயற்கரும் செயல்களாம். இவர்கள்

மும்மலங்களையும் தூய்மை வழி நடத்துவர். இவ்வா-ருன தூய்தொழில் நிகழ்த்திக் காட்டினர் தேவார ஆ சி ரி ய ர் க ள் மூவரும். ஒளியிழந்த கண், ஒளி யிழத்தற்குக் காரணமாய் நின்ற மாசு நீங்கப்பெற்ற பிறகு தன் ஒளியையும் தன்க்குள்ளாய் நி ன் று செலுத்தும் ஆன்ம ஒளியையும் பெறும். அங்ஙனமே, கருவிக் கூட்டங்களிலிருந்து நீங்கிய ஆன்மாவுக்குத் தானும், தன் அறிவுக்குள்ளாகி நிற்கும் சி வ மு ம் விளங்கித் தோன்றுமென்றல் ஒருதலையாம். இத்தகை யோர் பாசஞானம், பசுஞானம் கடந்து இறையருள் வயப்பட்டு அவன் கலப்பினையுணர்ந்து கசிந்து நின்று பதிஞான நெறி நிற்பர். பாசஞானம் ஏகதேசமாகவே யறியும் இயல்பினது. பசுஞானம் செருக்குற்றறித லாகும். பதிஞானமென்பது ஒருசேர அறிதலாம். " ஒன்ருகச் சிவனியல்பில் உணர்ந்திடுவன் காணே " என இச் செய்தி சொல்லப்படும். இதனுல் கரணங் கடந்த இடத்துப் பதியிலழுந்தவேண்டுமென்பது புலப் படும். அங்ஙனம் அழுந்தாது சீவன் தனித்து நிற்க முடியாது. இறைவன் உயிரோடு கலந்து நிற்றல் எப்போதும் நிகழ்வதுதான் எனினும், உயிரினிடத்துக் கசிவு நிகழாக்கால் விளங்குவதில்லையாம். " குற்ருலத் தமர்ந்துறையும் கூத்தாநின் குரைகழற்கே கற்ருவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே " என்ற திருவாக்கும் கசிவின் தன்மையை உணர்த்துவதாம். திரோதையும் மலமும் நீக்கி ஆன்மா அருளால் சிவனுடன் கலந்துநிற்றல் வேண்டுமென்பதைச் சிறப்பு முறையால் பஞ்சாக்கரமும் ஓதுமுறை நிற்குமுறை ஒன்ருகியுணர்த்தும் என்பர். இவ்வாருன உண்மைச் சிவகரண அதீதப்பட்டோர் சிவ வயப்பட்டோரேயாவ-

ராதலின் அவர் மூலம் சிவம் தன் செயலை உலகுய்யப் புரியும். நம்மனோர்க்கு அச் செயல்கள் சிவ வயப் பட்டோர் செயலாகவே காணப்படும். சிவ வயப் பட்டோர் கரணங்கள் நந்தம் பாச வழிப்பட்ட கரணம் போல்வன ஆகாவாம். இதனையே இவ்வாசிரியர், "**நந்தம் கரணம்போல் அல்லாமை காண்**" என்று கூறித் தெளிவிக்கின்றார். இத்தகையோருள் நம் திருஞான சம்பந்தமூர்த்திகள் பாலை நெய்தலாமாறு பாடியருளிக் காட்டியுள்ளார் என்பர். இச்செய்தி யைத் திருநனிபள்ளிப் பதிகத்தே கண்டறிதல் கூடும் என்பர். "காரைகள் கூகைமுல்லை களவாகையீகை படர்தொடர் கள்ளி கவினிச் சூரைகள் பம்மிவிம்மு சுடுகாடு" என்ற பகுதி பாலைக் கருப்பொருள் கொண்டு நடத்தல் காட்டும். "கடல்வரை ஓதம் மல்கு கழிகானல் பானல்" என்ற பகுதி நெய்தற் கருப் பொருள் காட்டும். இங்ஙனம் **மாயையின் தூய்மை** யைப் "**பாலை நெய்தல் பாடியதும்**" என்ற இவ் வாசிரியர் பாடல் உணர்த்தும். இங்ஙனமே திருநாவுக் கரசரும், அப்பூதியடிகளார் திருமகனார் பாம்பின் விடம் நீங்கியெழப் பாடியருளிய செய்தியும் பெரியோ ரியல்பு புலப்படுத்தும். இதனைப் **பார்பொழியப் பாடியதும்** என்றனர் இவ்வாசிரியர். இச் செயல் **கன்மத் தூய்மையைக்** குறிப்பதென்பர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் முதலையுண்ட பாலனை அழைத்தருளினர் என்பதும் வரலாறாகும். இதுவும் செயற்கரும் செய- லாம். இச் செயல் **ஆணவத் தூய்மை** குறிக்கும் என்பர். இதனை இவ்வாசிரியர், "**காலனை அன்றேவிக் கராங்கொண்ட பாலன் மரணம் தவிர்த்ததுவும்**" எ ச் செய்தி புலப்படுத்துவாராயினர். இவை

யெல்லாம் அருட்செயல்களாம். இச் சிறப்புக் கருதியே **துறைமங்கலச் சிவப்பிரகாச சுவாமிகளும்** தாமியற்றிய திருவெங்கைக்கோவையில், வரைவியல் உடன்போக்கினுள் தலைவன் போக்குடன் படுதல் உணர்த்தும் பாடலில், "நாமொழியாது புகழ்வா னருள்வெங்கை நாதரைச்சொல்–**பாமொழி யானெய்த லாம்பாலை ஞானசம் பந்தனுக்குத்**—தேமொழியாயுன் னுயிரனை யாட்கரும் செம்பவள வாய்மொழி யாலிளங் காவாகும் பட்ட மரங்களுமே." எனக் கூறியிருத்தல் காணலாம். மேலும், திருநாவுக்கரசர் சிறப்புடை அருள்தன்மை புலப்படுத்துமாறு, "துடைவாழை மேல்மட வாரல்குற் பாம்பு தொடமயங்கி — நடைவாய் பிண மெனப் பட்டார் **பெறுகிலர் நச்சுகுலை—யுடைவாழை மேலுர கந்தீண்ட மாய்ந்த ஒருவனுயிர்—அடைவான் அருள்புரியுந்திரு நாவுக்கரசினையே.**" என நால்வர் நான்மணிமாலையிற் பாடித் தெரிவித்துள்ளார். மற்றும், அதே நூலில், "வாங்குசிலை புரையுமுடலெனுங் குளத்தின் மூலமலமெனும் ஓர் வெங்கரவின் பகுவாயினின்றும் தீங்கில் உயிர் எனும் பனவக் குலமகனை **ஆதி திரோதாயி** என்னுமொரு வெந்திறற் கூற்றுவனால்......உமிழ்வித்து" எனச் சுந்தரர் திருவருட் பாட்டினைப் புகழ்ந்து புலப்படுத்தியுள்ளார் என்னலாம். இவ்வருட் செயல்கள் கூர்ந்து காண்கின் இறை செயலே என்பது தெரிதரும். இதனால் சிவஞானி செயலெல்லாம் சிவன் செயலே ஆம் என்பது புலப்படும். நாமும் சிவகரண அதீதர்களாகி இறை செயற்குக் கருவியாம் தகுதி பெறுதல் தக்கதாம்.

## செய்யுள் — 13

தூங்கினரைத் தூய சயனத்தே விட்டதற்பின்
தாங்களே சட்ட உறங்குவர்கள்—ஆங்கதுபோல்
ஐயன் அருட்கடைக்கண் ஆண்டதற்பின் அப்பொருளாய்ப்
பைய விளையுமெனப் பார்.

### கருத்துக்கள்

1. சத்திநிபாத நிலை அடைதல்.
2. அப்பொருளாய் நிற்றல்.

### விளக்கம்

உலகில் கஷ்டமும் சுகமும் மாறி மாறித் தாக்குவதானல் அலுப்படைந்து வேதனை மூண்டபொழுது நித்திரை அடைவதுபோல மயக்கமுறுவர் மக்கள். வலி தாளாமையால் தூக்கமடைந்தவன் கிடந்த இடத்திலேயே மயங்கிக் கண்ணயர்வான். அப்போது வேதனையை உணரும் அறி கருவிகள் தொழிற்படுவதில்லை. ஆதலால், அம் மயக்க நிலையில் வேதனைத் தாக்குதல் உணரப்படுவதில்லை. மயக்கந் தீர்ந்து சிகிச்சை செய்யும் மருத்துவரும் பணி மகளிரும் அங்ஙனம் மயங்கிக் கிடப்பவனை எழுப்பார். அவர்கள் அந்நோயாளி குணமுறவேண்டுமென்ற இரக்கம் பெரிதும் உடையர். இஃது இயற்கையான அன்பினுல் விளைவதாகும். ஆதலால் கருணைமிக்குடைய இவர்கள் அப்பிணியாளனை மெத்தென்ற சயனத்தே தூக்கிப்போய்க் கிடத்துவர். நன்ருய் அயர்ந்து தூங்குதற்கும் பின்னர்த் தெளிதற்கும் ஏற்ற நிலையில்

அவனைப் படுக்கவைத்திருப்பர். அவ்வாறன்றி, அவனை அறுவை மேசைமீதே கிடத்திவைக்கமாட்டார்கள். இங்ஙனம், அவ்வன்புடையார் புரிவதனால் பிணியாளன், தன்னையும் தானுற்றிருந்த வேதனையையும் மறந்து சுக நித்திரைசெய்வன். பிறகு தெளிவடைவன். மருத்துவன் புரிசெயல்கட்குள்ளாகி வேதனை முற்றுங்கெடச் சுகமுறுவன். இவ்வாறுதான் சுக துக்கப் பிரபஞ்சவாதனையால் வேதனைப்பட்டோர் நிலை நிகழும். பிணியாளன், மயக்கமருந்திட, அது காரணத்தால் உறங்கத் தொடங்கியவன் பின்னர்த் தானே அயர்ந்து துயில்கிறான். பிறகு இன்பம் எய்துகின்றான். இப்படித்தான் பிரபஞ்ச வாதனையைத் தாங்கமாட்டாமல் ஜீவன் வேதனைமிகுதிப்பட்டபோது இறைவன் கருணையே வடிவாகக்கொண்டவனாதலால் அச்சீவனை நன்னெறியிற் செலுத்தித் திருவடியின்புறச் செய்தற்பொருட்டு இரக்கம்வைக்கிறான். இங்ஙனம் நிகழும் இறையிரக்கமே **சத்திநிபாதம்** எனப்படும். இச் சத்திநிபாதம் ஆன்மாவின் ஒப்பற்ற தவத்தினால் விளைவதாம். இங்ஙனம் ஜீவன் அருள்புரியப்படுதலை உணர்த்துதற்பொருட்டே இவ்வாசிரியர், "**தூங்கினரைத் தூய சயனத்தே விட்டதற்பின் — தாங்களே சட்ட உறங்குவர்கள்**" என்ற அரிய உவமை காட்டியுள்ளார்.

பசுக்கள் இம்மைப்பயனைக் கருதலாகாது. வீட்டின்பினையே குறிக்கோளாகக்கொண்டு அதனுக்கேற்ற செயல்களையே ஆற்றல்வேண்டும். ஏற்ற செயல் என்பது பொதுநீக்கிச் சிவபிரானை நோக்கிச் செய்யப்படும் சிவ புண்ணியச் செயல்களாம். வினை செய்வாரது கருத்துக்கேற்பவே பயன் விளையும்.

பசுக்களை நோக்கிச்செய்யின் பசு புண்ணியமெனப் படும் பயனாகும். செய்வாரது கருத்து வேறுபா டுணர்ந்தே முதல்வன் பயன்கொடுப்பன். எல்லா உயிர்களையும் ஒக்கப்பார்க்கும் உயர்நிலை எய்திய மெய்ஞ்ஞானிகள் பசுக்கள்மேல்வைத்த கருணையால் அவற்றின்கண் செய்யும் நல்வினைகள் சிவபுண்ணியப் பயனுடையவாம். வேள்விக்கண் கொடுக்கப்படும் அவிப்பாகம், சிவனை ஏனைப்பசுக்களாகிய கடவுள ரோடு ஒப்பவைத்துச் செய்யப்படுதலால் கருத்து வகைபற்றிப் பசுபுண்ணியமேயாகும். அபுத்தி பூர்வ மாய் நிகழும் சிவபுண்ணியச் செயல்கள் புத்திபூர்வ மாய்ச் செய்யக்கடவனவாம் சிவபுண்ணியத்தினுக்கு ஏதுவாம் பயனுடையதாகும் சிவபிரானையே நோக் கிப்பொது நீக்கிச் செய்யப்படுமேல் வேள்வி முதலியன வும் பொதுச் சிவ புண்ணியமாகும். உலக வினைக்கும் இதுவே நியதியாம். இதனை, "வேம்பினோடு தீங் கரும்பு விரவி எனைத் தீற்றி" என்னும் சுந்தரமூர்த்திகள் தேவாரம் உணர்த்தும் என்பர். நோக்கம் ஏதுமின்றிச் செய்யப்படும் அபுத்தி பூர்வ நல்வினைகளும் சிவ பிரானுக்குரிய பணியாக முடியுமாயின் அதுவும் சிவ புண்ணியம் பயக்கும் தகையதே. மாவலி அபுத்தி பூர்வ புண்ணியத்தால் அரசாய செய்தி இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறப்படும். "நிறைமறைக் காடுதன்னில் நீண்டெரி தீபந்தன்னைக் — கறைநிறத் தெலிதன் மூக்குச் சுட்டிடக் கனன்றுதூண்ட—நிறை கடல் மண்ணும் விண்ணும் நீண்டவான் உலகும் எல்லாம்—குறைவறக் கொடுப்பர்போலும் குறுக்கை வீரட்டனாரே"—என்னும் திருநாவுக்கரசர் தேவாரம் இது குறிக்கும். இதுகாறும் கூறியவாற்றால் எவ்வா-

றேனும் சிவபுண்ணியம் செய்தலே சிறப்புடைத்தெனத் தெரியலாம்.

எல்லாச் சிவபுண்ணியங்களும் பொதுவும் சிறப்பும் என இருவகைப்படும். சிவதீக்கையின்றிச் செய்வது **பொதுவாம்.** அங்கமாகிய சிவதீக்கையுடையராய்ச் செய்வது **சிறப்பாம்.** இவையும் உபாயம் உண்மை என இருதிறப்படும். புகழ் முதலிய உலகப் பயனைக் கருதுவது **உபாயமாம்.** பக்தியால் சிவார்ப்பணமாய்ச் செய்யப்படுவது **உண்மை** எனப்படும். இதனால் சிறப்புச் சிவபுண்ணியம் இரண்டெனப்படுவதாயிற்று. இவ் ஒவ்வொன்றும் சரியையும் கிரியையும் யோகமும் அவற்றால் நிகழும் ஞானமும் எனப் பாகுபட்டு ஓரோ வொன்று நந்நான்காம். இதனால் சிவபுண்ணிய வகை எட்டாதல் காணலாம். இந்நான்கு திறங்களும் சரியையிற் சரியை கிரியை யோகம் ஞானம் முதல-வாகப் பகுக்கப்பட்டு முப்பத்திரண்டென வகைப் படுத்தப்படும். இவை இன்னம் விரிக்கப்படுவதால் பலப்பலவாகும். இவ்வெல்லாம் ஒருசேர்த்துக் கூறப் படும்போது **இறப்பில் தவம்** எனப்படும். இத்தகைய தவத்தால் விளைவதே **ஞானமாம்.** இதனை **மெய் புணர்வு** என்றும் உரைப்பர். **மாதவம்** என்பதும் இதுவே. “பிறப்பென்னும் பேதமை நீங்கிச் சிறப் பென்னும் செம்பொருள் காண்பது **அறிவு**” என்பது திருக்குறள். இத்தகைய தவம் “பல்லூழி காலம் பயின்றரனை அர்ச்சித்தால் நல்லறிவு சற்றே நகும்” என்பதற்கிணங்க விளைவதாம். சரியை கிரியை யோகங்கள் ஞானத்திற்கு ஏதுவாம். சரியையாதி நான்கும் **சீலம் நோன்பு செறிவு அறிவு** எனவும் கூறப் படும். சீலத்தால் மால் (மயக்கம்) அகலும். நோன்

பால் வழி விளையும். செறிவால் இறைகோலம் காட்டும் ; அறிவால் ஆண்டாற்கு ஆருயிர் அடிமையாம். " **சீலம் இன்றி நோன்பின்றிச் செறிவே இன்றி அறிவின்றித்**—தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச் சுழன்று விழுந்து கிடப்பேனை—மாலும் காட்டி வழி காட்டி வாரா உலக நெறியேறக்—கோலங்காட்டி ஆண்டானைக் கொடியேன் என்றோ கூடுவதே" என்பது எட்டாம் திருமுறை. பழமே முடிந்த பயன். அரும்பாதிய ஏதுவாம். இதனை, " விரும்பும் சரியை முதல் மெய்ஞ்ஞானம் நான்கும்—அரும்புமலர் காய் கனிபோல் அன்றோ பராபரமே" என்ற தாயுமானுர் பாட்டுணர்த்தும். பன்னுதல், ஆதரித்தல், ஏத்துதல், பாடுதல் எனவும் இத்திறம் பேசப்படும். இந் நிலையினரே திருஞான சம்பந்தராதியோர். ஆதலால் தான், ஆளுடைய பிள்ளையார் முதலாயினோர்க்கும் முன்னைத் தவத்தால் ஞானம் நிகழலுற்றதென்பர் பெரியோர். இதனை வலியுறுத்தற்கே, " முன்னம் நீபுரி நல்வினை " என்பதும், " ஏடுடைய மலரால் முனம்நாள் பணிந்து ஏத்த அருள் செய்த " என்பதுமாகிய அகச் சான்றுகள் காட்டுவர். கண்ணப்பர் முதலிய அடியார்களும் இத் திறத்தரேயாவர். கண்ணப்பர், தேவுமால் கொண்டதற்குக் காரணம் கூறவந்த நம் சேக்கிழார் பெருமானும், " முன்புசெய் தவத்தின் ஈட்டம் முடிவிலா இன்பமான அன்பினை எடுத்துக்காட்ட " என்று எடுத்துக் காட்டியுள்ளமை காணலாம்.

**சரியை**

இனிச் சரியையாதி பற்றிய விளக்கமும் சுருக்கியுரைப்பாம். உயிர்கள் சோபான முறையால் சிவ

பிரானை அறிந்துய்யவேண்டும். இறைவற்குத் தூலம் **சூக்குமம் அதிசூக்குமம்** என மூவடிவாம். இவற்றிற் கான வழிபாட்டு முறைமையே வேதாகமங்கள் விரித் துரைப்பன. நுண்ணுணர்வில்லார், **சகளம்** எனப்படும் **தூல** வடிவையே பொருளென உணர்ந்து **காயத் தொழில்** மாத்திரையால் ஆகமவிதிப்படி வழிபடுவர். இதுவே சரியையாம். இதனால் பக்குவம் தொடங்கலுறும்.

## கிரியை

பக்குவம் வரவர நுண்ணுணர்வு விளையும். இதனால், **சகளநிட்களம்** எனப்படும் **சூக்கும** வடிவமே பொருள் என்ற எண்ணம் திண்ணப்படும். சகளம் வழிபடுதற் கிடமான திருமேனி என்ற உணர்வுதிக்கும். இதனால் **புறத்தொழிலானும், அகத்தொழிலானும்** விதிப்படி வழிபடுவது கிரியையாம்.

## யோகம்

பக்குவ விசேடத்தால் அதிநுட்ப உணர்வுண் டாகும். **நிட்களம்** எனப்படும் **அதிசூக்கும** வடிவமே பொருள்; சகளமும் சகள நிட்களமும் வழிபாட்டிட மாய திருமேனி என்ற நுண்மை புலப்படும். இவ்வா றுணர்ந்து **அகத்தொழி**லால் மட்டும் விதித்தவாறு வழி படுவது யோகமாம்.

## ஞானம்

மேற் கூறிய மூன்றன் முறையே அடிப்பட்டு வரவர நிகழும் பக்குவ முதிர்ச்சியால் உள்ளவா றுணர்வு விளங்கும். இதனால், அகண்டாகார நித்த

வியாபக சச்சிதாநந்தப் பிழம்பே சொரூபம்; மற்ற மூன்று வடிவும் தூலாருந்ததி நியாயமாக மேலதை உணர்தற்கும் வழிபடற்கும் ஏற்பட்ட திருமேனி என்ற உண்மையுணர்வு பிறக்கும். இதனால், காயத் தொழில், மனத்தொழில் இரண்டையும் கைவிட்டுக் கேட்டல் முதலிய **அறிவுத்தொழில்** மாத்திரையால் வழி படுவது ஞானமாம்.

இந்தச்சோபான முறையால் ஒன்றற் கொன்று அதிகமாம் ஞானமே முடிவாகிய ஞானமாம். இதன் பயனே சாயுச்சிய முத்தியாம். இந்த நான்கு முறையி னல் அறிவு நுணுகி வரவர அறியாமையாகிய மலமும் அம்முறையே தேய்ந்து தேய்ந்து வரும். இதனால் ஞான மாகிய உண்மைப்பயன் கிட்டும். இவ்வளவும் முன்னே விவரிக்கப்பட்ட தவத்தால் வருவனவாம். இந்தப் பக்குவம் உண்டாதற் பொருட்டு உயிரின் கேவலக் கிடையினும் உடனாய் நின்று நோக்குவது முதல்வனது கருணை நோக்கமேயாம். இதனைச் சத்திநிபாதத்தின் அடிப்பாடு என்பர். இவ்வடிப்பாடுதான் உயிரின் வல்லுதற்குக் காரணம் ஆகும். இங்ஙனம் உயிர் பக்குவமடைதற்கண் மலத்துக்கு அநுகூலமாய் நின்று நடாத்துவது *திரோதானசத்தி* எனப்படும். இது சிவத்தின் கருணைமறம் ஆம். இதுவே, மலம் பரிபாகம் எய்தியதும் தன்செய்கைமாறிக் கருணைஎனப்படும் **பரா** சத்தி ரூபமாய் ஆன்மாக்கள்மாட்டுப் பதியும். இதனையே *சத்திநிபாதம்* என்பர். இதுவும் படிமுறை யால் மந்தம் முதலாம் நால்வகைப்பட்டும் பல்வேறு திறப்பட்டும் நிகழும். சத்திநிபாதம் என்னும் சொல் **சத்தியினது வீழ்ச்சி** எனப் பொருள் தரும். நி என்பது ஏற்றமாக என்னும் பொருள் படுவதோர்

இடைச்சொல் என்ப. ஓரவைக் களத்தில் கல்வீழ்ந்தால் யாவரும் அஞ்சியகல்வர். அவ்வாறே, சத்திநிபாதம் நிகழ்ந்த மாத்திரையே ஆன்மாவானது, மனைவி மக்கள் முதலிய உலகத் துழனியின் அச்சம் நிகழ்ந்து, உலக வாழ்க்கையின் வெருவி, "வேண்டேன் மனை வாழ்க்கை;" "கொடு உலகம் காட்டேல்" என்பவற்றிற்கிணங்க அகன்று போந்து, உண்மைக் குரவனை நாடிச் செல்லும். இதுவே உண்மைத் தேட்டமாம். இதனால் ஞானத்திற்குக் காரணம் சரியை முதலியன என்பதும், சரியையாதிகட்குக் காரணம் மந்ததர முதலிய சத்திநிபாதம் என்பதும் தெற்றெனப் புலப்படும். இத்தகைய நிலை எய்தப் பெற்றவர் யாவராயினும், அவர்கட்கே ஆண்டவன் குருவடிவாய்த் தோன்றியருளுவன். இங்ஙனம், தோன்றுதலும் அடிப்பட்டு நிற்கும் அம் முதல்வனது கருணைத் திறத்தின் விளைவென நாமறியலாம். இங்ஙனம் கருணைமிகுதியுடைமையை உணர்த்தும் பொருட்டே "தானே குருவுமாய்" என்றார் நம் மெய்கண்டதேவர். முதல்வன், வேற்றுமையின்றி உடலின் கண் உயிர் போல்வதொரு கலப்பினால் ஆன்மாவே திருமேனியாக வுடையவனாய் நிற்கிறான். இதனை, "அவையே யாதல்" என்பதனால் தெரிவிப்பர். சகலர்க்குக் குருவடிவாய்ப் பின்னுணர்த்துவன் என்பர் இச் செய்தியை ஞானநூலில். மானுடப் போர்வையின் மறைந்து நின்று உபதேசமுகத்தால் உணர்த்துவர் என்பது இதன் செய்தியாம். மூவகை உயிர் வருக்கங்களையும் விரவி நிற்கும் மூலமலமாகிய அறியாமைப் பொருள் ஒன்றே. எனினும், அவற்றின் பக்குவ அபக்குவங்கள் தாரதம்மியம் உடையன. ஆதலால், இவற்

றைப் பிணிக்கும் மலசக்திகள் சூக்குமம், தூலம், தூலதரம் ஆகிய பல்வேறு வகையவாம். சகலராகிய நம்மனோர்க்குள்ள மல சத்தி தூலதரமாம். சகலர்க்குப் பிணிப்பு மூவகையாம். ஆகையினால், உபதேச முகத்தாலும், நூன்முகத்தாலும், அநுபவமுகத்தாலும் பலவேறு வகைப்பட வலியுறுத்தி உணர்த்தவேண்டியுள்ளது. ஆதலால், குருமூர்த்தியாகிய முதல்வன், சகலர்களை அவரவர் பக்குவ நிலைக்கேற்ப ஏற்படும் சத்திநிபாதப் படிமுறையில் மந்ததரத்தால் **சாதகநிலை**யும், மந்தத்தால் **ஜீவன்முத்திநிலை**யும், தீவிரத்தால் **அபரமுத்திநிலை**யும், தீவிரதரத்தால் **பரமுத்திநிலை**யும் பயந்தளிக்கின்றான். இவ்வளவும் தீக்கை முகத்தால் செயற்படும். எனவே முதல்வனாகிய ஆசாரியன், ஞானகுருவின் தேட்டம் மிகப்பெற்ற ஆன்மாவின் பால் பேரன்புவைத்து, ஞானதீக்ஷைக் கிரமங்களால் மலம் மாயை **கன்மங்களைப் போக்கி**, ஆன்மாவின் உண்மை இன்னதென **உணர்த்தி**, ஆன்மாவுக்குள்ள சுதந்தரக் குறைபாட்டினைக் **காட்டி**, ஞானத்தைத் **தரிசிக்கச்செய்து, ஒருதன்மையாக்குகின்றான்** அவன். இந்த ஒன்றுபட்ட நிலை எய்தியவர்கள் சிவஞான ஐக்கியத்தினால் பிரபஞ்சத்தையும், தம்மையும் மறந்திடுவர். அதன்பின், சிவசொரூபந் தானே பிரகாசித்து ஒரு நீர்மையராவர். இத்தகைய நிலை எய்தப் பெற்றார்க்கு எல்லா விசேடங்களும் விளையும். இதனையே இவ்வாசிரியர், "**ஐயன் அருட்கடைக்கண் ஆண்டதற்பின் அப்பொருளாய்ப் பைய விளையும் எனப்பார்**" என்றுரைத்தருளினர். தம்மநுபவமே சாக்ஷியாதலின் **பார்** என்றார். இதனால் சத்திநிபாதத்தின் இருவகை நிலைகளும் கூறப்பட்டமை காணலாம். இங்க நிலை

யினை மேற்கொண்டு நிற்றல் எவர்க்கும் உரியதாகும் என்பது கருத்தாம்.

---

## செய்யுள் — 14

### சிவத்தோ டொருநீர்மையாதல்

உள்ள முதலனைத்தும் ஒன்ற உருகவரில்
உள்ளம் உருகவந் துன்னுடனும்—தெள்ள
உணருமவர் தாங்கள் உளராக என்றும்
புணரவர நில்லா பொருள்.

### கருத்துக்கள்

1. சிவம் பிரகாசித்தல்.
2. பாவனைக் குலைவு அடைதல்.

### விளக்கம்

அரிய அமுதத்தினைத் தக்க முயற்சிவழி நின்று மிக்கார் துணையால் அடையப் பெற்றானொருவன், மறித்துத் தான்செய்த முயற்சிகளையும் தன் திறமை-யுமே மதித்து மகிழ்வானாயின் அவன் அமுதத்தைச் சுவைத்தின்புறுதல் இயலாது. முயற்சிகளை மறந்து, துணைநின்றார் கூறியாங்கு அமுதத்தைப் புசித்துக் கொண்டிருப்பின் இன்பத்தே அழுந்திக் கிடப்பன். துன்பமே இராது. துன்ப வருவாயும் ஏற்படாது. தன் திறலினையே எண்ணும்போது மகிழ்வுண்டாவது உண்மையே. ஆனால் இவ்வளவு திறனும் அமுதப் பேற்றின்பொருட்டே என்பதை மறத்தலாகாது. திறனை மதித்துக் கிடக்கும்போது விளையும் மகிழ்வு,

அமுதத்தைச் சுவைத்துக் கிடக்குங்கால் எழும் ஈறிலா மகிழ்வுக்கு இணையாகாது. வீட்டின் வாசல் எவ்வளவு அழகுடையதாயினும், அந்த இடம் உண்டுறங்கிச் சுகித்தற்கு இடமாகாது. வாசலிலிருக்கு உள்ளிடத்தை அடைந்தால் மேற்சொன்ன சுகந்துய்த்துக் கிடக்கலாம். இவ்வாறே ஆன்மாவானது, அடிப்பட்ட சிவகருணை மறத்தால் தூண்டப் பட்டுப் பிரபஞ்ச அநுபவங்களின் இயல்பு களைப் படிப்படியாய் உணர்ந்து நல்லறிவு தலைப் படலுறுகிறது. தத்துவங்களையும் மலமுதலியவை களையும் களையும் எண்ணத்தை மேற்கொள்ளுகிறது. அப்பால் பற்பல பிறப்புகளிலும் பண்ணிய சிவபுண்ணி யப் பேற்றால் இருவினை யொப்பாதிகளை எய்தப் பெறு கின்றது. இங்நிலையில் உண்மைச்சரியை கிரியை யோக வழியில் செல்லுகின்றது. இச்செலவினால் ஞானமேற்படத் தொடங்குகிறது. இந்தத் தறுவாயில் சிவகருணை எனப்படும் அருள்விளக்கம் ஏற்படுகிறது. இவ்வருள் விளக்கமே ஞானசாரியனால் தீக்ஷை உபதேசங்களைச் செய்விக்கிறது. இந்தநிலை, கதிரோ னுதயத்தின் முன் ஏற்படும் கிழக்கு வெளுத்தல் நிகர்ப்பதாகும். குரு திருவருளுக்கிலக்காகிய பின்னர், தத்துவங்களின்வேறும் தன்மையும், தன் சுதந்தர ஈனத் தன்மையும் தோன்றும். இதனால், அளவுகடந்த கசிவுள்ளம் பிறக்கும். இக்கசிவு சிவக்கலப்பினைக் கூட்டும். இங்ஙனம் கசிவும் கலப்பும் மிகுதலால் ஆன்மா ஏகனாகி இறைபணி நின்று அரன் கழலணை யும். இதனால், உயிர் சிவனருளால் சிவாநந்தத்தைப் புசித்தழுந்தும். இந்த நிலையில் பிராரத்துவ மெலிந் தொழியுமட்டும் இவ்வுலகிடை இருந்து பிறகு சிவ

சாயுச்சியத்தை எய்தும் ஆன்மா. இதனையே, முடித்துக்கூறு முறைப்படி இவ்வாசிரியர், " **உள்ள முதலனைத்தும் ஒன்ற உருகவரில் உள்ளம் உருகவந்து ஒன்னுடனும்** " என்று கூறிப் போந்தனர்.

இங்ஙனம், சிவானந்த அநுபவத்திலே அழுந்திக் கிடக்குமவர், இந்த நிலை மாறாமல் நிலைத்தல் வேண்டிச் செய்தக்கனவும் உள. அதாவது, ஐம்புல விழைவுகளில் திரும்பாதிருத்தல் முதற்கண் செய்யத் தகுவதாம். உலகப் பேறுகளெவற்றையும் கான்றசோறென அருவருத் தமையவேண்டும். இதன்மேல், தலைதூக்குவது தற்போத முனைப்பு. இம்முனைப்பானது சிவத்தின் தன்னை வேறாக நின்று சுகிக்குமாறு தூண்டும். ஆன்மஞானம் சிவஞானத்தே ஐக்கியப்பட்டபின் இவ்வாறான எண்ணம் உதிக்கலாகாது. அங்ஙனம் உறியாமைதான் சிவம் பிரகாசித்ததற்கு லக்ஷணமாகும். தான் பெற்றதைப்பற்றிய கருத்தழிதலே ஒரு நீர்மைக் கான அழகாம். இவ்வாறன்றி, ஜீவபோதமுனைப்பினால் சிவத்தினைத் தெளிந்தறிய விசாரிப்பினும், பாவனை செய்யினும், ஆன்மபோதம் தனித்திடுதலால் ஆன்மானந்த மடைதல் கூடுமே யொழியச் சிவானந்தம் நிலைபெறாது. இதனால், கைக்கெட்டியது வாய்க் கெட்டாமற் கெடும் நஷ்டமே உண்டாம். அரும்பாடுபட்ட சிவயோக முயற்சி வீணாகும். ஆதலால் நம்மை மறந்து சிவமயப்பட்டுச் சிவானந்தத்தே அழுந்திக்கிடத்தலே உண்மை முத்திசாதனம் என நாமறிதல் தக்கதாம்.

கண்ணொளிக்குக் காட்சி விளக்கொளியை இன்றி அமையாது. காண்பன எல்லாம் அதன் செயலே.

இதனை அறிந்து, தான் என வேறு முனைக்குமாறில்லாமல் கண் அவ் விளக்கொளியின் அடங்கி நிற்பின், ஏனைய விடயமொன்றும் கண்ணுக்குத் தாக்குமாறில்லை. தன்னுடைய இச்சாஞானக் கிரியைகளின் தொழிற் பாட்டுக்கு முதல்வனது இச்சாஞானக் கிரியைகள் இன்றியமையாதென ஆன்மா தெரிந்து, நிகழ்வன யாவும் முதல்வனது இச்சையாதிகளின் நிகழ்ச்சியே எனக் கண்டு அம்முதல்வன் வியாபகத்துக்குள்ளாக அடங்கி நின்றால் பிரபஞ்சத்தாக்கிரா தென்பர். காட்டக் காண்பதாகிய கண்ணுக்கு உருவத்தைக் காணுமாறு பிரிப்பின்றி உடங்கியைந்து நின்று அதற்கு அதனைக் காட்டித் தான் காண்கின்ற ஆன்மாப் போலவே, அறிவிக்க அறிவதாகிய ஆன்மா, விடயத்தை அறியுமாறு முதல்வன் பிரிப்பின்றி உடங்கியைந்து நின்று அதற்கு அதனை அறிவித்துத் தான் அறிந்து வருவன் என்பது தெரிதலால் சிவாநுபூதி தலைப்படும். பெத்தம் முத்தி என்ற இருவகை நிலையினும் சிவமே காட்டியும் கண்டும் உபகரிக்கின்ற தென்பது தெளியப்படல் வேண்டும். ஆதித்தன், முன்பு மேகபடலத்துள் மறைந்து தனது ஒளி சுருங்கிச் சிறிதே விளங்கிப் பிறகு மேக படலத்தை வாயுத் துரப்ப அதனால் அது சத்தி மடங்கி விட்டுநீங்கியவழி அவ்வொளி தானே எங்கணும் விரிவாய் விளங்கும் முறை போல, ஆன்மாவும் முன்பு மலத்தின் மறைப் புண்டு தன் அறிவு ஏகதேசமாய்ச் சிறிதே விளங்கிப் பிரபஞ்ச விடயத்தைச் சுட்டி சுட்டி யறிந்து அதில் அழுந்தும். பிறகு, முதல்வன் திருவருள் அம் மல சத்தியைக் கெடுத்து அடக்கியவழி அவ்வறிவே பூரண மாய் விளங்கிக் கப்பின்றி அம் முதல்வன் திருவடியைத்

தலைப்பட்டு அந்தஞேயத்தில் அழுந்தி . யின்புறும் என்பது கருத்தாம். இங்ஙிலேகளே உணராது ஜீவ் போத முனைப்புடையார் ஆன்மாநந்த வழியே நிற்பின், அவர்களுக்கு அந்தப் பொருள் எப்பொழுதும் பொருந்துகைக்கு முன் நில்லாது என்பது தெளிவாம். இதனே, **"தெள்ளி உணருமவர் தாங்கள் உளராக என்றும் புணரவர நில்லா பொருள்"** என்னும் இப் பாடற்பகுதி உணர்த்துவதாகும்.

## I தொகுப்புரை

### 1. உபதேசப்பகுதி

இதுகாறும் இத்திருக்களிற்றுப்படியாரில் பதினுலு திருவெண்பாக்கள்வழி விளக்கம் கூறப்பட்டது. இந்தப் பதினன்கு பாடல்களும் **உபதேசப்பகுதி** எனப் படும். ***திருவுந்தியார்*** நூலின் 1, 2, 3, 4, 5, 6, 7 ஆம் பாடல்கள் கூறும் கருத்துக்களே இந்நூலின் 4 முதல் 14 ஆம் பாடல் வரை உள்ள வெண்பாக்கள் தெரிவிப்பனவாகும். திருமந்திரத்தே உபதேசம் என்னும் பகுதி போல்வது இந்நூலின் இப்பகுதி. சூக்குமமாக அறியவல்லார்க்கு இவ்வுபதேசப் பகுதியே அமையும். இனி, இந்நூலில் வகுத்தும் விரித்தும் கூறப்படுவனயாவும் இப்பகுதியுள் கருக்கொண்டு கிடக்கின்றன என்றல் தகும். முழுமுதற் பொருளுண்மை, ஆன்ம இயல்பு, பாசலக்ஷணம், முதல்வன் கருணைத்திறம், ஆன்மா பாசக்ஷயமும் சிவப்பேறும் எய்தல், சிவாநந்தாநுபவம் முதலிய செய்திகள் பலவும் இவ்வுபதேசப்பகுதியில் கூறப்பட்டுள. சிவம் அம்மையப்பராக விளங்குகிருர். அவரே ஆன்மாக்களைத் தம்மைத் தலைப்படு நெறியில் செலுத்துகிருர்.

ஆசானுபதேசத்தால் பாச பசு ஞானங்களகலும். ஆசாரியனாகி வருபவன் அம்பலக்கூத்தனே யாவன். ஆசான் திருவுருவம் அருள்வடிவேயாம். அவனுரையின்றேல் ஆன்மாக்கள் ஏதும் அறிய இயலாது. ஞானநூல்களை ஓதுதல் நல்லதுதா-னெனினும், அதுவே ஞானனுபவம் விளைத்திடாது. சற்குருவின் வசனமே அநுபூதி பயக்கும் வல்லமை வாய்ந்தது. குருவை நாம் சாமானிய மானிடராக எண்ணல் தவறாம். முதல்வனே குரு ஆவான். குரு உணர்த்துவது அநுபவமேயாவது. அநுபவமே உண்மையுணர்த்தும். ஆராய்ச்சியால் உண்மை புலனாகாது. அநுபூதிநிலை உரைப்பரிய நிலையாம். அநுபூதியுட்பட்டார் சிவபோகத்தே கலப்புறுவர். சிவபோக அநுபவிகளான சிவஞானியர், பசுகரணத்-தின்மேலாம் சிவகரண அதீதப்பட்டு நிற்பர். இவர் களால் செயற்கருஞ் செயல்கள் பல நிகழும். அவை யாவும் சிவன் செயலேயாம். சத்திநிபாதம் நம்மை முற்றிலும் நன்னெறிப்படுத்தும். உண்மைச் சீவன் முத்தர் எப்போதும் தம்மை மறந்து சிவத்தோ டொருமைப்பட்டு அவன் செயல்வழியொழுகுவர். யாவும் சிவன் செயல் என்றிருப்பதே அமைதி நிலையாம் இதுவே சிவாநந்தாநுபவம் எனப்படும். இதன்மேல் சிவசாயுச்சியமேயாம். இதுவே சித்தாந்த சைவ நெறி. இதுவே. உண்மைமுத்தி நிலையாம். ஆதலால், இச்சித்தாந்த சைவநெறி மேற்கொண்டு சிவ புண்ணிய மியற்றி, ஞானசாரியரால் தீக்கை செய்யப் பெற்று முத்திப்பேறடைதலே மானிடப் பிறப்பின் முடிந்த குறிக்கோளென நாம் தெளிதல் தக்கதாம். இவைகளையே இப்பதினன்கு திருப்பாடல்களால்

இவ்வாசிரியர் கட்டுரைத் தருளியிருக்கின்றார். இனி மேல், **சிவதன்மம் — சிவயோகம் — சிவஞானம் — ஆசாரியநிட்டை** எனப் பகுத்து இந்நூலினை விவரிக்கின்றார் இவ்வாசிரியர் என்னலாம். இனி, அடுத்துச் சொல்லப்படுவது சிவதன்ம விவரமாகும். அதனை இனிக் காண்போம்.

---

## II உபாய இயல்

## 1 சிவதன்மப் பகுதி

### செய்யுள் — 15

### அரன் தலைப்படுதல்

**நல்லசிவ தன்மத்தால் நல்லசிவ யோகத்தால்**
**நல்லசிவ ஞானத்தால் நானழிய—வல்லதனால்**
**ஆரேனும் அன்புசெயின் அங்கே தலைப்படுங்காண்**
**ஆரேனும் காணா அரன்.**

### குறிப்புக்கள்

1. 'நான்' (அகங்காரம்) அழிதற்கான உபாயங்கள்.
2. அன்பு செலுத்தல்.
3. அரன் தலைப்படுதல்.

### விளக்கம்

இதுகாறும் **உபதேசம்** என்னும் தலைப்பின்கீழ் ஒரு பதினான்கு திருவெண்பாக்களில் குற்றமற்ற **சைவ**

**சித்தாந்தச் செந்நெறி** இன்னதெனச் சுருங்கச்சொல்லி விளங்கவைத்தருளிய நம் நாயனுர். இனி அச் செந்நெறி பற்றிச் செம்பொருளைத் தலைப்படுமாறு இன்னதென எம்போன்ற மந்த மதியினர்க்கும் புலப்படுமாறு விளங்கக் கூறியருளலாயினர். அந்நெறிகளை அவர் கூறிய வழியிலே கைக்கொண்டு ஒழுகவல்லார். எடுத்துள்ள இவ்வொரு பிறவியிலேயே பிறவாப் பெரு நெறியினை எய்துதல் திண்ணமாம். பல்லாயிரம் ஆண்டுகளாகப் பழகிப் பழகிக் கைவந்ததான குரு பாரம்பரிய அநுபூதி நெறியே இச் சித்தாந்த மார்க்கமாதலால், பற்பல சமயங்களிலே புகுந்து உண்மையின்னதென உணர வாராது கெட்டொழிதல் வேண்டுவதில்லையாம். முற்றிலும் சற்காரிய வாதமே பற்றி, முப்பொருளுண்மையினை ஐயமறப் புலப்படுத்தி ஆசானருளுக்கிலக்காக்கி ஆன்மகோடிகளை ஈடேற்றுதற்கெனவே இச் சித்தாந்த சைவநெறி முழு முதல்வனால் உபதேசிக்கப்பட்டுத் **தேவ பூத அபிடேக** பாரம்பரியமாகத் தொடர்புவிடாதே நிலவி வருத லொன்றே இச் சன்மார்க்கத்தின் மெய்ம்மை புலப் படுத்துவதாகும். எல்லாச் சமயங்களின் எல்லா நல்ல தத்துவங்களும் இதன்பாலுள. இதன்பாலில்லாத தத்துவமாக எதுவும் எச்சமயத்தினிடமும் இல்லை. அளவைக்கு எவ்வகையானும் மாறுபடாதது இச் சமயமே. இதுவே நம் நாட்டின் தொல்பெரும் சமய மாகும். ஆதலால் இந் நெறிவழி நின்று நன்றுணர்த்தும் சிவஞானச் செல்வர்களுடைய உபதேசமே பிரமாண மாகக் கொண்டொழுகலே சீரியதெனக் கொள்வோ-மாக!

சிவத்தை எய்திப் பவத்தை போக்குதலே மக்களா வார் கைக்கொள்ள வேண்டும் கடமையாகும். இதனை யாவரும் மேற்கொள்ளும் பொருட்டாக வேதாகம மெய்கண்ட சித்தாந்த சைவம் நான்கு மார்க்கங்களை வகுத்துள்ளது. அவை, சரியை கிரியை, யோகமும் ஞானமுமாம். இவற்றைச் சற்புத்திரமார்க்கம், தாச மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் எனவும் இசைப்பர். இவைகளைத் தமிழால் சீலம், நோன்பு, செறிவு, அறிவு எனவும் செப்புவர். இவற்றுள் சரியை யும், கிரியையும் ஒன்றுக்கி இவ்வாசிரியர் **சிவதன்மம்** என்பர்; யோகத்தைச் **சிவயோகம்** என்பர்; ஞானத்-தைச் **சிவஞானம்** என வழங்குவர். இங்ஙனம் நாலு பாதத்தை மூன்றுக்கி இந்நூல் இசைக்கும். இவ் வொவ்வொரு நெறியினையும் எவ்வகையில் அநுட்டிப்ப தெனவும், அவ்வுபாயங்களால் விளையும் பேறு (பயன்) களையும் இனி விவரித்து வரும் பாடல்களில் பகருவர். ஆதலால், பதமுத்தி — உண்மைமுத்திகளை இந்நூல் வாயிலாக நன்குணர்தல் கூடும். கல்வியில் தேர்ச்சி யடைய விரும்பும் மாணவன் முதல் வகுப்பிலிருந்து படிப்படியாகப் படித்துத் தேறியே உயர்வகுப்பினை எய்துவன். அப்போதுதான் கல்வி உறுதிப்படும். அவ்வாறே சரியை முதல் தொடங்கி ஞானநிலைக்கு ஏறவேண்டும். இம்முறைமை கருதியே முதற்கண், சரியை கிரியை இரண்டினையும் அகப்படுத்துள்ள சிவதன்ம உபாயத்தினை வகுத்துரைக்கலாயினர் இவ்வா சிரியர். இச்சரியையாதி மார்க்கங்கள் உண்மையும் நுண்மையும் நன்மையும் திண்மையும் பொருந்தியவை யாதலால், இவற்றை இச் செய்யுட்கண், **நல்ல சிவதன் மத்தால்—நல்ல சிவயோகத்தால்—நல்ல சிவஞானத்தால்**

என விசேடித்துரைத்துள்ளார். முழு முதற்பொரு ளாகிய சிவத்தையே இந்நெறிகள் அடைவித்தலால் சிவ சப்தம் ஒவ்வொன்றோடும் புணர்த்துக் கூறப்பட் டுள்ளது. புறப்பூசை, அகப்பூசை, அறிவுப்பூசை என்ற முறைமையுணருமாறு சிவதன்ம முதலாகக் கிடக்கை முறை அடுக்கப்பட்டுள்ளது. ஞானமல்லால், முத்தி கிட்டாது. இதுபற்றியே, சிவஞானம் இறுதியில் ஏற்றங்கருதியும் இன்றியமையாமை கருதியும் வைக்கப் பட்டுள்ளது. சிவதன்ம சிவயோகங்களைச் செய்யுளின் ஓரே வரியிலும், சிவஞானத்தினை அடுத்தவரியிலுமாக அமைத்துள்ளமையால், முன்னவை இரண்டும் ஞான ஏதுக்களாம் என நாமறியலாம். மற்றும், சிவஞானம் பெற்ற தன்பயனாக முதற்கண் நிற்பது யான் எனது என்னும் செருக்கறுதலாம். "யான் எனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க்குயர்ந்த உலகம்புகும்" என்பது தேவர் மொழி. வானோர்க்குயர்ந்த உலகம் என்றதனால் சிவசாயுச்சியம் உணர்த்தப்படுகிறது. இக் கருத்துக்களை நாமுணருமாறு இச் செய்யுளில், "**நான் அழிய வல்லதனால்**" என்றார் ஆசிரியர். **வல்லதனால்** என்றமையால் நானென்னும் செருக்கறப் பெறுதல் எளிதன்றென்பது புலப்படும். மற்றும், இந்நெறி யன்றி மற்றை வேள்வியாதிய நெறிகட்கு இவ்வன்மை யில தென்பதும் புலப்படும். கர்த்தாவின் ஏவலே யாவும் என்பதும், தம் சுதந்திரம் ஏதுமில தென்பதும், அவன் கைப்பட்டு நிற்ற லொன்றே ஆவது என்பதும் சிறந்தவன்மையாகும். இவ்வன்மை கர்த்தாவை நம்மாட்டணுகச் செய்கின்றது. இங்ஙனம் முதல்வனை நம்பாலணுகுவிப்பதனினும் பெருவன்மை ஏதும் இலது. ஆதலாலும் **வல்லதனால்** என்று

ரெனினும் பொருந்தும். இந் நெறியினை யாரும் மேற்கொண்டொழுகலாம் ; சிவநெறிபற்றித் தீக்கையுற்றார் எவரும் இவ்வுபாயங்களை மேற்கோடற்குரியர் என உணர்த்துதற்பொருட்டே **ஆரேனும்** என்றார். அன்பேசிவம் என்பராதலாலும், அயரா அன்பு யாண்டும் வேண்டுவதாதலாலும், முத்தி நிலையினும் பத்தி நிகழ்தலுண்மையானும், **அன்புசெயின்** என்றுள்ளார். எண்ணமும் பேச்சுமன்றிச் செயலெல்லாம் அன்பின் வண்ணத்ததாக இருத்தல் வேண்டுமென்பார் **செயின்** என்றார். இருள் நீக்கமும் ஒளி வெளிப்பாடும் ஒருங்கே நிகழ்வதுபோல, ஆன்மா, பற்றற்று அருள் வயப்பட்டு இறவாத இன்ப அன்புமீதூரப் பெற்ற போதே சிவக் கலப்புறுதலின் **அங்கே** எனலானர். கும்பிட்ட தெய்வம் குறுக்கே எதிர்ப்பட்டாங்கு, நாம் கருதியுள்ள முதல்வன் தானே நம்மை அணைந்தேற்றலின் **தலைப்படுங்காண்** என்றார். இங்ஙனம் தலைப்படுதல் கொண்டு முழு முதல்வன் சால எளியன் போலுமென நாம் எண்ணுமைப் பொருட்டும், அவனது அருமை உணர்தற் பொருட்டும் " **ஆரேனும் காணா அரன்** " என்றுள்ளார். சிவபோகம் நுகர்வுக்குரியதேயன்றிச் சிவத்தினைப் பிரித்துத் தனித்து நின்று ஆன்மா காண்டல் ஒருபோதும் இல்லை என்பதைக் **காணா** என்ற சொல் தெரிவிக்கும். இறைவனூலாகிய வேதமும் எட்டாத் திருவடியுடையான் முதல்வனாதலின் **ஆரேனும்** என்றார். இதனால் பிரம விட்டுணுக்களும் அறிதற்கரியர் என்பது உணரலாகும். நம்முடைய மலமெல்லாம் பரிகரித்துச் சிவமாக்கி யாட்கொள்பவன் ஆண்டவனாதலின் **அரன்** என்றருளியுள்ளார் என்னலாம். இதுகாறும் கூறியவதனால்,

சிவத்தைக் கருத்தாவாகக் கொள்ளாத சமயங்களிலே நின்று அற்பப் பயனும் பதமுத்திகளும் கொண்டு மீண்டும் பிறப்புற்றுழலாமல், சிவத்தையே நோக்கின சித்தாந்த சைவ நெறியிலே புக்கு மேற்சொல்லப் பட்ட நெறிவழியொழுகிச் சிவனைக் கூடும்படி சாதிக்க வேண்டும் என நாம் தெளிதல் தக்கதாம்.

## செய்யுள் — 16

### பவகன்மம் நீங்க நோற்றல்

(சிவதன்மப் பாகுபாடு)

**மெல்வினையே என்ன வியனுலகில் ஆற்றரிய
வல்வினையே என்ன வருமிரண்டும்—சொல்லில்
சிவதன்ம மாம்அவற்றிற் சென்றதிலே செல்வாய்
பவகன்மம் நீங்கும் படி.**

**கருத்துக்கள்**

1. சிவதன்மத்தின் இரு பிரிவுகள்.
2. கன்மத்தைப் பயன் கருதாது புரிதல்.

**விளக்கம்**

தர்மம் என்பது மனிதர் செய்யத்தக்கதும், செய்ய வேண்டுவதுமான கடமையைக்குறிக்கும். நாம், நமக்கும் பிறர்க்குமாகச் செய்யத்தக்கவையான கடமைகள் பற்பலவுள். இவைகளைச் செய்யாவிடில் சமுதாய வாழ்வு நடைபெறாது. நமது சித்தமும் சுத்தி பெறாது. சித்த சுத்தியும், சூழ்நிலை அமைதியும் இல்லா

விடில் ஞானேதயத்துக்கு வழி ஏற்படாது. ஞானே தயமே நமது முதற்படியான குறிக்கோள். ஆதலால், கன்மம் தக்கமுறையில் செய்யப்பட வேண்டுவதா யிற்று. தக்க கருமம் செய்யுமாற்றினையே சரியை கிரியைஎனச் சித்தாந்தம் செப்புகிறது. இவ்விரண்டி னுலும் விளைவது தன்மமேயாகலின் சிவதன்மம் என ஒன்ருக இவை பேசப்படும். இறையன்பு முகிழ்த்து மலர்வது இச்சிவதன்ம நிலையில்தான். இத்தன்ம கன்மம் செய்யும் எளிமைப்பாட்டினுலும், அருமைப் பாட்டினுலும் இருதிறப்படும். எளிமையாகச் செய்யத்தக்கவற்றை **மெல்வினை** என்றும், அரிதிற் செய்யலாமவற்றை **வல்வினை** என்றும் கூறுவர். இவ் வுலகில் எங்கு வாழ்வோரும் இவ்விருதிற வினைகளை ஆற்றியே தீரவேண்டும். உலகமோ பெரிது. ஆதலால், நமக்கு உலகின்மாட்டுள்ள கடமையும் பெரி தாம். '**தனக்கு**' என்னும் பற்றினைத்தேய்த்துப் '**பிறர்க்கு**' என்னும் தியாக உணர்வினை இக் கடமைகள் விளைவிப்பதால் நமது மடமை நீங்கலுறு கின்றது. இதனுல், சரியையும் கிரியையும் சிவ தன்மத்துள் அடங்குமெனவும், இச்சிவதன்மம் மெல்வினை, வல்வினை என இருவகைப்படும் எனவும் அறிதல் தக்கதாம். இதுகுறித்தே, "**மெல்வினையே என்ன வியனுலகில் ஆற்றரிய—வல்வினையே என்ன வரும் இரண்டும் சொல்லில் சிவதன்மம் ஆம்.**" என்றனர் ஆசிரியர். சிவனை வழிபடத்தக்க காரியமாக இருத்தல்பற்றிச் சிவதன்மம் எனப்படலாயிற்று.

இத்தகைய சிவதன்மத்தைச் செய்தலிலே மனம் நாட்டங் கொள்ளவேண்டும். மனம் நாடாவிடில் எக் கிரியையும் நடைபெருது. வித்திலிருந்து விளைவு

ஏற்படுவது போலவே, மனத்திலிருந்துதான் செயல் நிகழவேண்டும். மனம் நினைப்பதுவும் ஒரு செயலே யாகும். ஆதலால், செயலின் மூலத்தானம் மனமே. மனம், நன்னெறியிற் செல்லத் தலைப்படுமாயின் நலமே விளையும், இதனாலேயே, "நின்னை அறப்பெறுகிற்ப னேல் பெற்றேன் மற்றீண்டு துறக்கம் திறப்பதோர் தாள்" எனவும் பெரியோர் கூறலாயினர். மனத்தை இங்ஙனம் நன்னெறியில் திருப்புவதும் அரிதாம் என்பர், "சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற திறம் அரிது" எனவும், "பாழான என்மனம் குவிய ஒரு தந்திரம் பண்ணுவது உனக்கு அருமையோ" எனவும் தாயுமானார் கூறமாற்றால் மனம் அடங்கப் பெறுவதும் சிறந்ததொரு செயலென்பதை உணரலாம். மனம் என்பது அகங்கார மூன்றனுள்ளே தைசத அகங் காரத்தினின்று தோன்றும். அம்மனம் எதிர்ப்பட்ட தொரு பொருளைச் சித்தரூபமாய் நின்று பொருளின் உண்மையை அறியாமல், பிண்டமாக அறிந்து சிந்திக்கும். அம்மனமே அங்ஙனம் சிந்தித்த பின்னர், அப்பொருளின்கண் அதுவோ இதுவோ எனச் சந்தே கித்து நிற்றலால் மனம் என்றும், சிந்தித்து நிற்றலால் சித்தம் என்றும் இருவகைப்படும். இம் மனத்திற் கினமே ஞானேந்திரியங்கள். ஆகையினால் மனத்தை ஐயப்படு நிலையினின்று அகலவிட்டுச் சிந்தனைக்குள்ளாக்கி உண்மை உணரும் நிலைக்கு ஆக்கி, நாம் மேற்கூறிய சிவதன்ம வழியில் செல்லவிட வேண்டும். இந்த முதல் பிரயத்தனம் நன்கு நடை பெற வேண்டுமென நமக்குணர்த்தும் பொருட்டே, "**சிவதன்மமாம் அவற்றிற் சென்று**" என்றார் ஆசிரியர். செல்லுதலாவது மனம் ஈடுபடுதலாம்.

"மனமாரச்செய்" என்பதனுல் மனங்கலவாச் செயல் பயனற்றதென நாம் அறியலாம். பின்னர், மனம் ஈடு பட்ட அவ்வழியிலே இந்திரியங்களையும் ஈடுபடுத்திக் கடமைகளைச் செய்யவேண்டும் என்பது முறையாகும். இதனுலேதான், "**அதிலே செல்வாய்**" என்றூர் இப் பாடலில். செல்லச் செல்ல வழி தொலைவதும், குறியிடம் கிட்டலும் போலச் சிவதன்மத்தைச் செய்யச் செய்ய வினை தொலைதலும் சிவசாமீப்பியம் கிட்டுதலும் நிகழும் என நாமறியலாம். வினை என்பது பிறப்புக்கு ஏதுவாகிய வினையைக் குறிக்கும். சாயுச்சியமே குறிக்கோள் எனப்படுவது. இதற்குத் துணையா யுதவுவதே சிவஞானம் எனப்படும். சிவ தன்மம் ஒன்றிலே மனம் செல்ல வேண்டுமென்பது பற்றியே அவற்றிலே எனப் பன்மையாற் பகராமல் **அதிலே** என ஒருமையாற் கூறியுள்ளார்.

பிறப்பால் நாமடைவதெல்லாம் துன்பமே. பிற வாமையே இன்பமாம். "வேண்டுங்கால் வேண்டும் **பிறவாமை**" என்பர் தேவர். பிறப்பற நோற்றலே சிறப்பாம். இதனை நமக்கு நினைவூட்டும் பொருட்டே, "**பவகன்மம் நீங்கும் படி**" என்று முடிவிற் கூறி யுள்ளார். பலனைக் கருதாமற் செய்வது **தன்மம்**ஆம். பயனைக் கருதிடில் **கன்மம்** என்பர். இதனுல் நாம் பயனைக் கருதாமலே கருமத்தை ஆற்ற வேண்டும் என்பது கருத்தாம். **படி** என்ற சொல்லை வினைஎச்ச உறுப்பாகவேனும், ஏவல் வினைமுற்ருகவேனும் கொண்டு பொருள்படுத்திக் கொள்ளல்கூடும். **படி** என்பதை ஏவல் முற்ருகக்கொள்ளின், **பவகன்மம் நீங்கும்** என்பதைப் பயனுரையாக்கி, அத்தகையதொரு

சிவதன்மத்துறையில் மூழ்கு என்று பொருள் படுத்திக் கொள்ளவேண்டும். மூழ்குதலால் பாவம் தொலைத்தல் உலகநெறியாம். இப்பாடலால், நாம் யாவரும், மனத்தை நன்னெறிப்படுத்திப் பயனைக் கருதாமல் மெல்வினையென்றும், வல்வினைஎன்றும் கூறப்படும் சிவதன்ம நெறியிலே சென்று பவமறப் பெறவேண்டும் என்பது தெளியலாம். "முன்னம் முற்றிய உடலந் தோறும் சிறையுறப் புரிந்த பாவம் தீர்தல் அக் கணத்தில் திண்ணம்" என்பது சிவபுண்ணியத் தெளிவுநூல்.

## செய்யுள் — 17

### மெல்வினையின் முறைமை

**ஆதியை அர்ச்சித்தற் கங்கமும் அங்கங்கே**
**தீதில் திறம்பலவும் செய்வனவும்—வேதியனே !**
**நல்வினையா மென்றே நமக்குமெளி தானவற்றை**
**மெல்வினையே என்றதுநாம் வேறு.**

**கருத்துக்கள்**

1. கிரியா விதிக்குப் பக்குவனுதல்.
2. கிரியா விதியில் நிற்றல்.

**விளக்கம்**

மாணுக்கனை இச் செய்யுளில் ஆசிரியர் **வேதி-யனே!** என விளித்தல் காண்கிறோம். இவ்வாறு விளித்தலால், சரியை கிரியைகளை மேற்கொள்ள விரும்புவதற்கு முன்பே நல்லொழுக்கம் இருக்க

வேண்டும் என்பது தெரிகிறது. வேதாசாரம் என்பது வேதம் விதித்த நல்லொழுக்க நெறிநிற்றலாம். ஆசாரியன் உபதேசித்த வழி நிற்றல் ஞானசாரம் எனப்படும். ஞானசாரத்தின் முன் வேதாசாரம் நிலைத்தல் வேண்டும். இவ்வாறு கூறுதலால், **கொலை — களவு — கள் — காமம் —** பொய் என்னும் பாதகங்கள் ஐந்தும் ஒருவியவராக இருத்தல் வேண்டுமென்பது நியதியாம். பஞ்ச பாதகங்கள் நீங்காதவழி பஞ்ச சீலங்கள் தங்கா எனப் பிறரும் கூறுப. இதனாலேயே, "அல்லது செய்தல் ஓம்புமின்" என்றார் முன்னையோர். இங்ஙனம் பஞ்ச பாதகங்களும் இல்லாதவனை பிறகு, மனம் வாக்குக் காயங்களால் முறையே தெய்வத்தை எண்ணுதலும், தெய்வத்தைப் பற்றிப் பேசுதலும், தெய்வத்திற்குகந்த பணிசெய்தலும் வேண்டும். இதனால் திரிகரணசுத்தி ஏற்படுகின்றது. பாலை ஊற்றி வைத்தற்குச் சுத்தமான பாத்திரமே நல்லதும் ஏற்றது மாகும். அவ்வாறே திரிகரணசுத்தியுடையோரே ஞான நெறி செல்லுதற்கு ஏற்புடையோராவர். மேலும், எல்லா உயிர்களையும் தன்னைப்போலவே கருதும் உயிரிரக்கம் இருத்தல் வேண்டும். "எவ்வுயிரும் பராபரன் சந்நிதியதாகும் இலங்குமுயிர் உடலனைத்தும் ஈசன்கோயில்" என்ற கூற்றிற்கேற்ப ஜீவகருணை உடையோராயிருத்தல் ஞான மார்க்கத்திற்கொண்டு சேர்க்கும். அருளில்லார்க்கு அறிவுதயமாதல் இல்லை. அருளொழுக்கமொன்றினை வலியுறுத்தல் பற்றியே பவுத்த அமண சமயங்கள் மதிக்கப்படுகின்றன. அருளே வீட்டிற்கு வாயில். "அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை" என்பது தமிழ்மறை இதுவரை இயம்பியவாற்றால் **விலக்கியன ஒழித்தலும், விதித்தன**

**இயற்றலும், அருளறப் பூணலும்** வேத நெறியாமென நாமறியலாம். இவ்வளவும் சரியையாதி சன்மார்க்க நெறிப்படர்வோர்க்கு இருந்தே தீரவேண்டும். இஃதில்லார் சன்மார்க்க நெறிப்படரார். ஆதலால், வேதாகம நெறிபற்றிய நல்லொழுக்கம் இன்றியமையாதென நமக் கறிவுறுத்துமுகமாகச் சீடனை **வேதியனே** என் றழைக்கலுற்றார் என்க. இதனால் நாம் சரியை கிரியை நெறியுட் புகுமுன்பு **பாவ மற்றவராய்த் திரிகரணத் தூய்மை உடையராய், அருளுளம் படைத்தவராய்** ஆதல் வேண்டுமெனல் கூறப்பட்டதெனத் தெரிய லாம். சிவதன்ம நெறி இம் மூன்றினையும் அடிப்படை யாகக் கொண்டியல்வ தென்பது தெளிவாம்.

**சரியை** இன்ன தென்பது முன்பே கூறப்பட்டது. இதுவும் சரியையுட் சரியை முதலவாக நால் வகைப் படும். திருக்கோவில் அலகிடல் மெழுகல் முதலியன சரியையிற் சரியையாம். பரிவார மூர்த்திகளில் ஒரு மூர்த்தியை வழிபடல் சரியையிற் கிரியை என்பர். நெஞ்சிலே சிவபெருமான் உருவத் திருமேனியைத் தியானம் செய்தல் சரியையில் யோகமாம். இங்ஙனம் தியானபாவனையால் உறைப்புண்டாக, அதனால் உண் டாகும் ஓர் அநுபவமே சரியையில் ஞானமெனப்படும். சரியை நெறி நிற்பார் சமயதீக்கை பெற்றிருத்தல் வேண்டும் என்பர். எனவே சரியை நெறி ஞானத்தைக் காட்டும் ஏதுவாக இருத்தல் தெரியலாம் இங்ஙனம் சிவத்தையே நோக்கிச் சரியை முத்தி யேதுவாகச் செய்யப்படின் உண்மைக் கிரியையாகிச் சிவ புண்ணி-யத்தை விளைக்கும் என்பர்.

**கிரியை** இன்ன தன்மையதென்பதும் மேலே கூறப்பட்டது. இதுவும் கிரியையிற் சரியை முதலவாக

நால்வகைப்படும். இவற்றுள் கிரியையிற் சரியை யாவது சிவபூசைக்கு வேண்டப்படுவன யாவும் சேகரித்தலாம். கிரியையிற் கிரியையாவது சுத்திச் சடங்கெனப்படும். பூத சுத்தி (தன்னைச் சுத்தி செய்து கொள்ளுதல்) பூதம்: ஆன்மா ஆம்; தானசுத்தி (இடம்); திரவியசுத்தி (உபகரணங்கள்); மந்திர சுத்தி; இலிங்கசுத்தி எனச் சுத்தி ஐந்தினையும் செய்து-கொள்ளுதல் இரண்டா நிலையாம். கிரியையில் யோக மாவது, அகத்திலே இருதயத்தே பூசையும், நாபியிலே ஓமமும், புருவ நடுவிலே தியானமும் வகுத்துச் செய்த லாகிய அந்தரி யாக பூசையாகும். கிரியையில் ஞான மாவது இந்த உட்பூசையுறைப்பால் ஓர் அநுபவ உணர்ச்சி நிகழப்பெறுவதாம். இந்தக் கிரியையும் ஞானத்தைக் காட்டவல்லதாகும். இதனில் யோகம் போலும் ஒருசார் உட்பூசைக்கிடமிருத்தலால், கிரியை, யோகம் என்னும் இரண்டற்கும் விசேட தீக்கை உரித் தென்ப. சரியை கிரியை யோகங்களைக் கீழ்நெறி எனவும், ஞானத்தை மேலான நெறி எனவும் கூறுவர். இக் கீழான நெறிகள் மேலான நெறியிற் சேர்க்கும் பெற்றியன எந்தத் தெருவும் முடிவாக ஆலய வீதியிற் கொண்டு சேர்ப்பதுபோலும் இந்த நெறிகளின் அமைப் பிருத்தல், ஆலய வீதியிற் செல்லாமல் ஆலயத்துட் செல்ல இயலாது. அவ்வாறே ஞானமாகிய மேலான நெறியை அடையாமல் முத்தி பெற முடியாதென்க. சரியை முதிர்ச்சியால் கிரியை அமைவதாகும். சரியை யானது ஒருவனை உள்ளபடி சிவனை அர்ச்சித்து வழி படத்தக்க கிரியா விதிக்குப் பக்குவனுக்கும். கிரியை யானது அவனை உள்ளத்தே சிவனை அர்ச்சித்து வழி படுகிற கிரியா விதியுடையவனுக்கும். இவை

நல்ல வினைகளாம். எளிதாகச் செய்யப்படும் செயல் களுமாம். இவற்றால், காயம், வாக்கு, மனம் மூன்றும் சிவவழிபாட்டில் ஈடுபடுதலைக் காணலாம். இது பற்றியே, "ஆதியை அர்ச்சித்தற்கு அங்கமும், அங்கங்கே தீதில் திறப்பலவும் செய்வனவும் நல் வினையாம்" எனவும் நமக்கும் எளிதானவற்றை மெல்வினையே என்றது நாம் எனவும் கூறலுற்றார் ஆசிரியர். நமக்கும் என்றமையால் ஆசிரியன் சீட னிடம் கொண்டுள்ள நன்மதிப்பையும் ஆர்வத்தினையும் நாம் அறியலாம். திருவலகிடுதல் முதல் திருமந்திரம் செபிக்கை ஈறாகிய சரியையும், சிவார்ச்சனை உள்ளத்தே புரிதலாகிய கிரியையும் சிவார்ப்பணமாகவே புரியப் படுதலாலும், பயன் விருப்பில்லதாதலாலும், புகழ் பொருள் முதலிய விரும்பும் உலகப் பொருள் நோக்கிச் செய்யப்படும் உபாயக் கிரியை போல்வதன்று என நமக்குணர்துவான் ஆசிரியர் வேறு என்று கூறியுள்ளா ராவர். இதுகாறும் கூறியவாற்றால் மெல்வினை இன்ன தென்பது விளக்கப்பட்டது. இவற்றிற்குக் கூறப்படும் சாயுச்சியங்கள் புவனபதிகளால் அதிட்டிக்கப்பட்டு அப்புவனபதிகள் புரியும் அதிகாரங்களை அவர் போலவே செய்து வாழ்தல் ஆகும் என்பர். பிறகு புவியின்கண் பிறந்து சிவனிடத்தேயும் அடியாரிடத் தும் மிகுந்த பற்றுடையராகித் தொண்டாற்றுவர் என்று கூறப்படும். இத்தகையார் செயலை அடுத்துவரும் பாடல்களிற் பார்க்கலாம்.

## செய்யுள் — 18

### வல்வினையாற்றல் — சிறுத்தொண்டர்

வரங்கள் தரும்செய்ய வயிரவர்க்குத் தங்கள்
கரங்களினுல் அன்றுகறி யாக்க—இரங்காதே
கொல்வினையே செய்யும் கொடுவினையே ஆனவற்றை
வல்வினையே என்றதுநாம் மற்று.

**கருத்துக்கள்**

1. வல்வினைச் செயல்.
2. சிறுத்தொண்டர் செயல்.

**விளக்கம்**

சரியை, கிரியைகளின் முறைமை ஒழுகி, சிவ பரம்பொருளை எய்துதற்கண் பெரு விருப்புடையராய் நின்ருர், அவ்விருப்பு மேலீட்டின் சிந்தையினையுடைய ராகவே, வருபிறப்பில் இவ்வுலகில் தோன்றப்பெறுவர். மெல்வினைகளின் முதிர்ச்சியினுல் இங்ஙனம் நிகழும். அங்ஙனம் பின்புண்டான பிறவியிலே தோன்றியகாலம் தொடங்கியே சிவபத்தியும், சிவனடியார் பக்தியும் இவர்கள்பால் மிகுத்திடும். இம் மிகுதிப்பாடு இவர்தம் சிந்தையில் அளவுகடந்து பெருகும். ஏரியின் கரையி னளவுக்கு மழை நீர் நிரம்பி நின்ருல், கட்டுக்கடங்கிக் கால்வாய் வழியாக வழிந்தோடி வயலடையும்.

அவ்வாறின்றி, மென்மேலும் ஏரியில் மழைநீர் வந்து விழுந்துகொண்டே யிருப்பின்; பிறகு அவ்வேரி நீர் கட்டுகரைக் கடங்காமல், மதகுவழியே சென்று பாயாமல், கரைகடந்து ஏற்ற இடங்களில் உடைத்துக்

வெளிப்பட்டுச் சென்று கடலினை அடையும். இவ்வாறே பக்தி வெள்ளம் உள்ளத்தே மிகப் பெற்ற வர்கள் நூலின் முறைப்படியே ஒழுகுதல் என்னும் நியம நீங்கியவராய்த் தங்கள் சித்தத்தைப் பத்தி வெள்ளம் உடைத்துச் செலுத்தியவா றெல்லாம் ஒழுகி, எச் செயலையும் தம்மை மறந்தவராய்ப் புரிந்து, சிவத்தின் செயலாகவே கருதி வல்வினை புரிபவராகிச் சிவத்தினை எய்தப் பெறுவர். இவர்புரியும் எச் செயலும் சிவன் செயலாகவே நிகழும். இவர்கள் செயல்போலச் சாமானியர் ஒருபோதும் செய்ய இய-லாது. நூல்களும் இவர்கள் செயலை இன்னவாறு நிகழும் என எடுத்துரைக்க மாட்டா. அவ்வச் சந்தர்ப்பங்கட்கு ஏற்றவண்ணம் இவர்களுடைய பத்திச் செயல் நடைபெறுமாதலால் அவற்றை நூல் வரம்பு கொண்டு தகைத்துக் கூறுதல் ஒண்ணுது. சிறிய குளத்துக்கே கரைகள் உண்டு. ஆனல் கடலுக்குக் கரைகள் இல்லை. "கரைகாப்பு உளது நீர் கட்டு குளமன்றிக் கரைகாப்பு உளதோ கடல்" என்ற வாக்கு இவர்கள் செய்கைக் கேற்ற உவமை யாகும். இத்தகையோரைத்தான் "**பெரியர்**" என்பர். இவர்தம் செயல்போல் நாம் செயல் அரிது. ஆதலின், "செயற்கரிய செய்வார் பெரியர்" என்றனர் தமிழ் மறையிலும். இத்தகையோரையும், இவர்தம் பத்திப் பெருக்கின் செயற்கரும் செயல்களையுமே நம் திருத் தொண்டர் புராணம் செப்புகின்றது. "தொண்டர் தம் பெருமை சொல்லலும் பெரிதே" என்பது ஔவை மொழி. இவர்களுடைய அரிய செயல்களை இந்நூல் **வல்வினை** என்று கூறுகின்றது. நம்மால் செய்யமுடியாத தொண்டாதலால் இங்ஙனம்

பெயரிடப்பட்ட தென்னலாம். எனவே **வல்வினை** புரிதல் மூலமாகவும் சிவத்தினை அடைதல்கூடும் என்பது தெரியலாகும். இங்ஙனம் எல்லையுற்ற பத்திப் பெருக்கால் ஆவியும், உடலும், உடைமையும் சிவன் பாலே ஒப்படைத்த பெரியார்கள் பலருளர். அவர்களில் **சிறுத்தொண்டநாயனர்** ஒருவராவர். அவர் செய்த அருஞ்செயலை இப் பாட்டுப் பகருகின்றது. அவர் புரிந்த செயல் நம் போன்ருர்க்குக் கொடிய கொலை வினையாகத் தோன்றும். ஆனல் அவர் நிலையில் நின்று காண்போமாயின் அங்ஙனம் படாது. அந்த நிலை வருதலும் எளிதன்று. இவர்கள் புரியும் செயல்களைச் சிவபரம் பொருளும் இவர்தம் பத்திப் பெருக்கால் ஏற்றுக்கொண்டு இன்னருள் புரிவர். இத்தகையோரைச் சிவபெருமான் சோதனைக்குள்ளாக்கி அவர்தம் பத்தியிற் கலங்காநிலையை உலகுக்குக் காட்டி ஏற்றருளுவர். இவ்வாறன சோதனைகட்கு எவரும் ஈடுகொடுத்து நிற்றல் அரிதாம். சிவம், தம்மை வேண்டுவார்க்கு வேண்டுவதே ஈவானுவன். வரம் அருளுவதே அவர்தம் தொழில். அடியார்கட்கு நன்மைவிளைவித்தலே அவர்தம் நாட்டமாகும். ஆதலால் நூலாசிரியர் **வரங்கள் தரும்** என்ருர். இங்ஙனம் பிறருக்குத் **தரும்** இயல்புடைய பெருமான், சிறுத்தொண்டர்பால், தமக்கொன்றை வேண்டிச் சென்ருர் என்று நயம்படக் கூறியுள்ளமை காணலாம். மற்றும், இவர் உண்மையில் பிள்ளைக்கறி அருந்துவதற்கு வந்தாரல்லர் ; பெரிய சிறுத்தொண்டர்க்குச் சிவ பதத்தினை அடைய உதவுவதற்கு வந்தவரேயாவர் ; இத் தொண்டருடைய அன்பினை உண்பதற்கே எழுந்தருளினராவர் எனச் சேக்கிழாரும்

கூறுதல் காணத் தக்கதாகும். "இவர் திருத்தொண்டு இருங்கயிலை **அத்தர் திருவடியிணைக்** கீழ்ச்சென் றணைய அவருடைய மெய்த் தன்மை **அன்பு நுகர்ந்** தருளுதற்கு × × × திருமலை நின்றணைகின்றார்" என்பது சேக்கிழார் வாக்காகும். சிறுத்தொண்டர் கேளா முன்பே இங்ஙனம் சிவபிரான் அருள்புரியத் தலைப்படுவதால் **வரங்கள் தரும்** என்கிறார் இந் நூலாசிரியர். மற்றும் வந்தவர் சிவபெருமானே யாதலால் செம்மேனி மறைக்காமலே எழுந்தருளினார். இதனைச் சேக்கிழார். "விரிசுடர்ச் செம்பவள ஒளி வெயில் விரிக்கும்" என்று கூறிக் காட்டியுள்ளார். இதனை நம் நூலாசிரியர் **செய்ய** என்ற சொல்லாற் குறிக்கின்றார். சிறுத்தொண்டருடைய எல்லா மலங் களையும் போக்கும் திறங்காட்டி வருகின்றார் பெருமான் என்பதை. "மருள்பொழி **மும்மலம் சிதைக்கும்** வடிச்சூலம் மணித் திருத்தோள்மிசைப் பொலியச் செங்காட்டங் குடிச்சேர்ந்தார்" என்று கூறிக் காட்டுகின்றார் சேக்கிழார் பெருமான். இதனையே இந் நாயனார் **வயிரவர்** என்ற சொல்லாற் குறித்துள்ளார் ஆவர். தாயும், தந்தையும் மைந்தனு ருடைய உடலைச் சேதித்து வயிரவர்க்கு வருத்தமின்றி விருந்தளித்தல் மேவினர். இதுவே அரிய செயலாம். இதனையே பத்தியாற் புரிந்த வல்வினை என்பர் ஆசிரியர். இங்ஙனம் இவர்கள் புரிந்த அருஞ்செயலினைச் சிறுத்-தொண்டர் புராணத்து 62, 63-ஆம் செய்யுட்களிற் காணலாம். இவ்வருஞ் செயலை, "இருவர் மனமும் பேருவகை எய்தி **அரியவினை** செய்தார்" என்று திருத்தொண்டர் புராணம் செப்புகின்றது. "**மகன்**" என்ற இரக்கமும் பாசமும் பெற்றோரிடம் ஒரு சிறிதும்

காணப்படவில்லை. சிவத்திடமும், சிவனடியாரிடமும் முருகி வளர்ந்த அன்பே தலைப்பட்டு நிற்கிறது. இதனாலேயே, **இரங்காதே கொல்வினையே செய்யும் கொடுவினை** என்றார் இந்நூலாசிரியர். இக் கொடுவினையைப் பிறரைக் கொண்டு செய்வித்தாருமல்லர் இப் பெற்றோர்கள், தாமே செய்தனர். இதனையே கருத்துட்கொண்டு "உலகை வென்ற தாதையார்" எனலுற்றார் சேக்கிழார். ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றையும், பத்து ரூபாய் நோட்டு ஒன்றையும் ஒருவரிடம் காட்டி இவ்விரண்டில் எது தேவை எனக் கேட்பின், பணத்தின் மதிப்பறிந்தவராகக் கேட்போர் இருப்பின் பத்து ரூபாய் நோட்டினைப் பெற்றுக்கொண்டு ஐந்து ரூபாய் நோட்டினைக் கைவிடுவர் அவ்வாறே, மகப் பேறு, சிவப்பேறு இரண்டனுள் எது தேவை என்று கேட்பதுபோன்றதே இங்கு வயிரவர் புரியும் சோதனை. நாயனார் சிவப்பேறே பெரிதென மதிப்பவராதலால் மகனைக் கொலைபுரிதற்கண் ஒரு சிறிதும் கூசினாரிலர். இதனை எண்ணியே நம் நூலாசிரியர், **தங்கள் கரங்களினால் அன்று கறியாக்க** என்றுரைத்துள்ளார். திரும்ப மகனை உயிரோடு பெற்ற பிறகும் பரஞ்சோதியார், முதல்வர் மறைந்தமைக்கே சிந்தை கலங்கிக் காணாது திகைத்தார் விழுந்தார், தெருமந்தார், வெருவுற்றார். இதனாலும் நாயனார்க்குச் சிவனடியார் திறத்தன்பே பெரிதுமிக்கிருந்ததென நாமறியலாம். வந்த வயிரவர் கட்டளையிட்டவாறெல்லாம் இப் பெற்றோர்கள் நடந்துகொண்டமையால் இவர்கள் தம் வசமின்றிச் சிவத்தின் வசப்பட்டே ஒழுகினர் எனத் தெரியலாம். இதனைச் சேக்கிழாரும், "தலைவர்பணி பாராய்" என்று தெரிவித்துள்ளமையால்

அறியலாகும். இவ்வளவும் பேரன்பின் செயலாகும். இதனாலேயே "அன்பின் வென்ற தொண்டரவர்" எனலுற்றார் பெரிய புராண நூலார். இத்தகைய அன்பின் செயலைத்தான் இந்நூலாசிரியர் **வல்வினை** எனலானார். இவ்வன்பினால் நிகழும் செயல்கள் அளப்பிலவாம். ஆதலால் **ஆனவற்றை** எனப் பன்மையால் கூறியுள்ளார். செய்வார்க்கு மெல்வினை யாயினும் காண்பார்க்கே இச் செயல் வல்வினையாய்க் காணப்படும் என்பார் "**வல்வினையே என்றதுநாம்**" என்றார். இதனால் வல்வினை செய்தாரும் உளர் என்பதும், அச் செயல் வரம்புகடந்த அன்பினால் நிகழ்வதெனவும், இது நம்மால் மேற்கொள்ளத் தக்க எளிமையுடைத்தன்றென்பதும், இதனைப் பிரமாண மாக நூல்கள் ஓதமாட்டா எனவும் நாம் உணரலாம். இவ் வரலாற்றால் **மகப்பற்று** சிவப்பற்றினும் **சீரிதன்று** என்பது நாட்டப்பட்டதென்னலாம். இனி வரும் அடுத்த செய்யுள் பெற்றோர்ப் பற்றும் சிவப்பற்றின் பெரிதன்றென்பது காட்டப்படும். அதனையும் காண்போம். இவ்வருமை கருதியே சிவப்பிரகாச சுவாமிகள் திருவெங்கைக் கலம்பகத்தே "ஒன்றொ ருயிர் தனைச்செகுப்பின் உமைநிரயத் திடுவமென— மன்றறைய எமக்கியம்பி **மைந்தனைமுன் தந்தை தனைக்** கொன்றவரை உவந்தருளிக் கொடுத்தனை வானுலகென்சொல்" என வினவுவாராயினர்.

## செய்யுள் — 19

### வல்வினைத் திறம்—சண்டீசர்

பாதக மென்றும் பழியென்றும் பாராதே
தாதைய வேதியனைத் தாளிரண்டும்—சேதிப்பக்
கண்டீசர் தாமாம் பரிசளித்தார் கண்டாயே
சண்டீசர் தன்செயலால் தான்.

**கருத்துக்கள்**

1. பாதகம் பழி பாராமை.
2. பெற்றோர்ப் பற்றின்மை.
3. சண்டீசர் வல்வினைத் திறம்.

**விளக்கம்**

அன்புமீதூற்றம் பெற்றார், சிவமும் சிவனடியாருமே தமக்குத் தந்தையும் தாயருமாவாரெனக் கொள்வர். ஈன்ற தாய் தந்தையரை ஒரு பொருட்டாக மதியார். அங்ஙனம் மதியாமைபற்றி உலகோர் தம்மைத் தெழிப்பினும் அவற்றை எண்ணார். இவ்வளவும் பத்தி முதிர்ந்தார் செயலாம். இதனா-லேயே விசார சருமரை நம் சேக்கிழார் பெருமான், சிறியபெருந்தோன்றலார், சிறிய பெருந்தகையார், பத்தி முதிர்ந்த பாலகனார் என்றெல்லாம் புகழ்வாராயினர். இவர்தம் செயலையும், " ஞாலமறியப் பிழைபுரிந்தும் × × × சீலம் திகழும் சேய்ஞலூர்ப் பிள்ளையார் " எனலானார். பூத உடம்பின் தந்தைப்பற்று அறப் பெற்றோர்க்குச் சிவமே தந்தையாகின்றான். இதனாலேயே, " அடுத்ததாதை இனி உனக்குநாம் " எனவும், " அனைத்தும் நாம் உண்டகலமும் உடுப்பனவும்

சூடுவனவும் உனக்காகச் சண்டீசனுமாம் பதந் தந்தோம் " எனவும் சிவபெருமான் விசாரசருமருக்கு அருளியதாகப் பெரியபுராணம் பேசுகின்றது. தந்தையை மதித்தலும், தந்தை தேடிய சொத்துக்களைத் தாம் உரிமையாக்கிக்கொள்ளலும் உலகமைந்தர் செயலாம். இதனால் இவர்கட்கு இவ்வுலகமும் பிறப்பும் காணியாட்சியாகின்றன. சிவமே தந்தை; சிவானந்தமே நம்பேறு எனக்கருதி யொழுகுவார்க்குச் சிவபதமும் பிறப்பின்மையுமே உரிமையாகின்றன. இதனையே சண்டேசுர நாயனார் புராணம் நமக்குணர்த்து கின்றது. புராணக்கதை யாவரும் அறிவர் விசார சருமர் தமது தந்தை தாளினை எறிந்து கொன்றார். ஆதலால் அது உலகினர் கருத்துப்படி பாதகமாம். பிராமணனைக் கொன்றார். ஆதலால் பிரமஹத்தி யென்னும் பழியுமாம். இவை யொன்றையும் விசார சருமர் சிவத்தின்பால் வைத்திருந்த அன்பினால் எண்ணினாரல்லர். தந்தை இவரை முதுகில் அடித்ததை யும் உணர்ந்தாரிலர். " பெருமான்மேல் மண்டு காதல் அருச்சனையின் வைத்தார் மற்றொன்றறிந்திலர் " எனவும், " பலகாலும் வெகுண்டோன் அடிக்க வேறுணரார் " எனவும் இந்நிலைமை கூறப்படுதல் காணலாகும். இதனையே நம் நாயனார், **பாதக மென்றும் பழியென்றும் பாராதே × × × சேதிப்ப** என்றருளியுள்ளார். தகப்பனைக் கொன்றமை பாதகச் செயல் எனவும், வேதியனைக் கொன்றமை பழிபயப்ப தெனவும் உலகர் கூறுவதை நமக்குத் தெரிவிப்பவே, **தாதையை வேதியனைத் தாளிரண்டும் சேதிப்ப** என நிரல் நிரையாக அடுக்கியுரைத்துள்ளார். சற்றும் தந்தைப் பற்றின்மையை யுணர்த்தற் பொருட்டே

**தாளிரண்டும்** என முற்றும்மை பெய்துரைத்துள்ளார். உதைத்த தாளை வெட்டவேண்டியது முறைமை யாகவும் இருதாள்களையும் எறிந்தமை முறைமை யல்லாச் செயலாகக் காட்டுமென்பது புலப்படுத்தற்கு இங்ஙனம் மொழிந்தார் என்னலாம். பெரிய புராணத்தும் **கால்களால்**என்னுமல் **காலால்** என ஒருமையாற் கூறியுள்ளமை கருதத்தக்கதாகும். சிவபெருமானுடை **முடிக்கு** அருகதையாகும் திரு மஞ்சன நீர்க்குடத்தினை வேதியன் **காலால்** இடறியமை பெருங்குற்றமாதல் நாமுணர்தற் குரியதாம். ஆதலால், தாளிரண்டும் சேதித்தமை பொருந்து செயலாயிற் றென்க. மற்றும், ஒருதாள் எறிந்து ஒன்றைவிட் டிருப்பின் பெருங் கோபமுடைய அவ் வேதியன் மறுதாளினால் மீண்டும் எற்றிடல் கூடும். இதனாலும் இருதாளும் துணிக்கலுற்ற செயல் அநீதியன்றுமெனல் காணலாம். இவ்விடத்தே விசார சருமருக்குச் சிவப் பற்றே பெரிதாகப் பட்டதேயன்றிச் சுற்றத்தின் பற்றுப் பெரிதாகத் தோன்றுமை நாம் சிந்தித்தற் குரியதாம். எங்குமுள்ள எல்லாவற்றையும் அவரவர் உள்ளத்துள்ளும் நின்று காண்பவன் ஈசன். ஆதலால், விசாரசருமரது உள்ளத்தின் உண்மைப் பற்றினை இறைவன் பெரிதென மதித்தலுற்றான். இதனையே நாயனார் **கண்டு ஈசர்** என்ற சொற்களால் குறித்த லானார். தாதைதாள் மழுவால் துணித்த மறைச் சிறுவர் **அந்த உடம்பு தன்னுடனே** அரனார் மகனார் ஆயினார். அந்தப் பரிசினையே நம் ஆசிரியர், **தாமாம் பரிசு அளித்தார்** என்ற சொற்றொடரால் குறித் துள்ளார். சண்டீசர் வேதியச் சிறுவர். முன்பே இவ் இவ்வாசிரியர் தமது மாணவரை **வேதியனே** என

விளித்துள்ளார். ஆதலால், வேதியர் ஒருவர் அன்பு மீதூரப் புரிந்த செயலை இவற்குக் காட்டுதலும் முறைமையாம். ஆதலால், சண்டீசர் தஞ் செயல் கண்டாமே எனலானார் ஆசிரியர். மற்றும் இக் கூற்றால், வேதியரே யாயினும், இத்தகைய செயற்கரும் செயல் புரிந்தார் செயல்களைப் பிரமாணமாகக் கேட்டும் கற்றும் அறிந்து தாமும் சிவபத்திப் பெருக்கமுறுதல் முறைமை என்பது புலப்படுதல் அறியத்தக்கதாகும். மேலும், பாலகனும் பருவத்தே விசார சருமர் இத்தகை அருஞ்செயலாற்றினமை, தம் சீடராம் பாலகரும் உணர்தல் முறைமையாதலால் கண்டாமே என்றார் எனினும்ஆம். இதனையே, "அரனடிக் கன்பர் செய்யும் பாவமும் அறமதாகும் — அரனடிக் கன்பிலாதார் புண்ணியம் பாவமாகும்—வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமையாகி—நரரினிற் பாலன் செய்த பாதகம் நன்மை ஆய்த்தே" என்ற பாடலும் உணர்த்தும். இதனால், ஏகனாகி அரன்பணியில் நின்றார்க்கு எக் குற்றமும் விளையா எனவும், இவர் செய்தியெல்லாம் சிவம் தன் செய்தியாகவே கொள்ளும் எனவும், நாமறிதல் நேரிதாம். "பரிவால் பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கிவிடுமே" என்னும் சிவஞான சித்தியார்க் கூற்று இஃதுணர்த்தும் பெற்றியதாகும். இங்ஙனம் வல்வினை புரிந்த வேதியர் வரலாறு காட்டாகத் தரப்பட்டதென்க.

## செய்யுள் — 20

### வல்வினைச் சிறப்பு—அரிவாட்டாயனுர்

செய்யில் உகுத்த திருப்படி மாற்றதனை
ஐய இதுஅமுது செய்கென்று—பையவிருந்
தூட்டி அறுத்தவர்க்கே ஊட்டி யறுத்தவரை
நாட்டியுரை செய்வதென்னே நாம்.

**கருத்துக்கள்**

1. உடைமை சிவனுக் கர்ப்பித்தல்.
2. ஆவியும் அர்ப்பித்தல்.
3 அரிவாள் தாயனுர் செயல்.

**விளக்கம்**

சிவபத்தி முதிரப் பெற்றவர்கள் அந்தச் சிவத்தன்பு காட்டும் வழியே தாம் செல்வர். தம் வழி அன்பு தொடர்தற் கருதார். அன்பு காட்டும் சிவ நெறியிலே ஆன்மா செல்லுதல் முறைமையாம். அங்ஙனமின்றி உயிர். உடல்கொண்டு கருதும் பவநெறியிலே தொடர்ந்து செல்லுமாயின், அஃது சுமப்பார் செல்வழிச் சவம் செல்லுமாறொப்பதாகும். "அன்பின் வழியது உயிர்நிலை அஃதில்லார்க்கு என்பு தோல்போர்த்த உடம்பு" என்னும் அருமறைப் பொருள் சிந்திக்கத் தக்கதாகும். இதனால் சிவ பெருமான் திறத்தன்பினை, அடியார் வழிபாடு சிவாலய வழிபாடு, சிவார்ச்சனை முதலிய சரியை கிரியை நெறி களால் வளரச்செய்து மூளும் அன்பாக்கிப் பின் அவ் வன்பு காட்டிய நெறியே செயலாற்றல் சீரிதென நாம்

தெரிந்து பயிலுதல் தக்கது. இப் புரையற்ற விரவும் அன்பு முதிரப் பெற்றோரே அறுபான் மும்மை நாயனு-ராதியோர். இவர்தம் புண்ணிய சரிதங்களை நாம் ஓதி ஓதி உள்ளக் கசிவினை வளர்த்தல் இன்றியமையாத தாகும். மேல் உள்ள இச் செய்யுளில் சிவபத்தி காட்டிய நெறியே சென்று தம்மையே ஊட்டியரிந் தூட்டி உயர்கதியுற்றார் செயல் காட்டப்படுகின்றது. அரிவாட்டாயனார் வரலாற்று விவரம் பெரிய புராணத் தால் அறியப்படும். இத்தகைப் பெரியோர் அன்பின் மாண்பு நம்மனோரால் அளவிட்டுரைக்கத்தக்கதன்றாம். இதனாலேதான் இவ்வாசிரியர், **நாட்டி உரைசெய்வ தெவ்வனே நாம்** என்று கூறியுள்ளார். உரைசெய்வ தென்னே என்றமையால் அவரவரும் இத்தகை அன்பினை விளைத்து அநுபவத்தால் அறிவதே அமையும் என்பதை நாமுணரலாம். சிவம் நமக்கு மறைந்து நின்றூட்டுகின்றது. நாம் சிவனுக்கு வெளிப்பட்டு நின்று அன்போடு அமுதூட்டலே முறை. இங்ஙனம் அன்றாடம் கோயிலுக்குப் போய் நேர்நின்று செய்து வந்தனர் கணமங்கலத்துத் தாயனார். அன்பு காட்டும் சிவநெறிச் செல்வோர், தாம் மேற்கொண்ட தொண்டினுக்கு முட்டுப்பாடுறுமாயின், தன் உயிரைப் போக்குதற்கும் பின்வாங்கமாட்டார்கள். போர்க் களத்துப் படை மறவர் வீரம் நிகர்ப்பது இவர் செயல். மறவர் உயிர் கெடுத்தேனும் புகழ்கொள்ளக் கருதுவர். அறவர், உயிர் கொடுத்தேனும் சிவப்பே றெய்துதலில் தலைநிற்பர். இங்ஙனம் நிகழ்ந்ததே தாயனார் செயல். செந்நெல் அரிசி, மாவடு, மென்கீரை நிவேதனங்களைச் சுமந்து செல்கையில் கால் தளர்ந்து தப்பி, மாதரார் அணைத்தும் வீழலானார். யாவும்

வயலில் கமரிடைச் சிந்தின. அது கண்டதுமே தமதன்பின் செயலுக்கு ஊறு நேர்ந்ததும் தமக்கே ஊறு நேர்தல் தக்கதென்ற எண்ணம் எழுந்தது. உறு பிறப்பரிவார் போலும் ஊட்டியை அரியா நின்றார். அக்கணமே சிவன் அவ்வயலில் உள்ள கமரினுள் தோன்றி அரிவாள் பற்றிய கையினை மாற்றி ஓசை கேட்ப உண்டருளினர். இங்ஙனம், பெருமான் படிமிசைக் கமரில்வந்து அமுது செய்ததும் போற்றத் தக்க அருட் செயலாகும். இதனாலேயே, **செய்யில் உகுத்த திருப்படிமாற்றதனை இது அமுது செய்க என்று ஊட்டியறுத்தவர்க்கே ஊட்டி** அவர்பிறப்பினை **அறுத்தவர்** என்றுள்ளார் ஆசிரியர். **திருப்படிமாற்று** என்று கூறியுள்ள நயம் கருதற்பாலதாகும். அன்பின் அமைதியோடு இருந்து இவ் வல்வினையாற்றிய பெருமையினை உணர்த்தும் பொருட்டே **பைய இருந்து** என்றார் ஆவர். எவ்விடத்தும், இடத்தின் இழிபு கருதாமே இறைவன் நின்றருளி ஏற்பன் என்பதைச் **செய்யில்** என்ற சொல் செப்பும். கலத்திடை இருப்பதையே யன்றிக் கீழே சிந்தியதையும் அன்பின் காணிக்கைக்காகப் பெருமான் ஏற்றருளுவன் என்பதை **உகுத்த** என்ற சொல் உணர்த்தும். சம்பிரதாயச் சொற்களை நாம் ஆளவேண்டிய முறைமையினை வலியுறுத்துவது **திருப்படிமாற்று** என்ற பதம். இப்பெயருக்கேற்ப உணவுப் பொருட்கள் படிமிசை மாறின போலும்! கீழே விழுந்த பண்டம் அநுசிதப் பட்டிடுதலை **அதனை** என்ற ஒருமைச் சொல் குறிப்பதாகும். **ஐய** என்றல், சீடனையோ, சிவனையோ குறிப்பதாகக் கொள்ளத்தக்க நிலையில் நிற்பது. சிவம், என்றும் பசிவிளைக்காத சிவானந்தப் பேரமுதினை

நமக்கு ஊட்டுகிறது. நாம், உண்டாற் பின்னும் பசி விளைக்கும் சாமானிய அமுதினையே ஊட்டுகிறேம். இந்த நயம் ஊட்டி என்ற சொற்களை ஆண்டுள்ள முறைமையால் விளங்கும். வல்வினைப்பயன் பிறவி யறுதலே என்பதை அறுத்தவர் என்ற சொல் காட்டும்.

இந்த மூன்று திருவெண்பாக்களால் அளவற்ற அன்பின் பெருமை உலக இயற்கைக்கு மாறுபட்ட செயல்களையும் செய்விக்கும் என்ப. இத்தகைச் செயல்கள் இத்தகை வரம்பிலன்புடையோரா லன்றி யாவராலும் செயற்கரிய என்பதும், இவற்றை நூற் பிரமாணம்போற் கோடலரிதென்பதும், ஆதலால், இவை வல்வினைகள் எனப்படும் தகையினவாம் என்பதும் உணர்த்தப்பட்டன. மகப்பற்றின்மையை முதற்பாடலும், சுற்றப் பற்றறுகையை இரண்டாம் பாடலும், தன்னுயிர்மீதும் பற்றறுகையை மூன்றும் பாடலும் முறையே காட்டுகின்றன. மூன்று செயல் களும் கொடுவாளால் நிகழ்த்தப்பட்ட செயல்களே. ஆதலால், கொடுவினை எனவும் வல்வினை எனவும் கூறுதற்கேற்றனவாயின. எக்குலத்தார்க்கும் இவ் வல்வினைச் செயல் உரியதென்பதை இரண்டாம் பாடலால் அறியலாம். இத்தகைய சிவனடியார்களின் –திருத்தொண்டர்களின்–அடியிணை தொழுது வாழ்த்தி நம் வல்வினைகளை அரிதல் தக்கதாம்.

## செய்யுள் — 21

### வல்வினைப் பயன்—முத்திப்பேறு

செய்யும் செயலே செயலாகச் சென்றுதமைப்
பையக் கொடுத்தார் பரங்கெட்டார்—ஐயா
உழவும் தனிசும் ஒருமுகமே ஆனால்
இழவுண்டோ சொல்லாய் இது.

**கருத்துரை**

1. தம்பரங் கெட்டார் செயல்.
2. முத்தி இழப்பின்மை.

**விளக்கம்**

உயிர்கள் உடம்போடு கூடியிருக்கும் இந்த நிலைக்குப் பெத்தநிலை என்பது பெயராம். இந்த நிலையில் ஞானக்கண்ணுக்கன்றிப் புலப்படாத முதல்வன், உயிருடன் நின்று உயிர் உடனாய் அறிதற் பொருட்டுத்தான் அறிந்தும், அந்த உயிருக்கு வேறாகக் காணப்படாமல் உயிர், எதனையும் தானே அறிந்ததாக எண்ணும் வண்ணம் உயிரோடு ஒற்றுமைப்பட்டு நிற்கின்றான். இவ்வாறே, நாமும் முத்திநிலை ஒழுக்கத்திலே (வல்வினைச் செயலிலே) முதல்வனோடு உடனாய் நிற்கவேண்டும். இன்பத்தை அனுபவிக்கும்போது கூட அனுபவிக்கின்ற நம்மை வேறாகக் காணாமல் அம் முதல்வனோடு ஒற்றுமைப் பட்டு அம் முதல்வனேயாய், அவன் அருள்வழி எனப்படும் இறைபணியில் வழுவாமல் நிற்கவேண்டும். இதனால் ஆணவம் மாயை கன்மங்கள் இல்லையா யொழியும். இங்ஙனம் இறைவனோடு ஒன்றுபட

வேண்டுமென்பது எல்லாச் சமயத்தார்க்கும் உடன்பாடாகும். பெத்தநிலையில் முதல்வன் உயிராய் ஒற்றுமைப்பட்டு நிற்பதும், முத்திநிலையில் உயிர் சிவமாய் ஒற்றுமைப்பட்டு நிற்றலும் **அத்துவித சம்பந்தம்** எனப்படும். கண்ணொளியையும் உயிரையும் அத்துவித சம்பந்தத்துக்கு உவமையாகக் கூறுவர். இதனால் வேற்றுமையும் தன்முனைப்பும் அற்றொழுகலே முத்தி யொழுக்கம் எனப்படுதல் காணலாம். இதனைப் புனிதவொழுக்கம் எனவும் புகலுப. ஆவியின்வழி ஆண்டவன் நிற்குங்கால் ஆவியாற் செய்யப்படும் செயலனைத்தும் ஆண்டானால் செய்விக்கப்படுவனவேயாம். எனினும், ஆவியின் முனைப்பால் அவை ஆவியின்வினை எனப்படும் இருவினையாம். விட்டநிலையில் ஆவியின் செயலனைத்தும் அருள் முனைப்பால் செய்யப்படுதலின் ஆண்டானால் செய்விக்கப்படும் உண்மை விளங்கப் பெற்று **இறைபணி** எனப்படும். உயிர்கள் இருவினையால் பிறப்புறும். இறைபணியால் பிறப்பறும். இதுபற்றியே, இறைவனைப் "பிறப்பானைப்பிறவாத பெருமையானை" என்றும் பேசலுற்றனர். உயிர்கள் தம்மை முற்றிலும் இழந்தவிடத்தே ஆண்டவனுக்கே அடிமையாகிவிடும். அப்போது உயிர்களால் செய்யப்படுவது போலக் காணப்படும் செயல்யாவும் ஆண்டவன் செயலேயாம். இதுபற்றியே, பட்டினத்தடிகள், "என்செயலாவது யாதொன்றுமில்லை இனித் தெய்வமே உன்செயலென்றே உணரப் பெற்றேன்" எனக் கூறலானர்.

இனி, ஏகனாகி நிற்றற்குப் பற்பல சமயத்தார் கூறும் உவமைகள் பலப்பலவாக ஓதப்படும். அவர் கூற்றுகளாவன. 1. குடம் உடைந்திட்டால்,

குடத்துள் வளைபட்டுக்கிடந்த குடாகாயமும் வெளியே உள்ள மகா காயமும் ஒரு பொருளாவது போலப் பாசநீக்கத்தில் உயிரும் சிவமும் ஒரு பொருளாய் ஒற்றுமைப்படும் என்பர். 2. கட்டையைக் கள்வன் என்று விபரீதக் காட்சியால் காணுங்கால் கட்டையே கள்வனாகத் தோன்றிப் பிறகு தெளிவெய்தியபின் கள்வன் இல்லையாகிக் கட்டைமட்டில் உளதாயினாற் போல அஞ்ஞானகாலத்தில் சிவமே உயிராய்த் தோன்றிப் பின் ஞானகாலத்தில் உயிரென்பதில்லையாய்ச் சிவமே உளதாய் ஒற்றுமைப் படும் என்பர். 3. மண்ணே வேற்றுமைப்பட்டுக் குடமாயினாற்போலச் சிவமே பாச சம்பந்தத்தால் வேற்றுமைப்பட்டு உயிராகிப் பாச சம்பந்தத்தை நீக்கியபோது சிவமாய் ஒற்றுமைப்படும் என்பர். 4. வெண்தாமரை என்றபோது வெண்மையாகிய குணமும் தாமரையாகிய பொருளும் பிரிக்கமுடியாதபடியே சிவமே பொருளாய் உயிர் அப்பொருளின் குணமாய் விளங்கி ஒற்றுமைப்படும் என்பர். 5. தீயுடன் இரும்பு கலந்த இடத்து இரும்பின் தன்மை கெட்டு அவ்விரும்பு தீயேயாய்க் காணப்படுவதுபோலச் சிவத்துடன் உயிர் கலந்தவிடத்து உயிர்த்தன்மை கெட்டு அவ்வுயிர் சிவமே ஆய் ஒற்றுமைப்படும் என்பர். 6. பாலுடன் நீர் கலந்த காலத்துப் பால் வேறு நீர் வேறெனப் பிரிக்கமுடியாதவாறுபோலச் சிவத்துடன் உயிர் கலந்தஇடத்துச் சிவம் வேறு உயிர் வேறு எனப் பிரிக்கமுடியாத சையோகத்தால் ஒற்றுமைப் படும் என்பர். 7. கருட மந்திரத்தால் பாவிக்கப் படுகின்ற தைவிகக் கருடனும், பாவிக்கும்

மாந்திரிகனும் ஒன்ருமாறுபோல உயிர், 'சிவம் நான்' எனப் பாவிக்கும் பாவக மாத்திரையால் ஒற்றுமைப் படும் என்பர். 8. நெருப்பிற் காய்ந்த இரும்பினிடத்து நீர் சுவறி ஒற்றுமைப்படுதல் போலச் சிவத்தினிடத்து உயிர் கெட்டு ஒற்றுமைப்படும் என்பர். 9. பேய் பிடியுண்டவன் அப்பேயாய் நிற்றல்போல உயிரி னிடத்துச் சிவம் ஆவேசித்து நிற்றலால் உயிர் சிவமே யாய் ஒற்றுமைப்படும் என்பர். 10. விறகினிடத்து அக்கினி இருந்தும் விளங்காமையால் ஒற்றுமைப்பட்டு நிற்றல்போல முத்தி நிலையில் சிவனும் சீவனும் இருந்தும் சீவன் விளங்கித் தோன்ருமையால் ஒற்றுமைப்படும் என்பர். 11. சூரியன் ஒளிமுன் இருக்கும் விளக்கின் ஒளிக்கு விளக்கும் தன்மை கெட்டமையால் சூரியனொளியும் விளக்கொளியும் ஒற்றுமைப்படுதல்போலச் சிவசத்தியின் முன்னர் உயிரின் சத்திக்குச் செயலில்லாமையால் சிவமும் உயிரும் ஒற்றுமைப்படும் என்பர். 12. நாயகனும் நாயகியும் இன்ப அநுபவ அளவில் ஒற்றுமைப்படுவது போலச் சிவானந்த அனுபவ அளவில் சிவனும் உயிரும் ஒற்றுமைப்படும் என்பர். 13. நண்பர் இருவர் நட்பின் மிகுதியால் ஒற்றுமைப்படுதல்போலச் சிவ னிடத்து உயிர் வைத்துள்ள அன்பினுலும் உயிரி னிடத்துச் சிவம் வைத்திருக்கும் அருளினுலும் உயிரும் சிவமும் ஒற்றுமைப்படும் என்பர். 14. ஊர்களில் உள்ள பசுவும் காட்டுப் பசுவும் பசுத் தன்மையின் தோற்றத்தால் ஒற்றுமைப்படுதல் போல் ஒற்றுமைப் படும் என்பர். இங்ஙனம் பல்வேறு வகைகளாற் கூறப் படும் ஒற்றுமை நிலைகள்யாவும் 'ஏகனுதல்' தன்மைக்கு ஏற்ற எடுத்துக்காட்டுக்கள் ஆகா. இவை யாவும்

அத்துவிதத்தின் ஒவ்வொரு வகைக்கே ஏற்பன. முற்றும் ஏற்பனவல்ல ; ஓர்புடை ஆம். இதனாலே, "அவனே தானே ஆகுதல்" ஒப்பு என்பர். அது கண்ணொளியும் ஆன்மபோதமும் போல்வதென்பர். இதுவே, ஒன்றாய் வேறாய் உடனாம் புனிதாத்துவிதம் எனப்படும். இதனால் யான் எனது என்னும் செருக்-கறும். செருக்கு என்பது உயிர்களைப் பிறப்பு இறப்பு-கட்கு உட்படுத்தும் பெரும்பகை ஆறனுள் முதன்மை வகிப்பதாம். அவை செருக்கு, சினம், சிறுமை, இவறன்மை, மாண்பு இறந்த மானம், மாணா உவகை என்பனவாம். இச்செருக்கே அகப்புறப் பற்றெனப் படும். இதுவே மருள் எனவும் படும். இம் மருளற்ற செயல் இறைசெயலெனப்படும். இதனால், செருக்கு-வழி யொழுகாமல் அருள்வழி யொழுகுதல் இறைபணி எனப்படுதல் காணலாம். இவ்வாறு "அருளாலல்லது ஒன்றையும் செய்யானாகவே அஞ்ஞானகன்மம் பிர வேசியா" என்பர். அரசன் ஆணைவழி நிற்கும் அதிகாரி யொருவன் செய்யும் செயல் அரசன் செய லாகவே கருதப்படும். நாம் அரனுடைமையாவோம். ஆதலால், இறைபணியார்க்கு இல்லை வினை. இவ் வெல்லாம் உணர்த்துமாறு, "**செய்யும் செயலே செய லாகச் சென்று தமைப் பையக் கொடுத்தார் பரங் கெட்டார்**" எனப் புலப்படுத்துள்ளார் இந்நூலாசிரியர் இதனால் நாம் செய்யும் எச் செயலும் சிவன் செய்விக்கும் செயலாகுமெனத் தெளிந்து, அச் செயல் வழியே நாமும் செல்லுதல் சிவன் செலுத்திய வழி நாம் செல்லுதலாகும். இதுவே இறைபணிநிற்றல் எனப் படும். இங்ஙனம் இறைபணியில் நிற்பவர்க்கு அவர் செய்யும் வினைப்பயனை அவரநுபவியாதபடி விலக்குவர்

சார்ந்தாரைக் காத்தலே கடனாகக்கொண்ட பரன். இறைபணி என்னும் சொற்றொடருள் **இறை** சிவமே முழுமுதல் எனத் தெரிவிப்பது. பணி என்பது சீவனின் தன் இழப்பை உணர்த்துவது. இதனால் முதல்வன் அருள்வழி நிற்பவர் ஐம்புலன்களைக் கூடி நின்றும் அவ்வைம்புல இன்பம் விழையாமையால் புலன்களிற் கட்டுப்படுதலிலர். புலங்களைந்தின் நின்றே சிவானந்தப் பேறெய்துவர். ஒரு குடியான வனுக்குப் பயிரிடும் நிலமுண்டு. அதனில் அவன் சென்று உழைத்து விளைச்சலை அடைகிறான். அப் போது அவன் அரசன் கீழ்வாழும் குடிமகன் எனப் படுவான். அவனே நாட்டில் பகைவர் பயம் விளைந்த போது போரிடும் பொறுப்பும் உடையான். அதற் குரிய பயிற்சியும் அவன் பெற்றாகவேண்டியுள்ளது. அப்பயிற்சிக்குரிய களம் அவன் உழுமிடத்ததே யாயின் அவன் அப்போர்ப் பயிற்சியும் எளிதிற் பெறுகிறான். இதனால் அவன் உழவனாகவும் மழவ-னாகவும் எளிதில் ஆக முடிகிறது. பயிற்சிக்களம் வேற்றிடத்தின் கண்ணதாயின் உழவைக் கைவிட வேண்டிவரும். இங்ஙனமின்றி, ஏர்க்களனும் போர்க்களனும் ஓரிடத்ததாமேல் உழவன் மழவனு-மாய் விளங்கி மன்னனால் பெரிதும் மதிப்புறுவன். இவ்வாறு நிகழ்வதே இறைபணி நிற்றல் என்பது. இது குறிக்கவே, ஆசிரியர், **உழவும் தனிசும் ஒருமுகமே ஆனால் இழவுண்டோ** என்றார். உலக நெறியும் வேத நெறியும் ஒன்றுபட நடத்தும் ஏகனாகி இறைபணி நிற்றலின் வேறு மார்க்கம் இன்மையை மாணவனுக்கு வலியுறுத்தற் பொருட்டே **ஐயா இது சொல்லாய்** என்றார். இதனை, **இதுசொல் :** இதுவே உறுதியான

உபதேசம். ஆய்: நீ ஆராய்ந்துகொள் என்ற பொருள்படக் கூறினார் எனினும் பொருந்தும்.

## தொகுப்புரை

இதுகாறும் கூறியவாற்றால், சரியை கிரியை முறைகளிலே உறைத்து நின்று அளவுகடந்த அன்பு மீதூரப்பெற்று அத் தொடர்பாலே பிற்பிறப்பிலே ஏகனாகி இறைபணி நிற்கும் வல்வினை நெறியிலே படிந்தார்க்கு அவ் வல்வினையே முத்தியாக்கும் என்பதை நாம் அறியலாம். தம்மை முற்றிலும் சிவன் கையிலே கொடுத்துத் தம் பரங்கெட நிற்றல் அருமையுடைச் செயலாம். ஆயினும் இங்ஙனம் நிற்பாரும் உளர் என்பதை நமக்குக் காட்டும்பொருட்டே சிறுத்தொண்டர்–சண்டேசர்–அரிவாட்டாயர் என்னும் மூவர் நாயன்மார் செயல்களைக் கூறியுள்ளார். இவர்கள் வரலாற்றால் "யான் எனது என்னும் செருக் கறுப்பான் வானோர்க்குயர்ந்த உலகம் புகும்" என்ற பொய்யாமொழியின் உண்மையை உணரலாகும். யான் என்ற பற்றறப் பெற்றவர் அரிவாட்டாயனார். எனது என்னும் பற்றின் பண்புரிமை உணர்ச்சியுரிமை என்னும் இருதிறனும் அறப்பெற்றார் ஏனை இரு நாயன்மார்களும் என்க. இந்த நுட்பங்களையெல்லாம் இந் நூலில் உபாயங் கூறத் தொடங்கும் **15-ஆம்** பாடலிலிருந்து **21-ஆம்** பாடல்வரை உள்ள செய்யுளடிகளால் நாமறிந்துய்வோமாக! இனிச் சிவயோக நெறி கூறப்படும்.

**சிவதன்மப் பகுதி முற்றிற்று.**

II உபாய இயல்

## 2. சிவயோகப் பகுதி (22-36)

## யோக உபாயம்

### செய்யுள் — 22

### இருவகை யோகங்கள்

ஆதார யோகம் நிராதார யோகமென
மீதானத் தெய்தும் விதிஇரண்டே — ஆதாரத்(து)
ஆக்கும் பொருளாலே ஆக்கும் பொருளாம்ஒன்(று);
ஆக்காப் பொருளேஒன் றும்.

**கருத்துரை**

1. மீதானவிதி இரண்டு
2. ஆதாரயோகம் — ஆக்கும் பொருள்
3. நிராதாரயோகம் — ஆக்காப்பொருள்.

**விளக்கம்**

மனிதர்கள் இயந்திரம் போன்றவர்கள் அல்லர். மணிகாட்டினும் கெடிகாரம் ஓர் இயந்திரமே ஆம். ஆனல், தன்நிழலால் நேரம்காட்டும் மரம் இயந்திரமன்று. கடிகாரம், பற்பல உறுப்புகள் மேலார்ந்த அமைப்பாக ஒன்று சேர்க்கப்பட்டு இயங்குவது, உள்ளிருந்து வளர்ந்தமைந்ததன்று. உள்ளிருந்து வளர்வதானல் வடிவும் அளவும் மாறு-பட்டுக்கொண்டே இருக்கும். மரத்தின் உறுப்புகள் உள்ளார்ந்த வளர்ச்சியுடையன. இதனல் கடிகாரமும்,

மரமும் பொருளால் ஒன்றெனப்படினும் அமைப்பால் வேறு வேறு பட்டிருத்தல் காணலாம். இதனை A clock is a mechanism, a tree is an organism என்பர். இந்த மாறுபாடு உயிருண்மையாலும் இன்மையாலும் விளைவதாகும். உயிர்ப்பொருள்கள், தமக்குரிய நன்னிலையடையுமளவும் சூழ்நிலைகட்கேற்ப மாறிமாறி அமையும் இயல்பினவாம். உயிரற்ற இயந்திர நிர்மாணப்பொருட்கள் ஒரே கட்டுப்பாட்டுள் அடங்கி ஒழுகும். அக்கட்டுப்பாடு குலைந்தால் இயங்காது நின்றொழியும். உயிர்ப்பொருள்களுக்கு ஏற்பட்டுள்ள கட்டுப்பாடுகள், ஒரு முடிவுநிலைக்குத் தள்ளிக்கொண்டே போகும் தன்மையன. They do not end in themselves. They are only means to an end. "புல்லாய்ப் பூடாய்" என்னும் திருவாசக உரைகள், உயிர்ப் பொருள்கள் சூழ்நிலைகட்கு ஏற்ப இணங்கியும் வணங்கியும் முன்னேறி முன்னேறி ஒரு பாற்றமற்ற முடிவுநிலையை நோக்கிச் சென்றுகொண்டிருத்தலை உணர்த்தும் பெற்றியவாம். முடிவுநிலை என்பது முத்தி நிலை ஆகும். இந்தப் பிறவா நிலையே—சிவானந்த நுகர்வு நிலையே—மானிட வாழ்க்கையின் குறிக்கோள் ஆகும். இக் குறிக்கோளினை எய்துதற்கான சாதனங்களை விரித்துரைப்பதே வேதம். இவ் வேதமே எல்லாச் சமயங்கட்கும் பொது நூலாகும். இது கடலை நிகர்க்கும். இதனைத் தெளியச் செப்புவனவே ஆகமங்கள். இவ் வேதாகம சாகரத்தினின்றே எந்த மதமும் தனக்குரிய கொள்கைகளை முகந்து கொள்ளுகின்றதென்னலாம். சமுத்திரத்தில் மூழ்த்தி எடுக்கப்பட்ட கலசங்கள் அவ்வவற்றின் அளவுக்கேற்ப அந்நீரை முகத்தல்போலவே, அவ்வச்

சமயங்களும் தமக்குரிய கொள்கைகளைக் கொள்ளுகின்றன. எல்லாக் கலச நீர்களும் அளவில் மாறுபாடுடையன எனினும் நீர்த் தன்மையில் ஒன்றுபட்டனவேயாம். என்றாலும் கடலளவு நீரினை எக் கலசமும் கொள்ளல் இயலாது. இதுவே போல்வதுதான் சைவ சித்தாந்தங்கட்கும் ஏனைச் சமய சித்தாந்தங் கட்கும் உள்ள வேறுபாடு. சைவ சித்தாந்தம், ஞானத்தையின்றி மோக்ஷம் சித்தியாதென வலியுறுத்துகின்றது. இந்த ஞானத்தைப் பெறுவதற்கே சரியை கிரியை யோகங்கள் ஏதுவாகின்றன. அவற்றுள், சரியை கிரியைகளைப்பற்றிச் சிவதன்மம் என்னும் பிரிவில் இந்நூல் பேசிவிட்டது. யோகத்தைப்பற்றி இப் பாட்டுமுதல் முப்பத்தாறும் பாடலளவும் இதனில் பேசப்படுகின்றது. சரியை கிரியை யோகங்களைத் தவர் என்னும் பெயரால் வழங்குவர். கிரியை யோகம் என்ற இரண்டும் விசேட தீக்கையுடையோரால் புரியப் படும். இவை மூன்றும் உபாயம், உண்மை என்ற பிரிவுபடும். உபாயம் உலகப் பொருளை நோக்கிச் செய்யப்படும். உண்மை என்பதே முத்தி காரண மாகச் செய்யப்படுவது. முத்தி காரணமாகச் செய்யப் படும் யோகம், சரியையில் யோகமாகவும், கிரியையில் யோகமாகவும் யோகத்தில் சரியையாதி நான்காகவும், ஞானத்தில் யோகமாகவும் நிகழ்வுறும். நெஞ்சின்கண் சிவபெருமான் உருவத் திருமேனியைத் தியானித்தலும், அந்தரி யாகபூசை புரிதலும், இயமமாதி நான்கின் வழிப் பழகுதலும், பிரத்தியாகாரம் முதலிய இரண்டினையும் பழகுதலும், தியானம் புரிதலும், சமாதி கூடுதலும், சிவப்பொருளை ஐய விபரீதமின்றித் தெளிதலும் முதலான படிமுறைகளில் யோகநெறி பயிலப்படும்.

பொதுவாக அட்டாங்க யோகத்தை யோகம் என்றழைப்பர். இவ்வட்டாங்க யோகமும் வடிவுபற்றிச் செய்யப்படுவதும் அகண்டாகார சோதிபற்றிச் செய்யப்படுவதும் என இருதிறப்படும். இவ்வுண்மைச் சிவ புண்ணியங்கள் சாலோகம் முதலிய பதமுத்தி பயக்கும். உபாயச் சிவபுண்ணியங்கள் புவன போகங்களைப் பயக்கும் என்பர்.

அட்டாங்கயோகத்தில் **இயமமாவது**, கொலை முதலிய செயல்களின்றி இந்திரியமடக்கி ஒழுகும் ஒழுக்கமாகும். **நியமமாவது**, தத்துவ நூலாய்தல் முதலிய தூய்மைச் செயல்களை மேற்கொள்ளலாகும். இந்த இயமமும் நியமமும் யோகம் செய்பவனுக்கான குணங்களைத்தருவன. **ஆதனமாவது**, பலவகைப்படும். சுவத்திகம் முதலவாக இவை கூறப்படும். இது எப்படி உட்கார்ந்தால் மனம் சலிக்காதோ அப்படி உட்காருவதுபற்றிய விதியாகும். **பிராணாயாமமாவது** சுவாசத்தை விட்டு இழுத்து அடக்கி உடலுள் அழுக்கைப்போக்கும் முறையாம். **பிரத்தியாகாரமாவது**, வெளிச்செல்லும் மனத்தை உள்ளிழுக்கும் முறைமையாகும். இது உள்நோக்கல் எனவும் உரைக்கப்படும். **தாரணையாவது**, ஆதாரங்களில் மனத்தையும் வாயுவையும் நிறுத்தி ஆதார தேவதைகளைத் தரிசித்து ஆனந்திப்பதாகும். இது நிறுத்தப்பட்ட மனத்தை நீடித்திருக்கச் செய்யப் பழகுவதாகும். ஆதாரங்கள் ஆறும், அவை மூலாதாரம் முதலன. **தியானமாவது** ஐம்புலனடங்கி மனம் நிலைத்து நிற்பதாகும். **சமாதியாவது** கரணங்களிறந்து மனோலயமாதலாம். இது தன்னிலை கண்டின்புறச் செய்யும். தியான நிலை கலையாமையே

சமாதி எனப்படும். மற்றும் யோக விவரங்கள் சிவயோக சாரம் முதலிய நூல்களில் கூறப்படும். ஆறுதாரம் பற்றிய யோகத்தினை **ஆதாரயோகம்** என்பர். இதனால் ஆன்மானந்தமே விளையும். ஆன்மானந்தத்தின் மேற்பட்டதே சிவானந்தமாம். ஆன்மானந்தம் கரித்துணி முடிச்சை ஒப்பது. சிவானந்தம் அதனுள் உள்ள இரத்தினத்தை அடைவதைப் போல்வது. மற்றும் ஆனந்தயோகம், அட்டமாசித்தியோக முதலாக யோகங்கள் பலப்பல வகையாகவும் கூறப்படும். இவை யாவும் சித்தி பயப்பனவேயாகும். முத்தி பயப்பனவாகா. சித்தியை மட்டில் கருதி யோகு புரிவது கற்பக விருட்-சத்தின் கீழிருந்தும் காஞ்சிரங்காயை நயப்பது போல்வ தாகும். அகண்டாகார சோதிபற்றி யோகம் புரிவதே உண்மை ஞானயோகமாம். கர்மயோகம், பக்தி யோகம் என்பனவும் பேசப்படும். இவை உண்மை ஞானயோகத்தின் உதவிகளாம். உண்மை ஞான யோகத்தினை **நிராதாரயோகம்** என்பர். இங்ஙனம் பலவகையாகப் பேசப்படும் யோகங்களையும் அவற்றின் ஆசாரங்களையும் மேற்கொள்வதிலேயே காலம் போக்கிவிடாமல், முத்திநிலை எய்துதற்கான இரண்டே விதிகளாக ஆதார நிராதாரயோகங்கள் கொள்ளுதலே சாலும் என்பார். " **ஆதாரயோகம் நிராதாரயோகம் என மீதானத்தெய்தும் விதி இரண்டே** " எனக் கூறித் தெருட்டலுற்றார் என்ன-லாம். நிராதாரத்துக்கு ஆதாரமாகவும் உதவுவதால் ஆதாரயோகம் அடிப்படையாயிற்றென்னலாம். இவ்விரண்டும் உபானங்களாகி மீதானத்தை எய்தச் செய்வனவாம். மீதானமாவது சிவனடியாகும்.

வேதாகமங்களில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன இவ்விரண்டே என ஆசிரியர் தேற்றேகாரம் தந்து கூறுவதனுல் அறியலாம். இரண்டும் குருவருளா-லறிந்து செய்யப்படுவனவாம். ஆசாரியன் அந்த அந்த ஆதாரங்கட்குரிய தெய்வம் மந்திரம் முதலியவற்றைத் தெரிவித்துக் கொடுக்க, அவ்வத் திவ்யரூப தியானங் களிலே மனம் நிலைக்கப் பெற்றிருப்பதே ஆதார யோகம் எனப்படும். இதனை, **ஆதாரத்து ஆக்கும் பொருளாலே ஆக்கும் பொருளாம் ஒன்று** என்ற இடம் உணர்த்தும். ஆதாரயோகப் பயிற்சி கைவந்த பிறகு குருதிருவருளின் திறத்தால் சுத்த சைதன்னிய சொரூபத்தைப் பாராதே பார்த்து நிற்கும் நிராதார யோக முயற்சி கைகூடுவதாகும். இதனை, **ஆக்காப் பொருள் ஒன்று ஆம்** என்பதனுல் அறியலாம். இதனுல் உண்மை யோகநெறி விரும்புவார் இவ்விரண்டு வகை யோகநெறி பற்றினுல் போதும் என்பதுணர்த்தப் பட்டது. மற்றும், இந்த இருவகை யோக நெறிகளைப் பற்றியும், இந்த நூலுக்கு முன்னர் வெளியிடப்பட் டுள்ள இவ்வாதீனத்து 82-ஆம் வெளியீடான **திருவுந்தியார்த் தெளிவுக்கட்டுரை** நூலின் 8, 9, 10-ஆம் பாட்டுரைகளில் படித்தறிதலும் நல்லதே. இவ்விருவகை யோக நெறிகளையும் ஒருங்கு கூட்டிக் கூறுமிடத்துச் **சிவயோகம்** என்பர். யோகம் எனும் சொல் தொடர்புபடுத்துவது எனப் பொருள்படும். எனவே, சிவயோக நெறி, சிவத்துடன் தொடர்பு படுத்துவதா மென்க. பொதுவாக, இந்தச் சிவயோக நெறியைத் தோழநெறி என்னலாம். இதனைச் சக மார்க்கம் எனவும் புகல்வர். இந் நெறியுயர்வினையே நம் சுந்தர மூர்த்தி சுவாமிகள் வரலாறு புலப்படுத்தும்.

" மறவாதே நினைக்கின்றேன் மனத்து உன்னை " எனவும், " அத்தா உனக்கு ஆளாய் " எனவும் சுவாமிகள் திருவாய் மலர்ந்துள்ளமை சிவயோகத் தியல்பினை நமக்குணர்த்தும் திறத்ததாம்.

---

## செய்யுள் — 23

### ஆதாரயோகத்தியல்பு

ஆக்கி ஒருபொருளை ஆதாரத்(து) அப்பொருளை
நோக்கி அணுவில் அணுநெகிழப்—பார்க்கில்
இவனுகை தானொழிந்தி–(டு) ஏகமாம்; ஏகத்
தவனுகை ஆதார மாம்.

**கருத்துக்கள்**

1. ஆதார தேவதையறிந்து பற்றுகை.
2. தியான நீடிப்பு.
3. தன்னிலே தியானித்தல்.
4. நினைப்பறுதல்.
5. தேவதாருப மயமாதல்.

**விளக்கம்**

உலகினருக்கும் ஞானியர்க்கும் வேண்டுவது விடுதலையின்பமே. இவ்விரு திறத்தாருக்கும் பொதுப்பட உரைப்பதே இறைவன் நூலெனப்படும் வேதம். உலகினர் நீதி நெறியில் நிற்கவேண்டுபவர். ஞானியர் மெய்யறிவு நெறியில் நிற்கவேண்டுபவர். இவ்விரு

வகையினர்க்கும் வேண்டுவனவாகிய நீதிகளும் அறிவு முறைகளும் விரிந்த நூலாகிய வேதத்துட் பொதுப்-படப் பேசப்படுகின்றன. இருதிறத்தினரும் உய்தி யடைய வேண்டுமென்பதே வேதத்தின் குறிக்கோள். வேதத்துள் பல கடவுட்கும் பரத்துவம் கூறப்படும். கடவுட் பூசைக்கான நெறிவிவரம் கூறப்படவில்லை. ஆதலால், உண்மையறிதற்கண் வேதம் மயங்கச் செய்கின்றது. இது கருதியே, இறைவனால் ஆகமம் அருளிச் செய்யப்பட்டது. இது சிவார்ச்சனை முறைகளை விவரித்துரைக்கின்றது. சிவத்துக்கே பரத்துவம் கூறுகிறது. வேதத்தின் ஞானகாண்ட மெனப்படும் உபநிடதத்தின் பிழிவே ஆகமம். லோகாதிகாரத்தினும் ஞானதிகாரமே சிறப்புடையது. ஞானமின்றி முத்தி (விடுதலை) எய்துதல் இல்லை. இவற்றினையெல்லாம் அமைவுறச்சிந்திப்பின், வேதம் சூத்திரம் போல்வதெனவும், ஆகமம் அச்சூத்-திரத்தின் விரிவுரை எனப்படும் பாடியம் போல்வ தெனவும் அறியலாம். ஆகமம், மயக்கமறச் சிவபரத் துவம் செப்பி, அதனை எய்துதற்கான ஞானமார்க்கத் தினை முடித்துக் கூறுகிறது. இதனால் சிவாகமத்துக்குச் சித்தாந்தம் என்பது பெயராகும். வேத முடிவே சித்தாந்தம், சிவாகமமே சித்தாந்தம். ஆகையால், வேதமுடிவாம் சிவாகம நெறியே சித்தாந்த நெறி எனப்படும். சிவத்திற்குச் சிறப்புடையதாய பரத்துவம் செப்புதலினாலே சிவாகம நெறியே **சித்தாந்த சைவ** நெறி எனப்பட்டது. இவ்வேதாக மங்களின் வேறாய நூல்கள் பூருவபக்க நூல்களெனப் படும். இவை, மாறுபடக் கூறுதலும், வேதத்தின் பூருவபக்கத்துப் பொருளைச் சொல்லுதலுமே தமக்

கியல்பாக உடையன, இவ்வழி மயங்கிச்செல்லும் சமயங்களெனப்படும். இவைகள் நாளடைவில் தெளிவடைய அடைய சித்தாந்த சாகரத்தே கலக்கும் துணைபெறுவனவாம். இதனாலேயே, சைவத்திறத் தடைதற்கு ஏனைய சமயங்கள் படிமுறைவாயில் எனப் படலாயிற்று. ஈனுப் பசுவொன்றை வாங்கி, ஏற்ற தீனியிட்டு வளர்த்துக் கருக்கொளச் செய்து கன்றீன வைத்து நாளும் ஊனும் உவப்பனவும் தந்து நாழி யளவு பால்பெற்றுப் பருகுவதினும், நேரே பாற் கடலேயே அடைந்து பருகி அவா அடங்கி யின்புறுதல் சாலச்சிறப்புடைய தென்பதை எவரே மறுப்பர்! இத் தகைய சித்தாந்த நெறியில் நிற்போர் ஞானத்தை அடை வதிலே நாட்டங் கொள்வர் ஞானத்தை அடைவதற் குரிய தவமாக நிகழ்வனவே படிமுறையாம் சரியை யாதிகள். அவற்றுள் இறுதியாவதே யோகம். இந்த யோகம் பல்வகைப்படுமாயினும் ஆலய வீதி போலே நேரே பயன் படுவன ஆதார நிராதார மெனப்படும் யோகங்களேயாம். இதனைச் சிவயோகம் என்பர். சிவயோகப்பயன் சிவசாரூபம் என்பர். தோழர்க்குரிய உரிமை போலச் சிவபெருமான் கொண் டருளும் திருமேனிகளுள் ஒருதிருமேனியைப் பெற்று அத்திருமேனிக்குரிய ஆபரணமும் போகானுபவமும் உடையராய் வாழ்தல் சிவசாரூபத்தியல்பாம். இதனை அபரமுத்தியுட் சேர்த்துரைப்பது வழக்காம். இவ்வபர முத்தியை எய்தாமே ஞானத்தடைவது முத்தி நன்னெறியாம்.

யோக நெறிப்பயிற்சியாவது கீழ் நோக்கிச் செல்லும் வாயுவையும், மேல்நோக்கிச் செல்லும் வாயுவையும் அடக்கி, சுழுமுனை மார்க்கத்தில் பிராண

வாயுவைச் செல்லும்படி நிறுத்தி, மனத்தை விடயங்களில் செல்லவொட்டாது திருப்பி, ஆறுதாரங்களிலுள்ள உயிர், மெய் என்னும் இரண்டு வகை அக்ஷரங்களின் முறைமையினையும் உணர்ந்து, அந்த ஆதாரங்களின் அதிதேவதைகளைத் தியானித்து, இந்த ஆறு ஆதாரங்களிலும் சிவனை வெளிப்படுத்துவதாகும் அசபா சத்தி சிவசொரூபமாய் நிற்கும் முறையினை நோக்கி, மூலாதார முதல் பிரமரந்திரமளவும் அந்த அசபையுடன் சென்றணைந்து, பிரமரந்திரத் தாமரை முகையை மலர்த்தி, அத் தாமரை மலரின் தாதுக்களின் நுனியிலுள்ள சந்திர மண்டலத்தினை மூலாக்கினியினால் இளகப்பண்ணி, அவ்வழி ஒழுகும் அமிர்தத்தைத் தேகமுழுதும் நிரப்பி, பூரணப்பிரகாசத்தைத் தியானித்தலாம். இதுவே அட்டாங்கயோகம் எனப்படும். இது வினைகள் கெடுதற்கு வழியாம். இது அகத்தொழில் எனவும் படும். சிவபெருமானுடைய அருவத் திருமேனியிடத்து இது நிகழ்த்தப்படுவதாம். அட்டாங்கயோகத்தினை, "அந்நெறி இந்நெறி என்னாது அட்டாங்கத்தன்னெறி சென்று சமாதியிலே நில்மின்; நன்னெறி செல்வார்க்கு ஞானத்தில் ஏகலாம்; புன்னெறி யாக்கத்திற் போக்கில்லையாகுமே" என்றுரைக்கின்றது திருமந்திரம். "தாண்டவமான தனியெழுத்து" என அசபை புகலப்படும்.

**வாயுவை அடக்குதலாவது :**

சுவாசமானது எப்போதும் வெளியே வருவதும், உள்ளே போவதுமாயிருக்கும். வெளியே வருவதை இரேசகம் என்பர். உள்ளே போவதைப் பூரகம்

என்பர். வெளியே வருவதை **நிசுவாசம்** எனவும் கூறுவர். உள்ளே போவதை **உசுவாசம்** என்பர். இங்ஙனம் செல்லவொட்டாது அடக்குதல் கும்பகம் எனப்படும். கும்பகம் எனப்படுவது, சுழுமுனை நாடியின் வழியாகப் புருவநடுவில் மனத்தோடு நிறுத்திப் பழகுதல் ஆகும்.

**ஆறுதாரங்களாவன :**

**மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனுகதம், விசுத்தி, ஆக்கினை** எனப்படுவன ஆறு ஆதாரங்களாம். இவற்றுள் 1. **மூலாதாரம்** என்பது குதத்துக்கு இரண்டங்குலத்துக்குமேல் குறிக்கு இரண்டங்குலத்திற்குக் கீழுள்ள இடம். இங்கு **முக்கோண வடிவம்** இருக்கும். அவ் வடிவத்தில் **நான்கு இதழ்களை** உடைய செந்தாமரையும் **வ—ஸ்ஸ—ஷ—ஸ** என்ற **நான்கு அக்ஷரங்களும்** இருக்கும். இவ்வாதார தேவதை **விநாயகர்** (தனக்குவமையில்லாத மேலான தலைவர்.) **2. சுவாதிட்டானம்** இலிங்கமூலத்தானமாம். இங்கு **அறுகோண வடிவம்** அமைவது. இதனில் காந்தியோடு கூடிய **ஆறிதழ்க்** கமலம் இருப்பது. அதனில், **ப்ப—ப—ம—ய—ர—ல** என்னும் ஆறெழுத்துக்களிருக்கும். இவ்வாதார தேவதை **பிரமன்.**

**3 மணிபூரகத்** தானம் **நாபி. மூன்று வட்டம்** வடிவாம். **பத்திதழ்த்** தாமரை இங்கிருப்பது. இதனில், **ண்ட—ட—ண—த—த்த—த—ந்த—ந—ப—ப்ப** என்ற பத்து அக்கரங்கள் இருக்கும். இவ்வாதாரத்தின் தேவதை **விஷ்ணு. 4. அநாகதத்துக்குத்** தானம்

இருதயம் வடிவம் முக்கோணம். இதில் பொன்னிறப் பன்னிரண்டிதழ்த் தாமரை இருக்கும் க—க்க—க—ங்க—ச—ச்ச—ஜ—ஜ்ஜ—ஞ—ஞ—ட—ட்ட என்ற பன்னிரக்கரங்கள் இதனிலிருப்பன. இதன் ஆதார தேவதை **உருத்திரன்**. **5. விசுத்திக்குத்** தானம் **கண்டம். அறுகோணம்** வடிவம். வெள்ளிய பதினறிதழ்த் தாமரை இதனுக்குரியது. இதில் அ—ஆ—இ—ஈ—உ—ஊ—ரு—ரூ—லு—லூ—ஏ—ஐ—ஓ—ஔ—அம்—அ: என்ற **பதினறு** அக்கரங்கள் அமைவன. இங்கு விளங்கும் தேவதை **மகேசுவரன்**. **6. ஆக்கினைக்குத்** தானம் **புருவநடு**. இது **இரண்டிதழ்ச்** செந்தாமரை உடையது. இதில் ள—க்ஷ என இரண்டெழுத்துக்களிருக்கும். இதன் அதிதேவதை **சதாசிவர்**. இந்த ஆருதாரங்களேயுமே அறுகாற் பீடமெனக் கொண்டு இவற்றின் மேலான பிரமரந்திரத்தில் ஆயிரம் இதழ்த் தாமரையில் 'மலர்மிசை ஏகினன்' எனப்படும் **பரமசிவன்** எழுந்தருளியிருப்பார். **அசபை** எனப்படுவது நாதவடிவாம் குண்டலினிசத்தி சொரூபம். மேற்கூறிய ஆருதாரங்களேயும் அவற்றின் அதி தெய்வங்களேயும் அறிதலே **தியானம்** எனப்படும். இயமம், நியமம் ஆதனம் மூன்றும் பயிலார்க்கு இவ்வநுசந்தானம் கைகூடாது. இவ்வாருதார யோகம்பற்றி, "நாலும் இருமூன்றும் ஈரைந்தும் ஈராறும்—கோலிமேல் நின்ற குறிகள் பதினறும் — மூலங்கண் டாங்கே முடிந்த இரண்டும்—காலங்கண் டானடிகாணலும் ஆமே" என்ற **திருமந்திரப்** பாடலும் உணர்த்தும். மற்றும், "ஆறிய அக்கரம் ஐம்பதின்மேலே — ஊறிய ஆதாரத்து "ஓரெழுத்தாமே" எனத் திருமந்திரம் புகலுமாற்ருல்

ஐம்பத்தோரக்ஷரமும் ஆவியை இயக்குமாறுணர்த்தப் பட்டதென்க. மற்றும், "இரண்டோடிரண்டு மூவிரண்டையிரண்டாறிரண்டு மீமிசை எண்ணிரண்டோடிரண்டு கொண்டிருந்த **இதழ்ப் பங்கயங்கள்** கடந்துபோய்— இருந்த குளத்தின் மேலோரா யிரந்தோட்டமல கமலமிசை— இருந்த சோதி" எனப் **பிரபுலிங்க** லீலையுள்ளும் ஆதார யோகம் கூறப்படுதல் காணலாம்.

இவற்றால், குருதிருவருளாற் கற்பித்தபடி அந்த அந்த ஆதாரங்களிலே அந்த அந்தத் தேவதைகளைத் தியானிப்பது ஆதாரயோக முயற்சியென அறியலாம். அந்த அந்தத்— தானத்திலும் வாயுநிற்ப மனமும் லயித்திடும். இம் மனோலயத்திலே அந்த அந்தத் தேவதா தரிசனம் நிகழும். இதனை, "**ஆக்கி ஒரு பொருளை ஆதாரத்து, அப் பொருளை அணுவில் நோக்கி**" என்று கூறிக் காட்டி யுள்ளார் நமதாசிரியர். இங்ஙனம் நோக்கு மளவும் தற்போதம் நிகழும். ஆனால் படிப்படியாக மெலி வுறும். இதனை, **அணுநெகிழ** என்று கூறுதலால் அறி யலாம். பையப் பைய அத் தேவதைகளின் தன்னை வேறாகக் காணாமல் அத்தேவதாமயமாகத் தானாகப் பழகுதல் வேண்டும். அப்போது ஆன்மா அவ்வத் தேவதையாகி விளங்கும். அப்போது 'தான்' என்பட தறும். இதனை, "**அணுநெகிழப் பார்க்கில் இவனானைக் தானொழிந்திட்டு ஏகம் ஆம்**" என்றுள்ள இடம் உணர்த்தும். இவ்வாறு தியானிக்கப்படும் முறுகுதலால் தியானிப்பானும் தியானிக்கப்படும் பொருளும் அன்றியே தன்னைமறந்து அந்தத் திவ்யரூபம் தானாக நிற்பது நிகழும். இதுவே ஆதாரயோகப்பயனும்.

இதனையே, "ஏகத்தவனுகை ஆதாரமாம்" என்றுரைத்தனர் ஆசிரியர். இது அந்த அந்தத் தேவதை மயமாகத் தானுகும் பழக்கத்தினைச் சித்திக்கச் செய்வதாம். பரிவாரத்தார், முதல்வனை இருப்பிடங் காட்டிச் செலுத்துவதுபோல இம்முறை பயன்படும். இதனை நாதவடிவாங் குன்டலினி சத்தி சொரூபம் அல்லது அசபா சத்தி (காயத்திரி) சிவ சொரூபமாய் நிற்கும் முறை என்பர். இதன் துணையே **சாலம்பயோகம்** எனப்படும். இதன்மேற்பட்டதே நிராலம்பம் அல்லது நிராதாரமாம் இந்த நிராதார யோகத்துக்கு அடிப்படைப் பயிற்சியே ஆதாரயோகம் ஆகும். மனேலயம் சுகோதய நிலையாதலால் இவ் யோகம் முற்கூறப்பட்ட தென்க.

---

## செய்யுள் — 24

### ஆதாரயோக நுணுக்கம்

**கொண்ட தொருபொருளைக் கோடிபடக் கூறுசெயின்**
**கொண்டவனும் அப்பரிசே கூறுபடும்—கொண்ட**
**இருபொருளு மன்றியே இன்ன திதுவென்று**
**ஒருபொருளே யாயிருக்கும் உற்று.**

**கருத்துக்கள்**

1. நுண்ணிதாகத் தியானித்தல்.
2. தியானிப்போன் நுண்ணிதாதல்.
3. கற்பனை கடந்த ஒப்பு.

**விளக்கம்**

'அநுபவமே சிறந்த ஆசிரியன்' என்பது ஒரு பழமொழி. பயிற்சியே தொடங்கிய காரியத்தை

இனிது முற்றுவிக்கும். அங்ஙனமே, சிவயோக சித்தி பெறுதலிலும் பயிற்சி வேண்டியுள்ளது. இதற்காகவே ஆதாரயோகம், பயிற்சியாக நின்று உதவுகின்றது. ஆதாரத்தையும், அதன்பின் வடிவையும், அதன் பின்னர்ப் பீடத்தையும், அதன் பிறகு அக்ஷரத்தையும், அப்பால் உரிய தேவதையையும் ஒருவன் படிப்படியே தியானிக்கவேண்டியுள்ளது. பிறகு தேவதை வேறு தான் வேருகக் கருதும் கருத்தழிவுகொள்ள வேண்டியுள்ளது. அப்பால் தேவதா சித்தி பெற்று ஒன்றும் நிலை விளேகிறது. இவ்வாறு படிப்படியாக ஒவ்வோர் ஆதாரத்தும் நிகழ்கின்றது இதனுல், உலகை மறத்தல், உடம்பினை மறத்தல், இந்திரியங்களை மறத்தல், கரணங்களை மறத்தல், எண்ணங்களைக் குறைத்தொருமையாக்கல், அறிவுக்குள் மனம் ஒடுங்கி நிற்றல், அறிவு தியானத்தில் ஊன்றுதல், தியானம் அசைவற நிலைத்தல், தேவதையோடொன்றுபடல் முதலிய பயிற்சிகள் படிப்படியாக முதிர்ந்து ஏகீபாவ முடிவுக்குச் செல்லுதல் நிகழ்கின்றது. இங்ஙனம் ஒவ்வொரு தேவதையையும் தரிசித்து ஒன்றுபடுதற்கண், அங்ஙனம் ஒன்றுபடுவோனது விரிந்த உள்ளம்—சுட்டியும் வரைந்தும் உலகப் பொருட்களைக் கண்டு கண்டு பழகிய உள்ளம் — சிறிது சிறிதாகத் தனது விரிவுத் தன்மையும், அலையுந்தன்மையும் குலையப் பெற்றுக் குவிவு எய்தலாகின்றது. சிதைந்து கிடக்கும் சுள்ளிகள் யாவராலும் எளிதில் ஒடிக்கப்படும். கட்டுண்டு ஒன்றுபட்டுச் சேர்ந்துள்ளவை எவராலும் சிதைவுரு. இவ்வாறே, பற்பல நாட்டங்கொண்டு பரந்துபட்டுச் சிதறும் உள்ளம், ஆதாரயோக தேவதாத் தியான ஒருமையால் நுணுகி ஒன்றுபடும்.

எனவே சுருங்கும் என்பது தெளிவாம். இது பற்றியே, **கொண்ட தொருபொருளைக் கோடிபடக் கூறு செய்யின் கொண்டவனும் அப்பரிசே கூறுபடும்"** என்றுள்ளார் இந்நூலார். இதனால், நாம் தியானிக்கும் பொருளை நுண்ணிதாக ஆக்கி யாக்கிப் பரமாணுவைக் காட்டிலும் சிறிதாகத் தியானிக்கப் பழகினால், தியானிக்கும் நெஞ்சும் நுண்ணிதாகியுதவும் என்பதறியலாம். இங்ஙனம் நுணுகினியும் தியானமில்லாத நெஞ்சு ஞானமில்லாத வினையும், மக்களில்லா மனைவாழ்வும் போலாம். 'ஓடுமனத்தை ஒடுக்கிடல் முத்தி' என்ற வாசகமும் இஃதுணர்த்தும். இதனை அறிவிக்கு முகமாகவே உருத்திர பசுபதி நாயனாரின் தியானநிலையைப் புலப்படுத்தக் கருதிய நம் சேக்கிழார் பெருமானும், "பெரும் பகலும் எல்லியும் வழுவாமே ... ஒருமை உய்த்திட உமையிடம் மகிழ்ந்தவர் உவந்தார்" என மொழிந்திடலானார். மற்றும், பெருமிழலைக்குறும்ப நாயனார் புரிந்த யோகத்தினைக் கூறுமிடத்தும், "நாலு கரணங்களும் ஒன்றாய் நல்ல அறிவு மேற்கொண்டு — காலும் பிரமநாடி வழிக் கருத்துச் செலுத்த" எனச் செப்பியுள்ளமை காணலாகும். இங்ஙனம் மனம் நுணுகி நுணுகித் தியானித்துக்கொண்டே போமாயின் படிப்படியாகத் தேவதையைக்காண்டல் முதலாம் கற்பனை தேய்ந்து போம். இதனால், தியானிக்கின்ற தன்னையும், தியானிக்கப்படும் பொருளையும் மனம் நினைதலறும். இதனோடு கற்பனை (பாவனை) முற்றும் நசித்துப்பாவனை கடக்கும் நிலைவிளையும். அப்போது (தியானக்கரையின் முடிவின்போது) ஒரே பொருளாக விளங்கும் தன்மை நிகழும். இதுவே ஒன்றுபடுநிலை எனப்படுவது.

இதனை, நம் ஆசிரியர், "கொண்ட இருபொருளும் அன்றியே இன்னதுஇது என்று(று) ஒருபொருளோ-யாய் இருக்கும் உற்று" எனக் கூறிக்காட்டியுள்ளார். ஆதலால், ஆதாரயோகம் பாவனையில் பழக்கிப் பின்னர்ப் பாவனை அறச்செய்தற்குரிய உபாயமா-மெனல் தேறலாம். இதன் பின்னர் நிகழும் நிலை அடுத்துவரும் பாடல்களில் கூறப்படும்.

---

## செய்யுள் — 25

## மந்திர யோகம்

அஞ்செழுத்து மேயம்மை அப்பர்தமைக் காட்டுதலால்
அஞ்செழுத்தை யாருகப் பெற்றறிந்(து) — அஞ்செழுத்தை
ஓதப்புக் குள்ள மதியும் கெடிலுமைகோன்
கேதமற வந்தளிக்கும் கேள்

**கருத்து**

ஐந்தெழுத்தும் அம்மையப்பரும்
ஐந்தெழுத்து அறிந்தோதல்
தற் போதம் கெடல்
உமைகோன் அளித்தல்

**விளக்கம்**

சிவத்தைத் தியானித்தல்லது முத்திப்பேறெய்துதல் அரிது. படகுக்காரன் உதவியின்றிப் பெருவெள்ளம் கடந்து கரைசேர்தல் இயலாது. சிவத்தினை உணர்த்தும் மந்திரமே பஞ்சாக்கரம். ஐந்தெழுத்தே சிவத்தின் திருமேனி என்பர். ஐந்தெழுத்தில் அடங்காத

தேதுவும் இல்லை. ஐந்தெழுத்தே **அகாரம் உகாரம் மகாரம் விந்து நாதம்** எனப்படுவது. இதனைப் பிரணவம் என்பர். முன்பு ஆதாரதேவதைத் தியானம் கைவந்தவர்கள் நிராதார யோகத்தே புகுதற்கண் இப்பஞ்சாக்கரத்தையும் அவற்றின் தேவதைகளையும் முற்கூறியாங்கு தியானித்துப் பழகின் இம்மந்திர யோகம் உபாயயோகமாகி உதவும். மேற்கூறப்பட்ட ஐந்தின் தேவதைகளாவார் பிரமா, விஷ்ணு, உருத்திரர், மகேசுரர், சதாசிவர் எனப்படுவர். இவர்களை மந்திர மூர்த்திகள் என்பர். ஓங்காரமாய் நின்று நடத்தும் இந்த ஐந்தெழுத்தும் சத்தியை உடைய சிவத்தின் திருமேனி எனப்பட்டு, அது நடத்தும் முறைமையை உணர்த்தும். ஆதலால் ஐந்தெழுத்தே அம்மையப்பர் எனப்படும். இதனையே, "**அஞ்செழுத்து மேயம்மை அப்பர்தமைக் காட்டுதலால்**" என்றார் ஆசிரியர்.

மேற்சொல்லிய இந்த ஐந்தெழுத்தும், **மூலாதாரத்தில்** அகரமும், **நாபிக் கமலத்தில்** உகரமும், **இருதயத்தில்** மகரமும், **கண்டத்தில்** விந்துவும், **புருவமத்தியில்** நாதமும் ஆகி நிற்கும். இவற்றிற்கு முறையே அந்தத் தானத்தே பிரமாவும், விஷ்ணுவும், உருத்திரனும், மகேசுவரனும், சதாசிவமும் மந்திர மூர்த்திகளாகியுறைவர். இங்ஙனம் மூலமுதலாகச் சுழுமுனைநாடியில் நிற்பது முறைமையாம். இவற்றின் முறைமைகளைக் குருவின் உபதேசத்தால் அறிதலே முறை. இந்த ஐந்தெழுத்தையும் மூலாதார முதலாகப் பிரமரந்திரத்திலே செல்ல உச்சரிப்பின் பிரணவ சொரூபம் கரைந்து மேற்சொல்லப்பட்ட விக்கிரகங்களும் ஒரு நீர்மையாகும். இப்படியே சென்று முடிவில் நாத ரூபமாய் நாதாந்தத்தில் அருளைப்பெற இயலும்.

இதனால் அருளைப்பெறுமுறை உணர்த்தப்பட்டது. அருளைப் பெறுமல் சிவத்தைப் பெறுதல் இயலாது. இதனை நோக்கியே, "**அஞ்செழுத்தை ஆருகப் பெற்றறிந்து**" என்றுள்ளார் ஆசிரியர்.

பின்னர், இந்த ஐந்தெழுத்தையும், அறிவாற் கணித்துச் சேரின் உச்சாரண பேதத்திலே விந்துவும் நாதமுமாகி விளங்கும். இந்த இரண்டும் உச்சரிப்பின் முடிவினை எய்துகையில் ஆன்மபோதம் கரையத் தொடங்கிக் கெடும். இந்த ஆன்மபோதக் கரைவே தன்னை இழத்தலாம். இங்ஙனம், ஒரு சிறிதும் தற்போதம் தலைப்படாதொழியின் சிவம் வெளிப்படும். இதனையே, "**அஞ்செழுத்தை ஓதப்புக்கு உள்ள மதியும் கெடில் உமைகோன் வந்தளிக்கும்**" என்றுர் ஆசிரியர். இங்ஙனம் சத்திக்குக் கர்த்தாவாகிய சிவன் தோன்றப் பெறின் ஆன்மாவின் மலமகலும். ஆகலின் "**கேதமற**" என்றுர். "**கேள்**" என்றமையால் இம் மந்திரயோக முறை குருவருளாலன்றி அறிந்து செயல் இயலாதெனத் தெரியலாம்.

எனவே, ஆதாரயோகம் மூன்று திறத்தாய் நடைபெறுவதைக் காணலாம். அவையான **தூலம், சூக்குமம், பரம்** என்பவையாம். இவற்றுள் **தூல**மாவது ஆதார தேவதையிலேயே மனம் லயிக்கப் பழகுதலாம். அத் தேவதையும் தானும் அபேதமாய்க் கலத்தல் **சூக்குமம்** ஆம். மேற்கூறப்பட்ட மந்திர யோகசித்தியால் நாதாந்த நிலை எய்தி அருள் (சத்தி) வயப்படுதல் **பரம்** எனப்படும். இம் மூன்றன் முடிந்த பயன் ஆன்மபோதக் கரைவு ஆகும் என்ப. மற்றும், இவ்விடத்தே சிவஞானபோத நூலின் ஒன்பதாம்

சூத்திரம் மூன்றும் அதிகரணத்தில் கூறப்பட்டுள்ள "அஞ்செழுத்தால்......அங்கு" என்னும் உதாரண வெண்பாவின் உரைகளையும் ஓதியுணர்தல் தகும். நிராதார யோக சாதனைக்கு இவ்வநுபவம் தேவையாம்.

## செய்யுள் — 26

### நிராதாரயோக விளக்கம்

**ஆக்கப் படாத பொருளாய் அனைத்தினிலும்**
**தாக்கித்தான் ஒன்றேடும் தாக்காதே—நீக்கிஉடன்**
**நிற்கும் பொருளுடனே நிற்கும் பொருளுடனாய்**
**நிற்கை நிராதார மாம்.**

**கருத்து**

1. ஞானசொரூப சிவத்தியல்.
2. ஞானசொரூபப் பேறு.
3. ஞானசொரூபமாம் நிராதாரம்.

**விளக்கம்**

முப்பொருள்கள் பதி–பசு–பாசம் என்பனவாம். இவற்றுள் பதியே முழு முதல்வன் ஆவான். பொருள்கள் யாவும் ஆக்கப்பொருள், ஆக்கப்படாத பொருள் என்ற இருதிறத்தன. ஆக்கப்பொருள் செயற்கை எனப்படுவது. ஆக்கப்படாததே இயற்கை எனப்படுவது. இயற்கை எனப்படுவது தானே யாண்டும் அழிவின்றி உள்ள பொருளாம். உயிர்களும், இறைவனும் இயற்கைத் தன்மை உடையனவே. உயிர், இன்ப நிறைவில்லாதது. இன்பம் அடைய

முயல்வது. மாயை உள்பொருளே ஆயினும் அதன்பால் அறிவுமில்லை; இன்புமில்லை. இறைவனே சத்துச் சித்து ஆனந்தம் என்னும் மூன்று இயற்கை-களும் உடையான். எனவே சிறப்பு வகையால் உயிரையும் இறையையும் இயற்கைப் பொருள் எனச் செப்புவரேனும், மேற்சொன்ன தன்மைகளை உடைமையில் வேறுபாடுள்ளது. உணர்வுமிக்க வுடைய பொருளே இயற்கை இயல்புமுற்ற உடைய தாகும். உணர்வு மூன்று வகைப்படும். அவை சுட்டுணர்வு, சிற்றுணர்வு, முற்றுணர்வு எனப்படுவன. இவற்றுள் சுட்டுணர்வும் சிற்றுணர்வும் உயிர்க-ளியல்பாம். முற்றுணர்வு இறைவன் இயல்பாம். முற்றுணர்வுடைய பொருளைச் சிற்றுணர்வுடைய பொருள் செய்ய (படைக்க) இயலாது. முற்றுணர் வுடைய பொருளே மற்றவற்றின் இயல்புக் கேற்பப் படைத்தலாதி புரிந்துதவும். ஆதலால் இறைவனே தனக்கொருமுதல் இல்லாதவன். ஆதலால் விழுமி யோன் ஆவன். விழுப்பம் உடைய பொருட்கு ஆக்கப்பாடு தேவையின்றும். இதுபற்றியே, "**ஆக்கப் படாத பொருளாய்**" என்றனர். மற்றும், ஆக்கப் பொருளாயின் புலனுலும் கரணங்களாலும் காண்டற் கியலும். அங்ஙனம் முதற்பொருளைக் காண்டல் இய லாது. எனவே ஆன்மபோதத்தால் கற்பிக்க இயலாத பொருளாகக் கடவுள் உள்ளவன் என்பதையும் இச் சொற்றொடர் உணர்த்தும் என்க.

இத்தகைய பொருள் [illegible]ருப்பதால் நமக்கென்ன பயன் எனக்கேட்டல் கூ[illegible] உயிருக்குச் சுதந்தர மில்லை. மாயை

கூட்டி இயக்கவேண்டியுள்ளது. அங்ஙனம் கூட்டும்

சத்தி சிவத்துக்கே உள்ளது. இங்ஙனம் கூட்டி நடத்தும் பொருட்டு உயிரோடும் ஏனைப் பொரு-ளோடும் கலக்கவேண்டியுள்ளது. இதனை, ஒன்ருய், வேருய், உடனுய் இருக்கும் தன்மை என்பர். இங்ஙனம் கலப்பிருப்பினும் அப் பொருளுக்குள்ள விகாரங்கள் எதுவும் இறைவனை அடையாது. சூரியன் சூரிய காந்தக்கல் மூலம் பொருளை எரிக்கிருன். குளத்துத் தாமரையை மலர்த்துகிருன். இங்ஙன மெல்லாம் அவ்வவற்றிற் கேற்ற தொழில்களைச் செய்யினும் தான் எந்த மாறுதலும் எய்தான். இதனுல் உயிர்கள் நுகரும் எதனையும் அவற்றை நுகரு மாறு கண்டும் காட்டியும் இறைவன் உதவியாற்றினும் அந்நுகர்ச்சி வேறுபாட்டின் இன்பதுன்பங்களை முதல்வன் எய்தப் பெருன். "தோய் விலன் உணர்வின் மூர்த்தி" என்றும் பெரியோர் இவ்வியல்பினைப் போற்றுவர். இதனையே "**அனைத்தினும் தாக்கித் தான் ஒன்ருேடும் தாக்காதே**" என்றுள்ளார்.

இவ்வாறு உயிர்களை அநாதி தொட்டே கலந்திருந்து அவற்றை முத்தி நெறிக்கே இறைவன் செலுத்துகின்ருன். அங்ஙனம் செலுத்து முறைக்கண் அவ்வவ்வுயிர்களின் பக்குவ அபக்குவங்கட்கேற்ப முத்திப்பேற்றுக்கு விரோதமானவற்றை யெல்லாம் பையப் பையப் பற்பல பிறவிகளிலும் நீக்கி நீக்கித் தூய்மையுறுத்திப் பின்னர்த் தன்னடிப்படுத்து கின்ருன். இவ்வாறு இறைவன் உள்நின்று உணர்த்திப் புரியாவிடில் அல்லற் கடலுக்குள்ளேயே ஆழ்ந்துழல வேண்டியிருக்கும். படிப்படியாகச் சரியை, கிரியை, யோக நெறிகளிலே உயிர்களை உள்நின்றே செலுத்திப் பின்னர் ஞானநெறிக்கண் செலுத்தும்போது

குருபரனாக வெளிப்படுகிறான். இங்ஙனம் வெளிப்படு முன்னர் உள்ளிருந்துணர்த்திச் செய்யும் உதவியை, "**நீக்கி உடன்நிற்கும் பொருளுடனே**" என்றனர் ஆசிரியர். இங்ஙனம் உள்ளிருந்தியக்கினலல்லது அவ்வவற்றின் இயல்புக் கேற்ப உதவுதல் இயலாதென்பர். குருபரனாக வெளிப்பட்ட பின்னர் உபதேசம், தீக்கையாதிய புரிந்து பற்றறுத்து ஞானமெய்தச் செய்கின்றான். இந்த நிலையில் ஜீவனுடைய தற்போதம் கழலவேண்டும். இந்தச் சீவபோதக் கழற்சிக்கே ஆதார மந்திரயோகங்கள் வழி செய்வன. முற்றும் சீவபோதம் கழன்று சிவபோதத்துள் ஒன்றுபடுதலே ஞான சொரூபம் எனப்படும். இது பற்றற்ற நிலை எனவும்படும். இப்பற்றறும் நிலையே நிராதார யோகம் எனப்படும். "அஞ்சே அஞ்சாக அறிவே அறிவாகத் துஞ்சாதிருந்துணர்" என்று திருவுந்தியாருள் இந்நிலை புகலப்படும். இதுகாறும் ஆன்மாவுக்குள் சிவம் எங்ஙனம் மறைந்திருந்ததோ அங்ஙனமே சிவத்தினுள் ஆன்மா அடங்கிநிற்றல் வேண்டும். யாதொருவிதமான ஆதாரத்தையும் பற்றாமல் சிவாதாரமாய் ஞானத்தால் ஒன்றுபட்டு நிற்கும் முறை இதுவாதலால் இதனை நிராதாரயோகம் என்றனர். சிவத்தைவிட்டு நிற்றல் ஒருபோதும் சீவனுக்கு இயல்வதன்று. ஆகையால், "**நிற்கும் பொருளுடனாய் நிற்கை நிராதாரமாம்**" என்றார் நம் ஆசிரியர்.

## செய்யுள் — 27

## ஞானத்தில் நிற்றல்

காண்கின்ற தோர்பொருளைக் காண்கின்ற யோகிகளே
காண்கின்றார் காட்சியறக் கண்ணுதலைக்—காண்கின்றார்
காண்பானும் காணப் படுபொருளும் அன்றியே
காண்கையினால் கண்டனரே காண்.

### கருத்துக்கள்

1. காட்சியறக் காண்டல்.
2. ஞானமாகவே நிற்றல்.
3. சிவனைப் பெறுதல்.

### விளக்கம்

ஒரு பொருளைக் கண் காண்கின்றது. ஆனால் அதனோடு ஆன்ம அறிவு செறிந்துறைந்து காட்டுகின்றது. ஆதலால், ஆன்ம அறிவின் வழியே கண்ணொளி கலந்து ஒன்றுபட்டுக் காட்சி நிகழ்கின்றது. ஆனால், அவ்வான்ம அறிவுக்குள்ளும் உள்ளீடாக இருந்து காட்டுவது சிவசைதன்யமேயாம். ஆன்மா இதனை அறியாத வரையில் சிற்றுணர்வு வயப்பட்டுச் செருக்குறும், சிவசைதன்யமாவது அவனது திருவருளேயாம். எனவே, எல்லாவற்றையும் அறிந்தும், அறிவித்தும் நிற்பது சிவஞானமெனப்படும். பதிஞானமேயாம். இப்பதிஞானம் ஒருங்குணர்வாதலால், இவ்வழிக்கலக்கும் பசுஞானம் கரைந்துபடும். இங்ஙனம், ஒன்றுபட்ட சிவஞானத்தையே கண்ணாகக் கொண்டு காண்கின்றவர் சிவயோகியர் எனப்படுவர். இவரே சிவனை இரண்டறக்காணும்

கலியாணர்கள் எனப்படுவர். இதனால், ஆன்மாவுக்குரிமைப்பாடுடையதான வியாபக அறிவு தலைப்பட்டமை தெரியலாகும். இதனால் உயிர், முதல்வனுடைய அருள்வழி நின்று அவனது காணுமுபகாரத்தோடு ஒன்றுபடுகின்றமை தெரியலாம். இந்த நிலையில் ஆன்மா சிறப்படிமையுற்ற தென்ப்புகல்வர். இதனையே நம் ஆசிரியர், **"காண்கின்றதோர் பொருளைக் காண்கின்ற யோகிகளே கண்ணுதலைக் காட்சியறக் காண்கின்றார்"** எனலாயினர். கண்ணுதல் என்றமையால் காணுமுபகாரம் நிகழ்தல் தெரியலாம். **காட்சியற** என்றமையால் சிவபோதக்கரைவு தெரியப்படும்.

ஞானமே சிவ சொரூபமாம். இந்த ஞானமே திருவருள் எனப்படும். இத்தகைய திருவருளில் அழுந்தப் பெற்றவர்கள் தம்மையும் காணார்; தாம் தனித்திருந்து காணுதலையும் அறியார். காணப்பட்ட பொருளாகிய சிவத்தினைத் தமக்கு வேறாகக் காணார். இதனால் காண்பான்முதலிய வேறுபாடற்றுச் சிவனை அப்பொழுதே பெற்று வேறறநிற்பர். இதனை, **"காண்கின்றார் காண்பானும் காணப்படு பொருளும் அன்றியே காண்கையினால் கண்டனரே காண்"** என நம் ஆசிரியர் புலப்படுத்தியுள்ளார். இவ் வெண்பாவின் இறுதியடி முற்றுமோனை பெற்றிருத்தல், காண்பான் முதல மூன்றும் ஒன்றுபடுதலை உணர்த்தும் ஒரு நயமாக அமைந்துள்ளமை காணலாம். எனவே நிராதார யோக மேற்கொள்வோர் தம்மை மறப்பர். சிவம் காண ஒழுகுவர் என்பது பெறப்படும்.

## செய்யுள் — 28

### மவுனயோகம்

பேசாமை பெற்றதனில் பேசாமை கண்டனரைப்
பேசாமை செய்யும் பெரும்பெருமான்—பேசாதே
எண்ணொன்றும் வண்ணம் இருக்கின்ற யோகிகள்பால்
உள்நின்றும் போகான் உளன்.

**கருத்துக்கள்**

1. பேசாமை மேற்கொள்ளல்.
2. பெருமான் அருளல்.
3. மனம் ஒன்றியிருத்தல்.
4. சிவ வெளிப்பாடு.

**விளக்கம்**

உயிர்க் கரணங்கள் மூன்றும். அவை மனம், வாக்கு, காயம் என்பன மனம், இந்திரியங்களின் வழியே வெளிமுகப்பட்டு, உலகியல்களை மூட்டை மூட்டையாகக் கொண்டுவந்து அடுக்குகின்றது. இறக்குமதி செய்த வியாபாரி இறக்குமதியான சரக்குகளைப் பற்றியே எண்ணுவன்; பேசுவன்; அவற்றை மாறும் செயலையே புரிவன். இங்ஙனமே, மக்களாவர், தம்முள்ளத்தே வந்தடைந்த நிலையற்ற உலகியற் பொருள்களைப்பற்றியே சிந்திப்பதும், பேசுவதும் தொழிற்படுவதுமாயிருப்பர். இவ்வாறே தம் வாணாள் கழிதலைக் கருதாது அவம்புரிந்து சவமாவர். இங்ஙனம் ஒழுகுவதே உலகாயதர் இயல்பு. ஆனால், சரியையாதி மார்க்கங்களிலே (உண்மைத் தவநெறியிலே) செல்வோர் இயல்பு இதற்கு

மாறுபட்டதாகும். அவர்கள், ஞானநெறியில் செல்பவ ராதலால் அகமுகப்பட்டொழுகுவர். இதனுல் அவர்கள், தம் உடல், பொருள், ஆவி மூன்றையும் குருவடிவாம் இறைவற்கே தத்தம் செய்து கவலையற்றிருப்பர். "யாதனின் யாதனின் நீங்கியான் நோதல் அதனின் அதனின் இலன்" எனத் திருவள்ளுவர் கூறுவதனுல் ஒவ்வொன்ருக விடுவோர்க்கும் இன்பம் படிப்படியாகக் கிட்டுதலை உணரலாம்.

தேகம் முதலியன நமக்கு வேருனவை. ஆதலால் இவற்ரோடு கூடின் பயனில்லை. கூடினுல் கர்மம் விளைந்து பிறப்பு வரும். மேலும், இறைவனுக் குரிமையாக்கப்பட்ட இப் பொருட்களை மீண்டும் நம்முடையவாகக் கருதிப் பயன்படுத்தலும் நீதி யாகாது. இவற்றுள், மனம் என்பது ஆன்மாவுக்கு நெருங்கிய துணையாய் நிற்பது. "நெஞ்சிற் குறுகியதோர் கரியில்லை" என்பர். இந்த மனம், ஆன்மாவானது தத்துவங்களை நீங்கின இடத்தும் பதியைச் சாராமல் 'நானே முதல்வன்' என்ற எண்ணத்தை எழுப்பும். மனம் ஆன்மாவோடு சீவனென்றும் சிந்தை என்றும் வேறுபடுத்தவொண்ணு வண்ணம் நெருங்கி நிற்றலால் பசுஞானம் என்றே கூறப்படும். இது கீழ்நாடும் ஞானமாதலால் இதனுல் உயிர்க்குயிராம் பரம்பொருள் எண்ணப்படாமை உணரலாம். "மாற்றம் மனம் கழியநின்ற மறையோன்" என இறைவன் பேசப்படுதல் காணலாம். வாக்கு என்பது நாதத்தையும் பிருதிவி முதலிய தத்துவங்களையும் குறிக்கும். தத்துவங்களின் மூலமாக ஆன்மாவுக்கு நிகழுவது பாசஞானமாம். ஆதலால், வாக்கும் முழு முதலை உணர்ந்தொன்றுபடுதற்கண் பயன்படுதலில்லை.

மற்றும், வாக்கு என்பது நூலுணர்வாம். நுண்ணியோன் நூலுணர்வு உணரவாரான். இவ்வாறு வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாமையாலே கடவுளை அது என்றழைத்தனர். அது என்றமையால் பொதுவாயுணரப்படுதல் அறியலாம். வாக்கு மனம் காயம் எனுமிவற்றில் அடக்க இயலாதது வாக்கு. பேச்சு நிகழுமாயின் வஞ்சமும் உடன் நிகழும். ஆதலால் வாய் அடங்கிய மவுனம் வேண்டும். "சும்மாஇரு சொல்அற" என்பது உபதேச மொழியாம். சிலப்பதிகாரத்தே, கவுந்தியடிகளால் தூர்த்தர் சபிக்கப்பட்டமை கூறப்படுகிறது. இதனுல் தூர்த்தராவார், தம்முடைய சொற்குற்றத்தாலேயே சாபமெய்தினர் என்பது தெரியலாம். அன்றியும் சமணத் துறவுடைய இம்மகளார் சாபமிட்டதும் குற்றமே ஆயிற்று. இதனுலேயே இளங்கோ அடிகள், இவ்வடிகளைக் குறைபாடுடையவராகவே கூறிக் காட்டியுள்ளார். "காக்கப்படுவன இந்திரியம் ஐந்தனுள் நாக்கல்லது இல்லை" என்பது வளையாபதிக் கூற்று. மொழிதற்பொருட்டாக மனம் முதலில் எண்ணவேண்டியுள்ளது. மொழிந்தபின் செயல் நிகழ்த்தவேண்டி நேரிடுகின்றது. ஆதலால், இடை-நின்ற வாக்கினை அடக்கிவிட்டால் அடக்கமுடைமை கைகூடிவிடும். சிவம் வாக்கிற்கும் மனத்துக்கும் எட்டாதது. அதனுல் அவனை ஞானதிருஷ்டியால் ஒட்டியுணரவேண்டுவதாயிற்று. ஞானதிருஷ்டியாற் கண்டு கூடினுல் செயலறும். இதுவே பூரணமவுனம் எனப்படும் சிவயோகமாம். ஆசாரியன் உரையிறந்-திருக்குமாறு தான் உபதேசிக்கின்றுன். "உணரப் படுவாரோடு ஒட்டி வாழ்தி" என்பர் ஆரும்

திருமுறையிலும். "உணர்கின்ற யோகிகள் ஒன்றேடும் தழுவாமல் நிற்பர் " என்பர் திருவுந்தியாரிலும்.

இவை கருதியே, "**பேசாமை கற்று**" என்றார். **கற்று** என்றதனால் குருமுகமாக இதன் சாதன முறை கற்க வேண்டும் என்பதாயிற்று. இப்பேசாவிரதம் பேணுதல் அரிதாம். வாய்விட்டோதிய முனிவர் கட்கும் இறைவன் சொல்லாமலே சொன்னான். இது கண்டவர் பேசாமை கொண்டனர். ஆதலால், "**அதனிற் பேசாமை கண்டனரை**" என்றார் ஆசிரியர். **கண்டனரை** என்றமையால் அநுஷ்டித்தல் பெறப் படும். இங்ஙனம் பேசா அநுபூதி பிறந்த பின் இறைவனும் இனியொரு சரீரம் தந்து பேசச் செய்யாமே பிறப்பறுப்பான். ஆகையால், "தாழ்மணி நாவே போல்" கிடத்தல் சீரிதாம் என்க. சொல்லுதல் யார்க்கும் எளிய என்பதனால் பேசாமையே அரிய செயல் என்பது பெறப்படும்.

இவ்வாறு, செயலற்று, உரையற்று, மனமும் வேறெண்ணல் அற்று, சுட்டியறியப்படும் ஏகதேச அறிவு வயப்படாமல் அதாவது ஆன்மபோத நெறிப் படராமல் சிவாநுபவமாத்திரையே ஒழுகுவதே நிராதார யோகப்பயிற்சியாகும். இதனால் சிவனது திருவடி ஞானமே ஞானமாகக் கரைந்துகிடப்பின் சிந்தையாதி மூன்றும் அசைவறும் எனத் தெரியலாகும். இதனைப் "**பேசாதே எண்ணொன்றும் வண்ணம் இருக்கின்ற யோகிகள்பால் உள்நின்றும் போகான் உளன்**" என்று கூறிக் காட்டியுள்ளார் ஆசிரியர். **எண்ணொன்றும் வண்ணம்** என்றமையால் எண் இறந்து சிவனோடிரண்டற்றிருத்தல் வேண்டுமென்பது புலப்படும். **போகான்**

என்பதனால் சிவவெளிப்பாடு கூறப்பட்டமை தெரியலாம். இதனை "ஒருமகள் கேள்வன் கருத்தழியப் பாயும்" என்றுள்ளார் திருவுந்தியாரில். ஆன்ம அறிவுக்கு உள்ளீடாக எப்போதும் உளனாதலால் உளன் என்றார். சிவத்தினை. "செயலறுத்திட உதிக்கும் தற்பரம்" என்பது சிவப்பிரகாசம். இதனால், அருள் வெளிப்பாடாகிய பதிஞான மேலீடு சிவவெளிப்பாடு பயக்கும் என்பது தெளியப்படும்.

## செய்யுள் — 29

### பிரபஞ்சரூபமும்—சிவசொரூபமும்

ஓட்டற்று நின்ற உணர்வு பதிமுட்டித்
தேட்டற்று நின்ற இடம்சிவமாம்—நாட்டுற்று
நாடும் பொருளனைத்தும் நானா விதமாகத்
தேடுமிடம் அன்று சிவம்.

#### கருத்துக்கள்

1. பிரபஞ்சப் பொருட்கள் சிவம் ஆகா.
2. பிரபஞ்சத்துக்கு அப்பாலதே சிவம்.

#### விளக்கம்

ஒரு நதி எவ்வளவு உயர்ந்த இடத்தில் உற்பத்தியானபோதிலும் அதன் நீரோட்டம் அமைதி பெறுவது. அந்த நீர், தான் எங்கிருந்து கொண்டுவரப்பட்டதோ அந்த இடத்தையே தேடியோடிக்கொண்டே செல்லுகிறது. குறுக்கே அணைகட்டித் தடுத்தால், தன் பலங்கொண்டு அதனைத் தகர்த்தேக முயலுகின்றது;

அல்லது, பக்கத்தில் பெருகி ஓடித் தப்புவதற்கு முயலுகிறது. "பெருக்காறொத்தது செல்வம்; பெருக்காற்று இடிகரையொத்தது வாழ்நாள்" என்பதுபோன்ற நீதிநூல் அறிவுரைகளும் இதனை உணர்த்தும். இதனால் ஆற்று நீர், அமைதியில் நாட்டங் கொண்டோடுதல் தெரியலாம். இந்த நீரானது கடலினை அடைந்து கலந்ததும், தானும் கடலாகிப் பெருமையும் அமைதியும் கலங்கா நிலைமையும் பெறுகின்றது. இளங் குழந்தையானது தாயினை நோக்கி ஓடிச் சந்தோஷம் அடைகிறது. கற்புடை மகளிர், கொழுநரை எய்தியபின் மகிழ்வடைகின்றனர். நல்ல மாணுக்கர், நல்லாசிரியரை அடையப்பெற்றபின் அமைதி அடைகின்றனர். இங்ஙனமே, நம் ஆன்மா, சிறைச்சாலைக் கைதியைப்போல, விடுதலையும், மகிழ்வுமே நாடுகின்றது. ஆனால், அவ்வான்மாவுடன் ஒன்றுபட்டு நிற்கும் மனமானது அகமுகப்பட்டு அமைதியே நோக்கிச் செல்லாமல், வெளிமுகப்பட்டுப் பிரபஞ்சப் பொருட்களை அறியாமையால் 'அமைதி நிலையம்' என எண்ணி ஓய்வற்றுழல்கின்றது. எது உண்மையான சார்பு எனத் தெரியாமையால் இடர்ப் படுகின்றது. சுட்டுணர்வும் சிற்றுணர்வுமே ஆன்ம இயல்பாகப் பெத்த நிலையில் பொருந்தியிருத்தலால், நிலையற்றவற்றை நிலையானவை என எண்ணிப் பேராசைப் பெருஞ்சுழலுட்பட்டுக் கலங்குகிறது நெஞ்சம். ஐம்புலன்களின் வழியே உள்ளே புகும் பொருளாசையே மனத்தை அலைச்சற்பட வைக்கின்றது. ஆதலால், ஆசிரியர் **நாட்டுற்று** என்றுள்ளார். இங்ஙனம் நாட்டமுறுதல் புல்லறிவாண்மை எனப் புகலப்படும். இப் புல்லறிவால் தேடப்படும் எந்தப்

பொருளும் உள்ளத்துக்கு ஒய்வளியாது. தேடும்போது வருத்தம், இழந்துவிட்டாலும், இல்லாவிட்டாலும் கவலை, காக்கும் பொறுப்புச் சுமைத்துயரம், பேரிழப்பின் ஏக்கம் ஆகியவைகளே பொருள் விருப்பால் விளைவன. அவலம், கவலை, கையாறு, அழுங்கல் முதலியவற்றால் அமைதி ஏற்படாது. ஒவ்வொரு தத்துவமும் ஆசையைப் பெருக்குவதிலேயே துணைபுரியும். இதனால் ஐயக்காட்சி, விபரீதக் காட்சி முதலிய வாய்க்குமேயன்றி உண்மைக் காட்சி கிட்டுவதில்லை. விசுவத்துக்குட்பட்ட பொருள்களிலே சிவத்தைக் காண்டல் இயலாது. மணல் சோற்றினால் பசி தீராது. தத்துவங்களை ஒவ்வொன்றாகக் கடந்து சென்றபின் விளையும் ஆன்ம தரிசனத்திலும், தற்போதமே தலைதூக்கி நிற்பதால் இன்பம் விளைவதுபோல் காணப்படினும் உண்மையின்பு நிலைப்பதில்லை. ஆதலால், இத் தற்போதமும் கரையவேண்டியுள்ளது. தற்போதக் கரைவென்பது ஆன்மஞானம் சிவஞானத்தோடு ஒன்றுபட்டு விடுதலாம். இங்ஙனம் நிகழாதவரையில் சிவம் தோன்றாது. ஆனதுபற்றியே, "**நாடும் பொருளனைத்தும் நானாவிதமாகத் தேடுமிடம் சிவம் அன்று**" என்றுள்ளார். "**நாடும் பொருள்**" என்றமையால் அவை மென்மேலும் ஆசை விளைப்பன என்பதை அறியலாம். **நானாவிதமாக** என்றமையால் உண்மைக் காட்சி விளையாமை புலப்படுத்தப்படுகிறது. "**தேடுமிடம்**" என்றமையால் தத்துவங்கள் என்பது பெறப்படும். **சிவம் அன்று** என்றமையால் சிவம் **விசுவாதீதன்** எனல் உணர்த்தப்பட்டது. **அன்று** என்றமையால் ஆவது எது என்ற முயற்சி கொள்ளவேண்டும் கடமை

தெரிவிக்கப்படுகின்றது. இனி, அச்சிவம் எவ்விடத்து வெளிப்படுவதென்பது கூறப்படுகின்றது.

நாம் விடுதலை அடைதற்கு இந்த உடம்பும் உள்ளே உள்ள கரணங்களும் துணையாக உதவப் பட்டுள. பொருளைத் தேடுவதற்கு இருளிடத்தே விளக்குப் பயன்படுவதுபோல இவை பயன்படுவன, சூரியன் பிரகாசிக்கும் நேரத்திலே இந்த விளக்கொளி மங்கிவிடுகிறது. சூரியனொளியினுதவியே பொருளைப் புலப்படுத்திவிடுகிறது. அருளொளி உதயத்திலே எப்பொருளின் இயல்பும் தெற்றென உணரப்படும். நம் அறிவு உடம்பினூடே வெளிச்சென்று பொருளைக் காணும்போது **சுட்டறிவு** எனப்படும். இங்ஙனமின்றி, உள்முகப்பட்டுக் காணும்போது ஆன்மாவாகிய தன்னைக் காணும். இந்நிலையில் 'நான் காண்கிறேன்' என்னும் முனைப்பிருத்தலால் **சிற்றறிவு** எனப்படும். இதனையும் கடந்து உயிர்க்குயிராம் பொருளைக்காணத் தலைப்பட்டு நிராதார யோகநிட்டையில் நிற்பின் ஆன்ம அறிவு சிவத்தருளில் அழுந்தும். அதன்பின் உயிர் காணுதலால் கண்காணுதல்போல் சிவத்தின் காணுமுபகாரம் நிகழ்வுறும். இந்த நிலையில் சீவபோதம் மன எல்லையைக் கடந்து அருளெல்லையில் ஆழ்ந்திடுதலால் தன்னைமறந்திடும். சிவபோதமே இந்நிலையில் நிகழ்வது. ஆதலால், சீவபோதம், சிவபோதத்தே ஒன்றுபட வேண்டுமென்பது தெரியலாம். இவ் வொருமைப் பாட்டிலே சிவவெளிப்பாடு நுகரப்படும். இவ்வாறன்றி, முன்னே சொல்லப்பட்ட சுட்டுணர்வு, சிற்றுணர்வு எல்லைகளுக்குள் சிவவெளிப்பாடு நிகழாது. இவ்வுணர்வுகள் விபரீதக் காட்சியும் போலிக்காட்சியும் பயப்பதே இதற்கான ஏதுவாம். அரு

னெல்லைக்குள் சிவபோதம் அழுந்துமளவும் அதற்கு ஓட்டம் (அசைவு) இருந்தே தீரும். அருளெல்லைக்குள் புக்கழுந்தின் நிலை பெறும். ஓடும் ரயிலில் செல்பவனுக்கு மருங்கேஉள்ள மரங்கள் எதிர்த்தோடுவதாகப் புலப்படும். உண்மையில் ஸ்தாவரங்கள் ஓடுவன வல்ல. பூமண்டலம் விரைவாகச் சுழலுவதால் சூரியன் ஓடுவதுபோலக் காணப்படுதலும் இவ்விபரீதக் காட்சிக்குச் சான்ரும். இவ்வாறு உள்ளதே சுட்டறிவுத் தன்மை. பெட்டியை உடைத்தாயிருப்பவன் அதனைத் திறந்து உள்ளே உள்ள பொருளைக் கொண்டு பயன் துய்த்தின்புருமல், பெட்டியையே காத்தின்புறுதல் நன்றன்று. நெய்க் குடத்தைச் சுற்றும் எறும்புகள் போன்ற நிலை இதுவாம். இதுவே சிற்றுணர்வு நிலை. ஆதலால், ஆசிரியர், "**ஓட்டற்று நின்ற உணர்வு பதிமுட்டித் தேட்டற்று நின்ற இடம் சிவம் ஆம்.**" என்று கூறியுள்ளார். இதனுல், உள்ளம் அசையாது ஓய்ந்த நிலையே அருள் தலைப்படுமிடம் என்பதுணரலாம். இதுவரை கூறியுள்ளதனுல், சுட்டறிவுக் காட்சிக் குட்பட்ட பிரபஞ்ச எல்லையில் சிவம் காணப் படாதெ ன உணர்தல் தக்கதாம். மன ஓட்டம் நிற்கப் பழகுதல் இன்றியமையாததென்பது இதனுல் பெறப் படும். இச் செய்தியினை

**" ஒன்றே கலப்பை உழவெருது அஞ்சுண்டு**
**ஒன்றை விட்டு ஒன்று உழன்று திரியாது**
**ஒன்றை விட்டு, ஒன்றை, உழுதுண்ண வல்லாருக்கு**
**அன்று நட்டு அன்றே அறுக்கலும் ஆமே "**

என்னும் திருமந்திரப் பாடலிலும் காணலாகும்.

## செய்யுள் — 30

### பற்றின் பற்றுவிடல்

பற்றினுட் பற்றைத் துடைப்பதொரு பற்றறிந்து
பற்றிப் பரிந்திருந்து பார்க்கின்ற—பற்றதனைப்
பற்றிவிடில் அங்கிலையே தானே பரமாகும்
மற்றுமிது சொன்னேன் மதி.

**கருத்து**

பற்றின் பற்றறுத்தல்.
பற்றறுகையே பிறப்பறுகை.

**விளக்கம்**

ஆன்மாவுக்குப் பொருளின்கண் துறவும், உண்மைநிலை உணர்தலும், பற்றின் பற்றின்மையுமே பிறப்பறுக்க வேண்டுவனவான உபாயங்களாம். இவற்றைத் துறவு, மெய்யுணர்தல், அவா அறுத்தல் என்னும் அதிகாரங்களில் கூறி முடிக்கிறார் திருவள்ளுவர். செல்வம், சுற்றம், பதவி, உடம்பு முதலிய பொருட்கள் யாவும் வாழ்க்கைக்கு ஓரளவு வேண்டுவனவே ஆயினும், அவைகளையே சதமென எண்ணி வாழ்நாளை இப் புறப்பற்றுக்களின் வழியே கடத்தி மாளுதல் தீமை பயப்பதாகும். இவற்றினை விரும்புவது **பற்று** எனப்படும். இவை நாம் எவ்வளவோ முயன்றாலும், நம் இருவினைகட்கேற்ப இறைவனால் தரப்படுவனவாம். "நாழி முகவாது நால்நாழி" என்பது தேறியோர் உரையாம். இது பற்றியே துறவினை விளக்கவந்த இடத்தே பரிமேலழகர் "புறமாகிய செல்வத்தின்கண்ணும் அகமாகிய

யாக்கையின்கண்ணும் உளதாகிய பற்றினை, அவற்றது நிலையாமை நோக்கிவிடுதல்'' என்று கூறியுள்ளார். இவரே, எல்லாப் பொருளையும் ஒருங்கே விடுதல் தலை. அஃதன்றி ஒரோ ஒன்றாகவிடினும் அவற்றால் வரும் துன்பம் இலன் ஆம் என்றும் கூறிப் போந்துளர். தனு, கரண, புவனபோகங்கள் யாவும் மேலும் மேலும் கன்ம பலத்தை விளைவிப்பவை ஆகும்; உயிரின் இச்சை ஞானக்கிரியைகளைத் தம்மாட்டே பிணித் துழலச் செய்வனவுமாம். ஆதலால், பிருத்வி முதல் நாதமீறான தத்துவங்களை ஆசாரியன் உபதேய நெறியால், நிலையில எனத் துணிந்து ஒருங்காகவேனும், ஒவ்வொன்றாகவேனும் அவரவர் உள்ளத்துரனுக்கு ஏற்பத் துறத்தலே பற்றொழிதல் எனப்படும். இத்தகைய திறல் ஒருவற்கு முழுமுத லருளால் விளைவதாகும். இம் முழு முதலருள் தத்துவக் களைவின் பின்னர் நிகழும். முழுமுதலருள் எனப்படும் சிவஞானமே இவ்வலிமை நல்கவல்லது என்பது தெளியப்படத் தக்கது.

மற்றும், ஒரு பொருள் நம் கையை விட்டுப்போன பிறகும், அப்பொருளின்மீது உள்ள ஆசை நம் மனத்தைவிட்டகல்வதில்லை. இவ்வாசை, குழியி லிட்ட சவத்தை மீளவும் எடுத்து இழவுகொண்டாடு வது போலாம். ஒரு பொருளை நாம் துறக்க ஒருப்பட்டாலும், அதன்மீதுள்ள ஆசையை நம்மால் விடமுடிவதில்லை. இவ்வாசை, மீளவும் இழந்த பொருளை அடையத் தூண்டும்; அன்றி, அதுபோல்வ தொரு பொருளைத்தேடி வருந்தச் செய்யும். இத னாலேயே, இத்தகைய ஆசையை நிகளம் என்றுள்ளார் பெரியோர்; பிணி எனவும் சிலர் பேசியுள்ளனர்.

இதனையே, நம் ஆசிரியர் இங்குப் **பற்றினுட்பற்று** என்று கூறிக்காட்டுகிறார். இதனைப்பற்றறத் துடைக்கவேண்டுமாயின், சிவனது திருவருளையே நாம் நாடவேண்டும். உணவால் பசிதீர்வதும் உரம் விளைவதும் போன்றே சிவஞானத்தால் (அதாவது) சிவஞானமே கண்ணாகக்கொண்டொழுகுவதால் இப் பற்றினுட்பற்றினை அறுத்தலும், சிவபோகத்தினை எய்துதலும் நிகழும். சிவத்தையே தாரகமாகப் பற்றுதலே பற்றினுட்பற்றினை நீக்கியுதவும். இது கருதியே, "பற்று விடற்குப் பற்றுக பற்றற்றான் பற்றினை" என்றார் நாயனாரும். ஈண்டு இவ் வாசிரியரும், **"துடைப்பதொரு பற்றறிந்து விடில்"** என்று இச்செய்தியைக் கூறியுள்ளார். ஆதலால், பாசப் பற்றுக்குஇயல்பாகவே பகைவனாகிய-உயிர்களின்மேல் பற்றுடையானாகிய — பரமனையே நாம் பற்றிக்கிடந்து பற்றைப் பசையறக்களைதல் வேண்டும் எனத் தெரியலாம்.

இங்ஙனம், சிவனருளே பற்றி நாம் நிற்கும் போதும், பழைய பற்றுகள் நம் சோர்வு நேரத்தை எதிர் பார்த்தவண்ணம் காத்திருந்து மீளவும் நம்மைத் தமக்குரிய பற்றுலகில் வீழ்த்தும். ஆதலால், இந்நிலை யில் ஆன்மா தான்கொண்ட உறுதியைச் சிதையவிட லாகாது. வெள்ளத்தில் ஒன்றைப்பற்றி மிதந்து கரையேறுபவன், அத் தெப்பத்தினையே உறுதியாகப் பற்றிக்கிடவாமல் அதனைக் கைவிட்டுப் பிறிதொன்றைப் பிடித்திட நினைப்பானாயின் வெள்ளத்தில் மூழ்கி அவதியடைதல் திண்ணமாம். ஆதலால், நாம் ஆசானருளால் — இறைவனருளால்—பற்றிக்கொண்ட தற்போத ஒழிவாகும் சிவனருளில் (சிவஞானத்தில்)

அழுந்திவிடல் வேண்டும். என்பது தெளிவாம். பாசப்பற்றுக்கள் நம்மைப் பிறப்பு நெறியுட்படுத்தற் பொருட்டு அற்றம் நோக்கியிருத்தலை இவ்வாசிரியர் பாடலில், "**பற்றிப் பரிந்திருந்து பார்க்கின்ற பற்று**" என்று கூறி எச்சரித்துள்ளாராவர், இங்ஙனம் பற்றின் பற்றினையும் நாம் முற்றக்களைந்திட்டால், தன்னையே பற்றிக்கிடக்கும் ஆன்மாவினைத் தானே தாங்கிக் கொள்ளலுறுகின்றானவன் இறைவன். அப்போது ஆன்மா அவனருளே கண்ணாகக்காண்கின்றது. அங்ஙனம் காணும்போதும் "நாம் காண்கிறோம்" என்றநினைவு முனைக்கலுறும். அதனையும் நீக்குதல் நம் கடமையாகும் இதனையே இவ்வாசிரியர், "**பற்று விடில் அந்நிலையே தானே பரமாகும்**" எனலானார் என்க. இதுவே, சிவம் பிரகாசிக்கும் நிலை எனப்படும். சூரியனொளியுள் உடுக்களின் ஒளி அடங்கிக்கிடப்பது போல்வது இந்நிலை. இதுவே இன்னிலையாம்,

இங்ஙனம், **பொருட்பற்று விடுதலும், பற்றின் பற்று விடுதலும், சிவனருளே பற்றாகக் கொண்டு கிடத்தலும்**, முற்றும் அச் **சிவஞானத்தாலே காணுதலும்** எளிதில் சாதித்துவிடக் கூடிய செயலாகா. இதனை ஆசானருளையே நம்பிக்கிடந்துதான் கைவல்லியப்படுத்திக் கோடல் வேண்டும். ஆசானருளையே துணையாகக் கொள்ளவேண்டுமென்பதை நமக்கு உணர்த்தும் பொருட்டே இச் செய்யுளில் இவ்வாசிரியர், "**மற்றும் இது சொன்னேன் மதி**" என்றுள்ளார். **மற்றும்** என்ற சொல்லால் ஆசிரியன் மார்ச்சால நியாய முறையில் நம்மைக் கைவிடுவானல்லன் என்பது தெரியலாம். இகரச்சுட்டால் **இது** என இவ்வுபாயங் குறிக்கப்பட்டுள்ளமையால் மற்று

எப்பற்றும் இம்மியளவும் கூடாதெனத் தெளியலாம். "மற்றுப் பற்றெனக் கின்றி நின்திருப்பாதமே மனம் பாவித்தேன் — இனிப்பிறவாமை வந்தெய்தினேன்— நான் மறக்கினும் நா, நமச்சிவாயமே சொல்லும்" என்றுள்ள அருளுரைகள் இங்குச் சிந்திக்கத்தக்கன வாகும். மதி என்றமையால் இதனையே குறிக்கொள் என்றார் எனலாகும். அன்றியும் இதுவே சிறந்த ஞானம் என அறுதியிட்டாராகவும் கொள்ளல்கூடும். சொல்கின்றேன் என்னுமல் சொன்னேன் என இறந்த காலச் சொல் அருளியிருப்பதால் இவ்வுபாயத்தின் முடிந்த துணிபு தேறப்படும். ஆகவே இப்பாடலால் பற்றின் பற்றறுகை வலியுறுத்தப்பட்ட தென்னலாம். "ஆரா இயற்கை அவாநீப்பின்" என்னும் திருக்குறட் பாவும் ஈண்டைக்கு ஏற்கும்.

## செய்யுள் — 31

### சிவஞான உறைப்பு நிலை

உணராதே யாதும் உறங்காதே உள்ளிப்
புணராதே நீபொதுவே நிற்கின்—உணர்வரிய
காலங்கள் செல்லாத காலத் துடன்இருத்தி
காலங்கள் மூன்றினையும் கண்டு.

**கருத்துக்கள்**

1. தேகாதிப் பிரபஞ்சப் பற்றறல்.
2. மயக்கமறல்.
3. சுக சொரூப மறத்தல்.
4. ஞானக்கண் அமைதல்.
5. காலாதீதமாய் நிற்றல்.

**விளக்கம்**

உடம்பு, உள்ளம், உயிரறிவு இவற்றைத் துணைக் கொண்டு ஞானநூல்களை ஓதியும், ஆசானுபதேய வழி ஒழுகியும் நாம் பிறப்பொழித்துச் சிவபோகந்துய்த்து வாழ வேண்டியுள்ளது. ஞானநூல்கள் மறைமொழி யாதலினாலும், மறையொலி இறைவனுக் கொருவடி வாதலாலும் நமக்குப் பகுத்தறிவைத் தூண்டிவிட்டு உண்மை × பொய்ம்மை உணர்த்துதற்கண் இவை பயன்படுகின்றன. இதனால் ஆராய்ச்சியுணர்வு தொழிற்படலுறுகின்றது. இவ்வளவும் சுட்டுணர் வாம். இச்சுட்டுணர்வுகொண்டு தத்துவங்களைக் காண்கிறோம். தத்துவங்கள் முப்பத்தாறும். இவற்றை இன்னம் விரித்தும் கூறுப. சமயந்தோறும் தத்துவ எண்ணிக்கை மாறுபடும். எவ்வாறாயினும் இவை நிலையாமை யறிவை உண்டாக்குதற்கண் உதவி யாவனவே. இவற்றை ஆன்ம தத்துவம், வித்தியா தத்துவம், சிவதத்துவம் எனப் பாகுபடுத்து முறையே 24ம், 7ம், 5ம், ஆகக் கூறுவர் இவை பிரகிருதிமாயை அசுத்தமாயை, சுத்தமாயையுட்படுவன. இவை போக்கியம், போகம், பிரேரககாண்டமெனவும் படும். இவை முறையே அஞ்ஞானம், மயக்கம், சவிகற்ப அறிவு விளைப்பன. ஸ்ரீகண்டர், அனந்தர், சிவன் என்போரைக் கருத்தாக்களாக உடையன. மற்றும் தத்துவ இயல்புகளை யெல்லாம் விரிந்தநூல்களால் அறிய லாகும். இவற்றியல்புகளை ஆராய ஆராயத் தேகாதிப் பிரபஞ்சங்களிலே உவர்ப்புண்டாகிவிகற்பஞானத்தைக் கடக்கலாகும். "பொருளல்லவற்றைப் பொருளென் றுணரும்" மருள் அகலும். இந்தத் தத்துவ அறிவு கொண்டு (உணர்வு கொண்டு) தொல்லோனை அறிதல்

இயலாது. தரையிலே நடப்பதற்கு உதவும் கால்கள் தண்ணீரில் நடக்கமாட்டா. ஆதலால் நாமல்லவெனக் களைந்த விசுவாதி தத்துவங்களில் மறுபடியும் வாசனை மிகுதியால் கூடி அல்லலுள் அழுந்தலாகாது. இதனை ஆசிரியர், **உணராதே** என்றுள்ளமையால் காணலாம். இப்புறத்துத் தத்துவங்களைக்கடந்து உள்முகப்பட்ட போது அவித்தை காரணமாக விபரீத உணர்வு புலப் படும். அவ்விபரீத நிலையையும் நாம் கடக்கவேண்டும். இது தூங்கும்போது ஒன்றுந் தெரியாமற் கிடப்பது போன்ற நிலையாகும். ஆதலால், சிவக்கலப்பினை அவாவுவோர் இம் மயக்கத்தையும் கடக்கவேண்டி யுள்ளது. இதனையே, "**யாதும் உறங்காதே**" என்ற இச் செய்யுள் தொடர் காட்டுகின்றதாகும். ஆண்டவன் பொய்ப்பொருளுமல்லன்; பாழுமல்லன்; அழிபொருளுமாகான். மேற் கூறிய முறைகளால் அகப்புறப்பற்றுகள் அகலும். திருநீலகண்ட நாயனார், கழற்சிங்க நாயனார் வரலாறுகள் பற்றறுக்கும் உரனுடைமைக்குச் சான்றும். இதன்பின்னர், அறிவு நிலைப்பொருளைத் தேடிச் செல்கையில் தன்னையே (ஆன்மாவினையே) அறிந்தனுபவிக்கலுறும். இது ஒருவித சுகம் பயக்கும் நிலையாம். ஆனால், இதுவன்று சிவபோகமெனப்படுவது. ஆகையால், இவ்வான்மா- னந்தத்தோடு நின்றுவிடலாகாது. இதனை உணர்த்தும் பொருட்டே "**உன்னிப் புணராதே**" என்றுள்ளார் ஆசிரியர். சிவத்தினறிவு இதுகாறும் தன்னுள்ளிருந்து மெய்யுணர்த்தி வருதலை ஆசானுரைப்படியறிந்து, தன்னறிவைச் சிவத்தினுள் அடங்கும்படி செய்தல் வேண்டும். இதனால் சிவஞானமே உள்ளும் புறம்புமா யிருந்து என்றும் எங்கும் இயக்குதல் தெரியப்படும்.

"கையுங் காலும் தூக்கத் தூக்கும் ஆடிப்பாவை" போன்ற நிலை இதுவாம். இந்த நிலையில் தற்போத மிராது சிவபோதமே பொதுப்பட்டிருத்தல் காணப் படும். இதுவே எல்லாக் குற்றங்களையும் நீக்கும். ஆகையால், கண்ணெனப்பாம் சிவஞானத்திற் கூடி அந்த ஞானமாகவே நிற்பதே மவுனயோக நிலையின் முடிபாம். இதனை, **நீ பொதுவே நிற்கில்** என்றுள்ளார் ஆசிரியர்.

மேற்கூறிய ஞானநிலை அடைந்தோர் மூன்றாக நிகழும் காலத்தின் அவத்தைக்குட்படார். இக் காலங்கள் மூன்றையும் தம்மின் வேறாகக் காண்பர். காலத்தை மூன்றாக நடத்தியே விசுவத்தைச் சிவம் இயக்குகின்றது. இது சிவனுடைய கால சொரூபம் எனப்படும் இச் சொரூபம் சிவமேயாதலால் அழியாதது. இத்தகைய காலாதீதப் பொருளோடு கலந்தடங்கிவிட்ட ஆன்மாக்கள் அச் சிவமாகிக் காலக் கோளுக்குக் கட்டுப்பட்டு அவதியடையாமல் அழிவின்றி இருப்பர். இது தெரியுமாறு, **உணர்வரிய காலங்கள் செல்லாதகாலத்துக் காலங்கள் மூன்றினையும் கண்டு உடன் இருந்தி** என்றுரைத்தனர் இந் நூலாசிரியர். "சமாதியால் மலங்கள் வாட்டிப் பொருந்திய தேசகால இயல்பகல் பொருள்களெல்லாம் இருந்துணர்கின்ற ஞானம் **யோக நற்காண்டல்** ஆமே" என்ற சித்தியார்ப் பாடலும் ஈண்டைக்குக் காண்டல் நேரிதாம். இதுகாறும் கூறிய ஆற்றால் **உணர்வறுதல், பற்றறுதல், ஆன்ம அறிவறுதல்** என்னும் மூன்று நிலைகள் **தூலம், சூக்குமம், பரம்** (அதிசூக்குமம்) என்ற வரிசையில் 29, 30, 31-ஆம் பாடல்களால் அறிவுறுத்தப்பட்டன என்னலாம்.

## செய்யுள் — 32

### சலிப்பற்றிருத்தல்

அறிவறிவாய் நிற்கில் அறிவுபல வாமென்(று)
அறிவின் அறிவவிழ்த்துக் கொண்டவ்—வறிவினராய்
வாழ்ந்திருப்பர் நீத்தவர்கள் மானுடரின் மாணவக !
தாழ்ந்தமணி நாவேபோல் தான்.

**கருத்துக்கள்**

1. அறிவு பலவாதல்.
2. அறிவு அவிழ்த்தல்.
3. நீத்தாரியல்வு.
4. அசையாத மணிநிலே.

**விளக்கம்**

மேலே விட்டத்தில் மணி தொங்கினுலும், அதற்கு விட்டம் ஆதாரமன்று. மணிக்கு நாக்குள்ளது. நாக்கின்றேல் மணி எனப்படாது. இத்தகைய மணி சப்திக்குமாயின் கூட்டத்தைச் சேர்த்துவிடும். ஏனிந்த ஓசை என்ற எண்ணங்களே எழுப்பும். போவாரும் வருவாரும் பிள்ளேகளும் அந்த நாவினே அசைத்து அந்த மணி சலித்துக்கொண்டே இருக்கும்படி செய்து விடுவர். இதனுல் மணிக்கு அமைதி நிலே அரிதாகும். மணிக்கு உண்மையான ஆதாரமாவது தரையே. அது அதனே மதியாமல் விட்டத்தேறியதால் இந்த அசைவும் ஒலியும் அதற்கேற்பட்டன. இவ்வாறன்றி, விட்டத்தை நீங்கி அந்த மணியானது தனக்கு நிலேத்த தாரகமான தரையை அடைந்தமையுமாயின்

அதற்குள்ள நாவானது அசையாது மவுனம் பெறும். அதனை எவரும் வலிய மணியாயின் எடுத்தசையார். இதனால் சப்திப்பதை இயல்பாகக் கொண்ட மணியும், நிலைத்த ஆதாரமான நிலத்தை அடைந்தால் தன்னியல்பு கெட்டு அசைவற அமையும் என்பது தெரியலாம். அன்றியும் அதற்கு வீழ்ச்சியாகிய அபாயமும் நீங்குகிறது. "**தாழ்ந்தமணி நாவேபோல்**" என்ற தொடர் இதனைத் தெரிவிப்பதாகும்.

இவ்வாறே, ஆன்மாக்கட்கு நிலையான ஆதாரம் சிவம். அதனை ஆன்மா அறியாமல் மலந்தாரகமாகக் கொண்டு பிரபஞ்ச வசப்பட்டுச் சுட்டுணர்வு பற்றியும் சிற்றுணர்வு கொண்டும் அசையுமேல், இன்ப துன்ப விளைவுகளை ஆக்கும் இருவினையாற்றிப் பிறப்பினுள் ளழுந்தி வருந்தும். இவ் வருத்தம் நீங்கப்பெறுவதே இன்பநிலை எனப்படும், ஆதலால் பிறவிக்குக் காரணமாகிய முயற்சிகளெல்லாம் நீங்கி வீட்டிற்குச் சாதனமாகிய யோக முயற்சி மேற்கொள்ள வேண்டியுள்ளது. இதனால், ஒவ்வொரு பொருளையும் பார்க்கும்போது அது அதுவாய் நிற்கும் பலபட்ட அறிவு கெடும். அறிவு பலபடுதல் நீங்கினால் யான் எனது என்னும் பற்றும் நீங்குகிறது. ஒவ்வொரு தத்துவமாக அறிந்து அறிந்து அசத்தெனக்கண்டு நீக்கிக் கொண்டே சென்றால் முடிவில் நிறைந்த பொருளாக அறியப்படுவதே சத்தாம். இச் சத்தாம் திருவருளை, சித்தாம் ஞானத்தை, — ஆனந்தமாம் போகத்தை அடையவேண்டின், அவ்வத்தத்துவமாய் மயங்கி நிற்கும் அறிவு பிளவேண்டியுள்ளது. இதனையே, "**அறிவு அறிவாய் நிற்கில் அறிவு பல வார்**" என்றார் ஆசிரியர். இவ்வாறு பாசத்திற் கட்டுப்பட்டு

வியாபகத்தன்மையை இழந்துகிடக்கும் அறிவினை அப்பாசத்தை விட்டு அவிழ்த்துவிடவேண்டும். அப்போது ஆன்ம அறிவு சுட்டுணர்வுத்தன்மையின் நீங்கி அகமுகப்பட்டுச் சிற்றுணர்வு நிலைக்கு வருகிறது. இது "யான்" என்னும் பற்றின் இருக்கையாகும். இதனையும் கடப்பதே கட்டறுதலாம். ஆதலால், அகப்பற்றும் கட்டினையும் நீக்கிவிடுதல் கடமையாம். இதனை, "**அறிவின் அறிவு அவிழ்த்துக்கொண்டு**" என்ற தொடர்குறிப்பதாகும். இவ்வாறு முயல்வதால், இதுகாறும் அசத்தின் வசப்பட்டு அசத்தாய் நின்ற உயிர், நிலைத்த அறிவாய் விளங்கும் சத்தின் அடங்கிச் சுட்டுணர்வற்றுச் சுட்டிறந்தழியு மனுபவம்பெறும். இவ்வனுபவம் சிவத்தோற்றம் என்ப. இதனால் ஆன்ம சுபாவம் ஒழிகின்றது. சிவஞான ஐக்கியம் திகழ்கின்றது. பரமானந்த சொரூப சிவனைப்பெற்று அப்பரமானந்தமேயாய் வாழ்வர். இதுகுறிப்பதே, "**அவ்வறிவினராய் வாழ்ந்திருப்பர் நீத்தவர்கள் மானுடரின்**" என்ற தொடர், இவர்கள் தத்துவங்களை யெல்லாம் நீத்துத் தற்போதமும் நீங்கப்பெற்றவர்களாதலால் **நீத்தவர்கள்** என்றார். **அவ்வறிவு** என்பது பதிஞானமாம். இவர்கள் "வைப்புக்கு ஓர்வித்து" ஆதலால், **வாழ்ந்திருப்பர்** என்றார். **மானுடரின்** என்றமையால் மற்றையோரின் இழிபு செத்துப் பிறத்தல் என்பது புலப்படும். இனி **மாணவ !** என்றமையால் என்றும் அடிமையாதல் உணர்த்தப்பட்டதென்னலாம். இச்செய்தியை, "மனத்திலிருந்த மதிவாள் உருவி—இனத்தினை நீக்கி இரண்டறவீசி—நினைத்த இடத்தே நிலைபெறுமாகில் — அனைத்துயிர்க்கெல்லாம் அதிபதியாமே" என்னும் திருமந்திரப் பாடலாலும் உணரலாம்.

## செய்யுள் — 33

### நிராதார யோகம் பலித்தற்குறி

ஓசையெலாம் அற்றல் ஒலிக்கும் திருச்சிலம்பின்
ஓசை வழியேசென் றெத்தொடுங்கில்—ஓசையினில்
அந்தத்தா னத்தான் அரிவையுடன் அம்பலத்தே
வந்தொத்தா னத்தான் மகிழ்ந்து.

**கருத்துக்கள்**

1. ஓசை பல ஒலித்தல்.
2. சிலம்பொலி.
3. சிவனையடைதல்.

**விளக்கம்**

சிவத்தினை அடைய முயல்பவர்கள் பற்பல ஆரவாரங்களையும் கடக்கவேண்டும். அவை குடும்ப கோஷம் முதலாகப் பலவகைப்படும். கடலின் அலையோசை அருமை போன்று தத்துவங்கள் ஒவ்வொன்றும் ஆன்மாவைத் தாம் வெல்லற் பொருட்டுச் செய்யும் ஓசைகள் பலவாம். ஒருவன் கைதட்டிக் கூப்பிட்டால் அவ்வோசை கேட்டு அவ்வழியே செல்பவன் கைதட்டியழைத்தவனை அடைகிறான். அவ்வாறே, எந்த ஒலியைப்பற்றிச் செல்கின்றேமோ அந்த ஒலி செய்ம்மூலத்தினை நாம் எய்துவோம். நாம் சிவத்தினை அடைய விரும்பின், அச் சிவம்புரி யோசையைக் கேட்டல்வேண்டும். கோயிலில் பற்பல ஆரவாரங்கள் கேட்கப்படுகின்றன. அவற்றிடையே கோயிற்பூசை மணியோசை எழுகின்றது. உடனே, அங்குத் திரண்டுள்ள மக்கள்

யாவரும் அம் மணியொலி வழியே ஓங்கார ஒளி வட்டத்திடையே காட்சி நல்கும் சிவத்தினைத் தம்மை மறந்து தரிசிக்கின்றனர். இதனால் ஓரொலியைக் கேட்க விரும்புபவன் ஏனைய ஒலிகளை அடக்கவேண்டியிருத்தல் தெரியலாம். இவ்வாறே நிராதார யோகத்தைச் செய்யும் சிவயோகிகள், தேகம், இந்திரியம், அந்தக்கரணம் முதலியவற்றின் வியாபாரங்கள் ஒடுங்கச் செய்யவேண்டும். அதாவது, அவற்றின் வியவகாரங்களில் சற்றும் ஈடுபடுதல் கூடாதென்பதாம். இங்ஙனம், இவ்வாரவாரங்களைக் கடந்து சென்றால் ஆன்மாவினது இச்சாஞானக் கிரியைகள் ஒழிவுறும். அதாவது சீவர்கள் தம்மை மறப்பர். சீவர்களின் ஜீவபோதம் தலை எடாது. அந்த நிலையில் கேட்கப்படுவது பிரணவ ஒலியாம். இது ஜீவனின் உய்தி கருதிச் சிவம் புரியும் ஐந்தொழிலாடலில் எழுவதாகும். புலனடங்கி அமைதியில் திளைத்திருப்போர்க்கு இவ்வொலி கேட்டல் இயல்பாம். "திருச் சிலம்போசை ஒலி வழியே" என்பர் திருவுந்தியாரிலும் "ஆடியகாலும் அதிற் சிலம்போசையும்—பாடிய பாட்டும் பலவான நட்டமும்—கூடிய கோலம் குருபரன் கொண்டாடத்—தேடியுளே கண்டு தீர்ந்தற்ற வாறே" என்பது திருமந்திரம். ஆண்டவன் அருள் நாதஒலி இல்லாத இடமே இல்லை. கருவி கரணங் கடந்து ஒன்றிய அன்பில் அழுந்தியோர் அவ்வொலி கேட்பர். "ஒலி வாங்கிக் கருவி" உடையோர் வானொலி கேட்டல் கண்கூடாம். இங்ஙனம் கழறிற்றறிவார் நாயனாரும் அநுபவித்தாராவர். "வாசத் திருமஞ்சனம்" என்னும் பெரியபுராணப் பாடலில் "எந்நாளும் சிலம்பின் ஒலி அளித்தார்" என்றிருத்தல் காணலாம். இது

தம்பிரானுர் சீபாதத்தில் பரவிந்து எனப்படும் திருச் சிலம்பில் எழும் பரநாதம் எனப்படும் ஓசையாம். இவ்வொலி வழியே செல்வர் சிவயோகிகள். இவ் வோசை அடங்குமிடத்தே இவர்தம் போதமுழக்கும் அடங்கிடும். அப்போது அவ்வோசையற்ற இடமே இடமாகக்கொண்ட தம்பிரானுர் கருணைச் சத்தியுடனே (திருவருளுடனே) அம்பலமாகிய ஞான வெளியிலே வந்து நிராலம்ப யோகியரைக் கூடுவர். தன்னையே நாடிவரும் மகனைத் தந்தை மகிழ்வோடு ஏற்பதுபோலும் நிகழ்வது இச் செயல். ஆதலால், நாமும் எல்லாம் மறந்த அவசரத்திலே சிவத்தினை எய்தப்பெறுவோம் என்க இதுவே பசையற்ற நிலையில் நிகழும் காட்சியாம் என்பதே இச் செய்யுள் கூறுகின்றது. **அற்ருல்** என்பது பசையற்ற நிலை உணர்த்தும் சொல்லாம். **அந்தத் தானம்** என்பதே ஞானப் பெருவெளியாகும். **மகிழ்ந்து** என்பதால் பேரின்ப அநுபவம் புணர்தல் தெரியப்படும்.

## செய்யுள் — 34

### தியான சமாதிநிலை

**சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின் என்றமையால்**
**சார்புணர்தல் தானே தியானமுமாம்—சார்பு**
**கெடஒழுகின் நல்ல சமாதியுமாம் கேதப்**
**படவருவ தில்லைவினைப் பற்று.**

**கருத்துக்கள்**

1. உயிர்க்குச் சார்பல்லாதவை.
2. உயிர்க்குச் சார்பாவது.

3. தியானமும் சமாதியும்
4. வினை ஒழிவு.

**விளக்கம்**

இச்செய்யுள், திருக்குறள் என்னும் தமிழ் மறையகத்தே 36ஆம் அதிகாரமாகிய **(மெய்யுணர்தல்)** என்னும் அதிகாரத்துள்ள ஒன்பதாம் செய்யுளைத் தழுவி விளங்கும் அநுபூதிவாசகமாம். யோகநிலையிலே உயிர்நாடியொப்பது இப்பாடலாகும். " ஒருவன் எல்லாப்பொருள்கட்கும் சார்பாகிய அச்செம்பொருளை உணர்ந்து, இருவகைப்பற்றுமற ஒழுகுவானாயின், அவனை முன் சாரக்கடவனவாய் நின்ற துன்பங்கள் அவ்வுணர்வு ஒழுக்கங்களை அழித்துப் பின்சார-மாட்டா " என்பது இக்குறட்பாடலின் **பரிமேலழகருரையாகும்.** " தன்னைச் சார்வனவற்றை அறிந்து அவையிற்றின் சார்வுகெட ஒழுகுவனாயின் அவ்வொழுக்கத்தினை அழித்துச் சார்தலை, சாரக்கடவனவாய துன்பங்கள் செய்யா" என்பது **மணக்குடவர்** உரை. " ஆத்மாவுக்குச் சார்பறிந்து செனனத்தைக் கெடவேணும் என்று நிலைபிடிப்பா-ராகில் இந்த நிலையை அழிக்கமாட்டாது " என்பது **பரிதியார்** உரை. " தனக்கு முத்திச்சார்வாம் முதல்வனை அறிந்து பிறப்பிற்குக் காரணமாகிய சார்வுகெடும்படி ஒழுகுவனாயின், மறித்துச்சாரா சார்ந்துவரும் பிறவிநோய்கள் " என்பது **காளிங்கர்** உரை. இவற்றுள் மணக்குடவர் " சார்புணர்ந்து " என்பதனைத் " தன்னைச் சார்வனவற்றை அறிந்து " என்றுள்ளார். ஏனையோர் மூவரும் முறையே " செம் பொருளை உணர்ந்து " எனவும், " ஆத்மாவுக்குச்

சார்பறிந்து " எனவும், " முத்திச்சார்வாம் முதல்வனை அறிந்து " எனவும் " சார்புணர்ந்த " என்னும் தொடர்க்குப் பொருளுரைத்துளர். இவர்களில் பின் மூவர் " சார்பு " என்ற சொல் கடவுளெனப் பொருள்படக் கண்டனர். இது நிற்க.

இறைவன், உயிர்கட்கு அவற்றின் பெத்தம் முத்தி எனப்படும் இருவகை நிலைகளிலும் சார்பாக உள்ளான். தொட்டிலுக்குத் தரைசார்பாக இருப்பது போல்வது பெத்தநிலையின் கடவுள் சார்பு. கட்டிலுக்குத் தரை நேரே சார்பாக இருத்தல் போல்வது முத்திநிலையின் கடவுட் சார்பு. இதனால் யாண்டும் சார்பாக இருக்கும் இறைவனைச் **சார்பு** என்பர். மீன்களினம் கடலை விட்டு வெளியே வாழமாட்டா. கடலே அவற்றிற்கு எந்நிலையினும் சார்வாம். மீன்கள் பல, கடல் ஒன்றே. இது போன்று, கடவுளையே எஞ்ஞான்றும் உயிர்கள் சார்பாக உடைமையால் உயிர்களைச் **சார்பி** என்பர். நாடக மேடையில் வேடதாரிகள் வெளிப்படுமுன், காண்போர் அவர்களையும் அவர்களது மெய்ப்பாடுகளையும் காண இயலவில்லை. ஏனெனில், இடையிலே திரை இருந்து மறைக்கின்றது. இத் திரையை ஒருவன் சுருட்டி விட்டபின் எல்லாம் காட்சிக்கு வருகின்றன. இவ்வாறே **சார்பி** ஆம் உயிர்கள் **சார்பு** ஆம் கடவுளை உணரவொட்டாமல் எவையோ தடுக்கின்றன. இவற்றைத் **தளை** என்பர். இதனைச் **சார்பல் சார்பு** என்பர். விளையாடற் களத்தே எப்போதும் ஆடல் புரிந்தும் இரணம்பட்டும் இன்பு துன்புகட்குள்ளாம் மாணுக்கரை, நல்லாசிரியர் திருப்பிப் படிப்புக் களத்தே வைத்து அறிவூட்டுவதுபோலும், ஞானாசிரியர்

ஆன்மாக்களைச் சார்பல் சார்பினின்றும் நீக்கிச் சார்புள் புகுத்துகின்றாராவர்.

உயிர், பொறிபுலன்களுடன் கூடாதிருந்தபோது கேவல நிலையுட் பட்டிருந்தது. அப்போது இயல்பான ஆணவமலம் உயிரை அதனறிவு தொழிற்படா வண்ணம் கண்களை இருட்டுத் தொழிற்படாவண்ணம் தகைவதுபோன்று மறைத்தலுற்றது. இம் மறைப்பை உயிர்கள் அறிந்து முயன்று நீக்கிக்கொள்ளுதற் பொருட்டே இறைவனருளால் மாயையினின்றும் பொறிபுலன்களாக்கி அளிக்கப்பட்டன. இப் பொறி புலன் கருவிகளோடு ஆவி கூடி இயங்குநிலை சகல நிலையாம். இது புணர்வுநிலை எனப்படும். இந்த நிலையில் உயிரானது முற்றறிவில்லாமையாலும் சுட்டுணர்வும் சிற்றுணர்வுமே பெற்றுள்ளமையாலும் பொறி புலன்கள் செலுத்தும் வழியிலேயே செல்கின்றது. இதனால் வினை ஏறுகிறது. இவ்வினை மூன்றாகிப் பிணிக்கின்றது. இப் பிணிப்பு நீங்க நல்லாசானாகி இறைவன் உதவுகின்றான். ஞானாசாரியர் தீக்கையும் உபதேசமும் செய்தளித்த பின்னர், உண்மை தெரிகிறது. உயிர்க்கு அதன் சார்பு இன்னதென விளங்குகிறது. இரவற் பொருளாகிய பொறிபுலன்களைத் தன்னுடையனவெனக் கருதி-யிருந்த மயக்கம், பற்றுக்கள் ஆவியைவிட்டு அகல்கின்றன. அப்போது பொறிபுலன்கள் ஆவியின் வழிச் செல்கின்றநிலை ஏற்படுகின்றது. இதனால், பொன்னும் பொருளும் போகமுமே சதமானவை என்றிருந்த எண்ணம் நீங்கி அருளும் அன்பும் அறனும் வேண்டுமென்ற திண்ணம் விளைகின்றது. "இது பற்றியே "......யாம் இரப்பவை பொருளும்

பொன்னும் போகமும் அல்ல; **நின்பால்** அருளும் அன்பும் அறனும் மூன்றும் உருள் இணர்க் கடம்பின் ஒலி தாரோயே!" என்கின்றது பரிபாடல். இதனுல் சார்பாவான் இறைவன் என்பதும், சார்பல் சார்புகள் பொருள் முதலன என்பதும் சார்பால் விளைந்த நல்லொழுக்கம் அருளாதியன எனவும், இவ்வளவுக்கும் உரியது உயிர் என்பதும் அறியப்படும். இதனுல் "அத்தன் தாள்நிற்றலே தாரகமாம்" என்க! இது பற்றியே இவ்வாசிரியர், **சார்புணர்ந்து** எனலானுர். முன்னர், நற்கதி பெறுவானுக்கு வேண்டுவது தனக்கு நிலைத்த ஆதாரம் கடவுள்தான் என்பதும், மலம் தாரகமன்றென்பதும், சிவத்தை விட்டுச் சீவன் யாண்டும் தனித்து நிற்க இயலாதென்பதும், ஆன்மா எப்போதும் அடிமைதான் என்பதும் ஆகிய இவ்வுறுதியான எண்ணமாம். இந்த எண்ணத்தில், (நம்பிக்கையில்) சிறிதளவும் தளர்வுகூடாது. இந்த எண்ணம் திண்ணமுறத் திண்ணமுற எண்ணியதை எண்ணியாங்கு எய்துதல்கூடும். **உணர்ந்து** என்ற சொல்லால் தானும் ஆராய்ந்து குருமுகமாகவும் கேட்டு அசையா எண்ணம் கொள்ளவேண்டும் என்பது கருத்தாம். இத்திருவடிஞானத்தையே கண்ணுகக்கொண்டால் வீட்டுநெறியில் வழிகாட்டும். இதனுல் சாருமிடம் செம்பொருள் ஒன்றேயாம். இதற்குரியதே மெய்யுணர்வு எனப்படும். இம் மெய்யுணர்வுக்குச், **சிவஞானம், பதிஞானம், பரமஞானம், ஞானம், தத்துவ ஞானம், அநுபவறிவு** என்பன வேறு பெயர்களாம். எனவே **உணர்ந்து** என்னும் சொல் இவற்றை நினைவூட்டும் இயல்பிற்றும் செம்பொருளையுணராமல் ஏனைய பொருட்களையறிவது

ஞானம் எனப்படாது **அறிவு** எனப்படும். இதுபற்றியே கருவிகளிலிருந்து நீங்கிநின்று மெய்ப்பொருளை அறிதலைத் துறவற இயலில் ஞானப்பகுதியில் "**மெய்யுணர்தல்**" எனவும், கருவிகளோடுகூடிநின்று உலகியற் பொருளை அறிவதைப் பொருட்பாலுள் அரசியற் பகுதியில் **அறிவுடைமை** எனவும் திருவள்ளுவர் வேறுபடுத்தி ஓதுவராயினர் என்க. சார்புகெடுதலாவது, உயிர் இதுகாறும் தனக்குப் பற்றுக்கோடென எண்ணியிருந்த மலத்தின், மாயையின், வினைகளின் விளைவுகளான பாசத்தினைக் கெடச்செய்தலாகும். இப்பாசக் கேடே சார்புக்கேடாகும். மெய்யுணர்வாகிய ஒளி உதயம்செய்யத் தலைப்பட்டதும் பாசவிருள் பக்குவிட்டோடும். "விளக்குப்புக இருள்மாய்ந்தாங்கு" என்பது நீதிநூல் வாக்கு. பாசவிமோசனம் எனப்படுவது இதுவாம். ஆசானருளால் உண்மையுணர்ந்து பாசநீக்கம்பெற நேரிட்டதும், திரும்பவும் பாசக் கடற்குள் வீழாமல் பரிசுத்தநிலை நிலைத்தற்பொருட்டு நிராதாரயோக ஒழுக்கம் வேண்டியுள்ளது. இதனைப் பரிமேலழகர் "ஈண்டு ஒழுக்கமென்பது யோகநெறி ஒழுகுதலை" எனப் பொதுப்படப் புகன்றுள்ளார். மன ஒருக்கம் தரித்திருத்தலைப் புரிவது தியானம் எனப்படும். தியானமாவது தனக்கு அநாதியே தாரகமாய் நிற்கின்ற திருவடிஞானத்தை அறிந்தபின் அதுவே கண்ணாகக்கொண்டு அதனுடனே இரண்டறக்கூடி நிற்றல்ஆகும். இதனைச் **சிறப்படிமைத் தன்மை** என்பர். **ஒழுகின்** என்றசொல், இந்நிகழ்ச்சி வெறும் வாசாஞானத்தால் அமைவதன்று என்பதைக் காட்டும். "அரியவாம்சொல்லிய வண்ணம்செயல்" என்பது செயலருமை குறிப்பதாகும். ஆதலால், செய

லாற்றலே சீரிதாம். மற்றும் 'இன்' என்ற எச்சம் இச்செயலின் அருமையும் புலப்படுத்துவதாகும். இதனுல், மிகச் சிலரே இங்ஙனம் ஒழுகவல்லாராவர் என்பது தெரியலாம். இதுபற்றியே ஆசிரியர், "சார்புணர்தல் தானே தியானமுமாம்" என்ருர். இதனுல், பெற்ற மெய்யுணர்வில் எஞ்ஞான்றும் தோய்ந்துநிற்றலே நிராதாரயோகத்துத் தியானம் எனத் தெளியலாகும். அட்டாங்க யோகத்துத் தியானத்தினும் இது சாலச்சிறப்புடைத்தெனக் காட்டற்கே இங்ஙனம் விளக்கலுற்ருர் ஆசிரியர். சார்புகெட ஒழுகுதல் எனப்படுவது அங்ஙனம்பெற்ற தியானநிலையிலே தன்னைமறந்து மலையெனச் சலியாது நின்றிடுதலாம். இதனை "பூட்டொத்து மெய்யிற் பொறிப்பட்ட வாயுவைத்—தேட்டற்ற அந்நிலம் சேரும்படி வைத்து—நாட்டத்தைமீட்டு நயனத்திருப்பார்க்குத்— தோட்டத்து மாம்பழம் தூங்கலும் ஆமே" என்பர் திருமூலர். மரத்தின்பயன் பழம்அடைந்து சுவைப்பதாகும். இதனுல், பாசநீக்கப்பயன் சிவப்பேறு ஆகும். என அறியலாம். இதனை யோகநிலையின் முடிவான சமாதிநிலை குறிக்கும், சார்புகெட ஒழுகுதலே நிராதார யோக சமாதிநிலை எனப்படும். இதனுலேயே, இவ்வாசிரியர் "சார்புகெட ஒழுகின் நல்லசமாதியுமாம்" எனலாஞர். மற்றும் காயசித்தி, அட்டமாசித்திகளையே பயனுகக்கொண்ட சாமானியசமாதி போல்வதன்று இச்சமாதிநிலை என நமக்குணர்த்தும் பொருட்டே நல்லசமாதி என்றுள்ளார். யோகப்பயிற்சி புரிவோர் இமயம், நியமம், இருப்பு, உயிர்நிலை, மனஒருக்கம், தாரணை என்னும் இந்த ஆறுநிலைகளையும் படிப்படியாக எளிதிலே பெறுவர். எனினும் இறுதியிலுள்ள

..ான சமாதிகளை அடைதலிலேதான் வருந்துவர். நிட்டை குலையப்பெறுவர். இங்குத்தான் நோற்பவரின் ஆற்றல் பெரிதும் பரிசோதிப்பு அடையும். இது பற்றியே நம் ஆசிரியர், தியானமும் ஆம், சமாதியும் என உம்மை கூட்டியுரைக்கலாயினர் எனத் ..க.

இவ்வாறான தியான சமாதிகளை எய்தப்பெற்றார் தீயுண்ட மழுப்போல்வர். தீயினைத் தூசு என்செய்ய முடியும்? ஒளியினை இருட்டு யாது செய்யக்கூடும்? அவ்வாறே இத்தகைய சமாதிநிலை எய்திய ஞானியரை அவர்தம் வினைகள் நெருங்கித் துன்புறுத்த மாட்டா. "போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்" என்பார் பிறரும் இந்நிலையினை. இதனையே ஈண்டு "**வினைப்பற்று சேதாப் படவருவதில்லை**" என்றார் நம் ஆசிரியர். பரிமேலழகர் இவ்விடத்தின் விளக்கமுடிவிலே, கிடந்த துன்பங்களெல்லாம் என்செய்யும் என்றாசங்கித்து அவை ஞானயோகங்களின் முதிர்ச்சியுடைய உயிரைச் சார மாட்டாமையாலும் வேறு சார்பின்மையாலும் கெட்டு விடும்" எனலானார். தீக்கையால் இவை ஒழியுமெனவும், பிறந்த உடம்பால் முகந்துநின்றன உயிருழாகி வருத்தாமல் உடலூழாய்த் தணிந்துநீங்கும் என்பதும் சித்தாந்தமாம். உயிரைவிட்டுநீங்கி (மறைந்து) விட்ட மலத்திடத்தே யாவும் ஒடுங்கும் எனவும் கூறுப. மறையும் சூரியனிடம் கிரணங்கள்யாவும் ஒடுங்குதல் இதற்கு உவமை காட்டப்படும். **வினை** என்னாமல் **வினைப்பற்று** என்றமையால் பற்றின் பற்றொழிதலும் கூறப்பட்டதெனலாம். இச் செய்யுளால் **சிவத்தியான முடையராய்ச் சமாதி பரானவர்** கன்ம விடுதலை

பெறுவராதலால் பிறப்பொழியப் பெறுவர் என்பது தெளிவுறுத்தப்பட்டது.

குறிப்பு : இத் தெய்விக நூலான திருக்களிற்றுப் படியாரின் இதயம்போல்வது இத்திருவெண்பா ஆகும். இவ்வொரு பாடல் வழியொழுகும் பேறு பெறுதலே பிறப்பின் பயனாகும். இதனால் வீடு பேற்றுக்குரிய உபாயம் சுருக்கமாகவும் தெளிவாகவும் புலப்படுத்தப் பட்டுள்ளது. இதனையுணர்ந்து நாமும் இவ்வுலகத் திருக்களிற்றுப்படியாராகிச் சிவயோக நெறியொழுகிச் சிவபோகத் திருக்களிற்றுப்படிந்து ஆர்வோமாக! இந்தச் "சார்புணர்ந்து" என்னும் குறட்பா திருக்குறள் நூலில் **36**-ஆம் அதிகாரத்து அமைந்திருத்தலும் ஒருநயம்.

## செய்யுள் — 35

**அன்றிவரும் ஐம்புலனும் நீயும் அசையாதே**
**நின்றபடி யேநிற்க முன்னிற்கும்—சென்று**
**கருதுவதன் முன்னம் கருத்தழியப் பாயும்**
**ஒருமகள்தன் கேள்வன் உனக்கு.**

**கருத்துக்கள்**

1. விஷய அறிவு விடல்.
2. உயிர்க்குயிராவது சிவஞானம்.
3. சிவஞான மேம்படல்.
4. ஞேய சொரூப இயல்.

**விளக்கம்**

இச் செய்யுட்கேற்ற கருத்து விளக்கம் *திருவுந்தியார்* –தெளிவுக்கட்டுரை நூலில் 19-ஆம் செய்யுளடியிலே தரப்பட்டுள்ளது. விரிவஞ்சிய விளக்கமே ஈண்டுள்ளது. யானையின் முகமும், யானைமேல் ஏறிச் செலுத்தும் பாகன் முகமும் ஒரு திசையே நோக்கினால் குறிப்பிட்ட இடத்தைப் பாகன், பெருமிதத்துடன் சேரலாம். இவ்வாறன்றி, யானை ஒரு முகமும் (திசையும்) பாகன் ஒரு முகமும் (வேறு திசையும்) ஆனால், யானைமேல் அமர்ந்திருப்பினும் பாகன், தான் குறித்த இடத்தை எய்தான். இவ்வாறே, ஐம்புலன் களையும் ஏறிச் செலுத்தும் ஆன்மாவாகிய பாகன், சிவஞான எல்லைக்குள் புக விரும்பினால் தன் வழியிலே புலக்களிற்றினைத் திருப்பி நடத்தல் முக்கியமாம். புலக்களிற்றின் வழியே ஆன்மா செல்லுமேல், அவை குஞ்சரமாதலால் பிரபஞ்சக் காட்டுள்ளே கொண்டு போய் வீழ்த்தி மிதிக்கும். இதனால் விஷயங்களிலே ஈடுபட்டுக் கன்மப் பிரவாகத்தே செல்ல நேரிடும். இது தீநெறியாம். இராசன்மகன் காட்டினின்றும் களிற்றின் மீதிவர்ந்து நகருட்புக்கு அரண்மனை வாயிலை அடைவானாயின், ஊர் மக்களும் உறுதிச் சுற்றமும் புகழப் பேரரசன் எதிர்வந்து தழுவியுவகை செய்வன். இதுவே சன்மார்க்கம். யானையை அடக்கி வழிப் படுத்துவது போல்வதே புலன்களை உள்முகப் படுத்-தலும். அடக்கும் ஆற்றலளிப்பதே யோகநிலை. இந்த ஆற்றலால் நம்மை மாறுபடும் புலன்களை அசையாமற் கட்டி நம் வழியாக்கவேண்டும். பாசம் ஒருவிப் பசுஞானமும் கடந்தால் இவ்வசையா நிலைக்களம் எய்தலாம். இந்த இடம் திருவருள் நிலையம். இது

பற்றியே, "**அன்றிவரும் ஐம்புலனும் நீயும் அசையாதே நின்றபடியே நிற்க**" என்றார் ஆசிரியர். "ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள" என்னும் சேக்கிழார் வாக்கும் இந் நெறியுணர்த்தவல்லதாகும். புலன்களின் மாறுபட்ட தன்மையை **அன்றிவரும்** என்று வரும் தொடர் குறிக்கும். புலன்களை நாம் அடுத்தூர்வதே சிறப்பு. நம்மைப் புலன்கள் அடுத்தூர விடுதல் இழிவாம். இக் கருத்தையும் **அன் று இவரும்** என்று பிரிந்து இதே தொடர் குறிக்கும் என்னலாம். ஐவரை ஒருவன் வேறல் சிறப்பான வாகையாம். ஒருவனை ஐவர் வெல்வரேல் அவ்வைவர்க்கும் இழிவே நேரும். ஆதலால், ஐவரை ஒருவன் வெல்லுதற் சிறப்பை உணர்த்தும் பொருட்டே **ஐம்புலனும்** என்-றார். இவை, தமக்குள் மாறுபட்ட இயல்பின என் பதை **ஐம்** என்ற சொல்காட்டும். எனினும், ஆன் மாவைத் தாக்குதலில் ஒன்றுபட்டுழைக்கும் பெற்றி யன என்பதைப் புலனும் என்பதன் இறுதியிலுள்ள **உம்**மையால் புலப்படுத்துள்ளார். ஐந்திடத்து அறிவும் ஓரிடத்தே தேக்கப்படின் நிலை உயர்வு ஏற்படும். ஆசைச்சூறை இல்லாமையால் இத்தேக்கத்தில் அசைவு ஏற்படுவதில்லை. இதனால் ஆன்மபோதம் செருக்கற்ற நிலைஎய்தும். இங்கும் செருக்கு (அகந்தை) உளதேல் ஆன்மானந்தமே பெரும்பேறென எண்ணி ஏமாற நேரும். ஆகையால், "**அசையாதே நின்றபடியே நிற்க**" என்றார். தண்ணீர் நிற்க நிற்க மேட்டுநிலத் தையும் எட்டியேறும். ஓட ஓடப் பள்ளத்தாக்கி லும் பாயமாட்டாதாகிவிடும். ஆதலால், **நிற்க** என் றுள்ளார். இந்நிலையில் சிவனருளிலே ஆன்மா பிரவேசிக்கும். இது திருவருட் சத்தியின் கருணை

இதனால் சிவபோகத்தே நாட்டமும் சிவம் புரி நன்றிபற்றிய கசிவும் (பக்தியும்) ஏற்படும். இது தான் தற்போதங்கரைந்தொடுங்கும் இடம் எனப்படும். தலைவனது தலைமையினை நினைக்க நினைக்க அடிமைத் தன்மை பெருகுறும். இங்குத்தான் ஆண்டான் அடிமையின் உண்மையுறவு உணரப்படும். இந்த உணர்ச்சி (ஞானம்) ஏற்பட்டதும் ஆண்டவன் ஆன்மாவினைத் தன் சிவஞானப் பெருவெளியிற் புகுத்திவிடுகிறான். அப்போது ஆன்மாவுக்குப் 'புக வேண்டும்' என்ற எண்ணமும், "புகுகிறோம்" என்ற நினைவும் நீங்கும். அருளும் ஞானமும்கூடி ஆதரவு புரியும் நிலை இதுவாம். தாயும் தந்தையும் ஒருசேர மகிழ்ந்து வந்து தனயனைத்தழுவுவதுபோல்வது இந் நிலை. தனயனும் பெற்றோரிடையே பெருமகிழ்வெய்துகிறான். இவையெல்லாம் வெளிப்பட "முன்னிற்கும்" எனவும், "ஒருமகள்தன் கேள்வன் உனக்கு (முன்) சென்று கருதுவதன் முன்னம் கருத்தழியாப்பாயும்" என்றும் ஆசிரியர் கூறியுள்ளார். திருவருளெய்திய பின் சிவஞான வாய்ப்புக்கிட்டுதற்கு அவகாசம் தேவையில்லை. ஆதலால், பாயு' என்றார். திருவருட் சத்திவழியே சிவத்தின் செலவு என்பதை ஒருமகள்தன் கேள்வன் என்ற தொடர்காட்டும். கருத்தழியா என்பதனால் மாற்றமேயன்றி நினைவும் அறும் என்பது புலனும். சென்று என்ற சொல் "சென்று பொருள்கொடுப்பர்" என்பதுபோல நின்றது. இதனால் ஞானத்தினாலே சிவனைக் கூடவேண்டுமென்ற சிரத்தை உடையாரைச் சிவனும் அவதிகூடாமல் வந்துகூடுவன் என்று நாம் அறியலாகும். "உள்நிற்கு உளத்தின் ஒருபால் முகந்துவைத்துத் தெள் நிற்படுத்தச் சிவனவன் ஆமே" என்ற திருமந்திர வாசகமும் கருதத்தக்கது ஈங்கே.

## செய்யுள் — 36

### பாவ அபாவமறுகை

**உண்டெனில் உண்டாகும் இல்லாமை ; இல்லையெனில்
உண்டாகும் ; ஆனமையின் ஓரிரண்டாம் ;—உண்டில்லை
என்னும் இவைதவிர்ந்த இன்பத்தை எய்தும்வகை
உன்னில்அவன், உன்னுடனே ஆம்.**

**கருத்துக்கள்**

1. இல்லாமையின் இருவகைகள்.
2. பாவ அபாவம் கடந்தது சிவம்.
3. அன்பே சிவமாவது.

**விளக்கம்**

சிவனை யாரும் ஆன்மபோதத்தால் அறிந்து கூடுதல் முடியாது. ஆன்மபோதத்தால் அறியப்படும் பொருள்கள் யாவும் பிரபஞ்ச மயமானவை ; அதாவது அழியும் பொருள்களாம். அழியும் பொருட்குத் தூல சூக்கும மாற்றம் உண்டு. இத்தகைய மாற்றத்தை இந்திரசாலம் என்பர். சிவன் மாற்றம் மனம் கடந்தவன். ஆன்மபோத எல்லை மனம் ஆகும். ஆதலால், ஆன்மபோதங்கொண்டு சிவத்தைத் தன்னின் 'வேறாகவைத்துக் காண்பேன்' எனப் புகலுவாராயின் அங்ஙனம் காணமாட்டாத தெரியப்படாத பொருளாயிருப்பன் சிவன். இதனை, "**உண்டு என்னில் இல்லாமை உண்டாகும்**" என்றார். இதனால் சிவம் பாவனைக்கு எட்டாப் பொருள் என்பது தெளிவாம். சிவம் ஒருபோதும் அறியப்படாத பொருள் என்று கருதுவாராயின் அக் கருத்துக்கு விஷயமாய்

(உள்ளீடாய்) இருப்பவனாகிய சிவனை அறியமாட்டாதவனாகிறான். இதனாலும் அவனுக்குச் சிவம் புலப்படுதலில்லை. ஆகவே அபாவம் எனப்படும் பொருளுமன்று சிவம் என உணரலாம் இதனால் சிவத்தை மனம் முதலிய கருவிகளோடு கூடிநின்று பாவித்தல் நேர்மையாகாதெனத் தெரியலாம். மனம் முதலிய கருவிகட்கு அப்பாற்பட்டதே **திருவருள்** எனப்படுவது. இத் திருவருளால்தான் சிவத்தைக் காண இயலும். '**முதல்வன், 'அவனருளாலன்றிக் காணப்படான்**' என்பர் ஞானியர். உயிரின் வேறான பொருளை உயிரின் அறிவு அறியமுடியும். முதல்வன் உயிரின் வேறல்லன். முதல்வன் சூக்குமமாய் வெளிப்படாமல் உயிரின் அறிவுக்குள்ளாக நிற்பன். உயிர் தூலமாய் வெளிப்பட்டு நிற்கும். உயிரானது கண் ஒளியின் வேறின்றி அதற்குள்ளாக நின்று அது பொருளை அறிதற்குத் துணையாய் நிற்கிறது. அவ்வாறு நிற்கின்ற உயிரைக் கண்ணொளி காணமாட்டாது. இது அத்துவித நிலையின் இயல்பாம். ஆன்ம ஞானம் தூல இயல்புடையது. சிவஞானம் சூக்கும இயல்பிற்று. தூலம். தூலத்தை அறியுமேயன்றிச் சூக்குமத்தை அறியாது. இதனாலேயே ஆன்ம ஞானத்தால் முதல்வனை அறியமுடியாதென்க. அபாவமும் பயனற்றதென்பதைத் தெரிவிக்கும் பொருட்டே "**இல்லை எனில் இல்லாமை உண்டாகும்**" என்றார். இதனால் சிவனை அறியமுடியாதிருப்பதாகிய ஒரு முறைமை **உண்டு இல்லை** என்னும் இரண்டு வகையதாயிருக்கும் இவை கடந்ததே **அவனருள்** ஆகும்.

இதனால் இந்தப் பாவ அபாவநிலைகள் கடந்த அருள் நிலையால் சிவத்தைத் தலைப்பட முயல்வதே

கருத்தாம். தண்ணீரைச் சார்ந்த உப்பு அத் தண்ணீராகவே விளங்கும். அதுபோல, முதல்வனைச் சார்ந்த உயிரின் அறிவின்கண்ணே முதல்வன் கலந்து வேற்றுமை தோன்றாது நிற்பன். இதனால் சுட்டியறியும் இயல்பு கடந்ததே **அவனருள்** எனப்படுவது. சூரியனைச் சூரியனொளிகொண்டே காண்பதுபோல அவனறிவாகவே நின்று பேரின்பத்தைப் பெறவேண்டிக் கசிவுகொள்வனாயின் அப்போதே யாவனைக்கு எட்டாத அப் பரம்பொருள் தன் அருளினால் இரண்டறக் கூட்டிவைப்பன். ஆதலால், " **உண்டு இல்லை என்னும் இவை தவிர்ந்த இன்பத்தை எய்தும்வகை உன்னில் அவன் உன்னுடனே ஆம்** " என்றார் ஆசிரியர். சுட்டறிவியல் **உண்டு இல்லை** என்பதாம். சுட்டப்படாததே பெரும் போகம். ஆதலால், **இவை தவிர்ந்த இன்பம்** எனப் பட்டது. **உன்னில்** என்பது இங்குக் கசிவினை உணர்த்தும். உருகுதல் முன் நிலையை அழிப்பதாம். பின் நிலைக்கு ஏற்பதாம். ஆதலால், கசிவே ஆன்ம ஞானத்தினைச் சிவஞானத்தில் கரைத்துக் கூட்டுவதாகும். அன்பே சிவம் என்பர். " இன்பமே என்னுடை அன்பே " என்பதும் இக் கருத்துக்கு அரண் ஆம். இத்தகைய அன்புடையாரையே சிவ பத்தர் என்பர் சீரியோர். இதுகாறுங் கூறிய முறையால், ஆன்மபோதம் அறுகை தூல நிராதார யோகம் எனவும், ஞானமாயே நிற்றல் சூக்கும நிராதார யோகம் எனவும், ஆனந்தத்தழுந்துதல் பரநிராதார யோகமெனவும் நாம் உணர்தல் தக்கது.

## தொகுப்புரை

**22** முதல் **36** ஆம் பாடலளவும் இவ்வாசிரியர் யோகநிலையாற் சிவப்பேறெய்தும் முறைமையினை விளக்கியுள்ளார். முதற்கண் ஆதாரயோக இயல்பு கூறிப் பின் மந்திரயோகநிலை அருளிப் பின்னர் நிராதார யோகம் இன்னதெனத் தெருட்டி மவுனயோகத்தை விளக்கி யோக உபாயத்தினை முடித்திடலானார். இதனால் நாம் ஏனைய யோகமுயற்சிகளில் தலையிடாமல் ஒன்றுக்கொன்றாதாரமாயுள்ள ஆதார நிராதாரயோக சாதனையில் நின்று பேரின்பப் பெருவாழ்வடைவதே முறைஎன உணரலாகும். எதற்கும் ஆசானருளே ஆதாரமாம். கண்ணின்றிப் பார்வையில்லை. நாஇன்றேல் சுவைஇல்லை. அரிசிஇன்றேல் சோறு இல்லை. ஆசான் அருளிலதேல் ஆன்ம உய்தியும் இலதாம். ஆதலால், உடல் பொருளாவிகளை நமதெனநாடாமல் இரவற்பொருளென எண்ணி ஒப்படைத்துத் தத்துவ ஞானத்தைப் பெற்றுத் தற்போதத்தைக் கரைத்துச் சிவனருளால் சிவஞானக் கண்கொண்டு சிவதரிசனம் எய்திச் சிவபோகத்தழுந்தி நிற்றலே இன்மைப் பேரின்பமாம். இவற்றைப் பையப் பையப்பழகி அநுபூதிமான்களாக முயல்வோமாக. திருவருள் துணைபுரிக! சிவயோகமே புரிக உலகெலாம். இனி, இதனை அடுத்துச் சிவஞானப்பகுதி செப்பப்படும். அது **37** ஆம் பாட்டுத் தொடங்கி **88** ஆம் பாட்டு முடிய உள்ள பகுதியிற் கூறப்படுவதென்க !

**சிவயோகப்பகுதி முற்றிற்று.**

---

## II உபாய இயல்

# ஞான உபாயம்

## 3. சிவஞானப் பகுதி

### செய்யுள் — 37

### தத்துவஞானம் (நிலையாமை உணர்வு)

**தூல உடம்பாய முப்பத்தோர் தத்துவமும்**
**மூல உடம்பாம் முதல்நான்கும்—மேலைச்**
**சிவமாம் பரிசினையும் தேர்ந்துணர்ந்தார் சேர்ந்த**
**பவமாம் பரிசறுப்பார் பார்.**

### கருத்துக்கள்

1. தத்துவங்கள்.
2. தத்துவ உணர்ச்சி.
3. பவமறுக்குந் துணை.

### விளக்கம்

உயிர்கள் உடம்புடன் இப்புவனத்தே பிறந்-திருத்தல் பிறப்பு அறுப்பதற்கே ஆம். இதற்கான உபாயங்கள் சரியைமுதல் நான்குமாம். இவற்றுள் சரியைமுதல் மூன்றும் ஞானத்துக்கு ஏதுவாம். ஞானமே முத்திக்கு ஏது. உடம்பைப் பற்றியது சரியை உபாயம். உடம்பையும் உள்ளத்தையும் பற்றியது கிரியை ஆம். உள்ளத்தைப் பற்றியது யோகம். அறிவைப்பற்றியதே ஞானமாம். இவற்றுள் உடம்பு கருவியாவது கருமயோகமாம். உள்ளம் கருவியாவது பக்தியோகம். அறிவு கருவியாவதே

ஞானயோகமாம் ஞானகுருவருளால் பெறுவது ஞானயோகத்தடைவாம். ஞானயோகம், கேட்டலாதி நால்வகைப்படும். எனினும் ஞானயோக நெறிப் புகுவார்க்கு முதல்முதல் தத்துவங்களைப் பற்றிய அறிவு இருத்தல் அவசியம். ஆடையின் அழுக்கை அழுக்கால் அகற்றுவதுபோல் ஆன்மாவின் மலத்தினை இத் தத்துவக் கருவிகள்கொண்டே இறைவன் நீக்குகின்றானவன். இது முதல்வன் கருணையால் விளைவதேயாம். உயிர்களிடம் இறைவற்குள்ள இச்சை இறைவனை இங்ஙனம் புரிவிக்கின்றது. இதனால் ஞானமும் கிரியையும் ஏற்றத் தாழ்வுகளடைந்து மலநீக்க உதவிக்கு வழிகோலுகின்றன என்னலாம்.

தத்துவங்கள் முப்பத்தாறும். இவை சுத்தம் அசுத்தம் பிரகிருதி என்ற மாயைகளாக வகுத்துரைக்கப்படும். இவற்றுள் ஆன்மா கன்மமலத்தை அனுபவிக்கும்பொருட்டு அன்னமய பரிணாமமாகிய உடம்பிலே நின்று, இது மாற்றமுறும்வண்ணம் உடம்புக்குக் காரணமாகி, ஆன்மாவுக்குத் தனுகரண புவனபோகங்களுமாய் நிற்கின்றவை **ஆன்மதத்துவம்** எனப்படும். இவை **இருபத்துநான்காம்**. இதுபோக்கிய காண்டம் எனப்புகலப்படும். மற்றும் இவற்றை அசுத்த தத்துவமெனவும் அறைகுவர். இப்பிரகிருதிமாயை தூல சூக்கும உடல்களுக்கு ஆதாரமாம். இவ்விருபத்து நான்கு தத்துவங்களுங்கொண்டே உயிர்கள் போகங்களைப் புசிக்கவேண்டியுள்ளன.

இதன்மேல், ஆன்மாக்கட்குரிய போகங்களை உண்டாக்கித் தரவேண்டியுள்ளது. இவ்வாறு செய்யும்

தத்துவங்கள் ஏழாம். இவை போகசயித்துரு காண்டம் எனப்படும். சமையற்காரர்கள் எஜமானர் உத்தரவுப்படி விருந்தினருக்குப் போனகம் சமைத்திடுவதுபோல் நிகழுறும் இத் தத்துவங்கள் ஏழின்தொழில். இத் தத்துவங்கள் காலம் முதலனவாம். இவற்றிற்கு வித்தியாதத்துவம் என்பது பெயராகும், ஆன்மாக்களின் புசிக்கைக்குக் காலமும் நியதியும் பயன்படுவன. இச்சை ஞானம் கிரியைகளைச் சீவிப்பிக்கைக்கு கலை வித்தை அராகம் என்பன உதவுகின்றன. போகங்களிலே அழுத்துகைக்குப் பற்று எனப்படும் (புருடன்) முயல்வதாகும். மயக்குகைக்கு மாயை தொழிற்படும். உயிர் சித்துப்பொருள். தத்துவம் சடப்பொருள். ஆதலால் புருட தத்துவம் உயிரன்று. உயிர், போகத்திற் பற்றுச் செய்யுங்கால் அப்பற்று புருட தத்துவமென நிற்பதாம். உயிரின் நிச்சயம் புருட தத்துவமாம். சிறப்புவகைப் புருட தத்துவம் வேறு. பொதுவகை வேறு. இங்குப் பொதுவகை கூறப்படுவது. "பொதுமையின் நிற்பன்" என்பது சித்தியார். மேற்கூறிய 24-ம் இங்குச் சொல்லப்பட்ட ஏழும் ஆக முப்பத்தொரு தத்துவங்களும் தூல உடம்பிலே பொருந்தி நிற்பனவாம்.

இவற்றின் மேலாக ஐந்து தத்துவங்கள் உள. இவை உயிர்கட்கான போக போக்கியங்களைப் பிரேரிப்பவை. இவை பிரேரககாண்டம் எனப்படும். இவை சிவம் முதலனவாம். மாயாதத்துவங்களைப் பிரேரிக்கவும், கன்மங்கட்கு ஈடாக ஞான கிரியைகளைப் பிறப்பிக்கவும், வாக்குகளை எழுப்பவும், காரணத்துக்குத் திருமேனியாகவும், பதப்பிராப்தங்கட்குப் பதங்களாகவும் நின்று உள்ளே மூல உடம்

பாய் நின்று நடத்தும் விந்துசத்திமுதலான நான்கும் இவற்றிற்குக் காரணமாய் ஆன்மாவுக்குப் பிராணனாய் நிற்கும் சிவ தத்துவம் ஒன்றும் ஆக இவை ஐந்துமே மேலாம் தத்துவம் எனப்படும்.

இம் முப்பத்தாறு தத்துவங்களும் ஆன்மாவின் புசிப்புக்குத் துணைக்காரணமாம் இவை தூலம், சூக்குமம், பரம் என நிற்பனவாம். இம் முறைமைகள் யாவும் ஆசாரியன் அருளால் அறிந்து, அவற்றை உருவம், தரிசனம், சுத்தி என்னும் முறைப்படி கண்டு நீங்கவேண்டும். தண்ட சக்கரங்கள் குடத்துக்கு எப்படியோ அப்படியே இவையும் நீங்கத் தக்கனவாம். தத்துவங்களை நிலையில என்றறிவதே தத்துவ ஞானமாம். இதனின் மேலது ஆன்மஞானம். யாவற்றினும் சீரிது சிவஞானமாம். தத்துவங்களைத் தன்னின் பிரித்துப் பயில்வதே முறைமை. இதனால் தன்னையும், ஞானத்தையும், சிவனையும் உணரலாகும். இங்ஙனம் உணர்ந்தவரே **சிவஞானிகளாவர்**. இவர்கள் பிறப்பிறப்பின் மூலமறிபவராதலால் அவற்றைப் போக்கும் வழியினராவர். இத் த்த்துவப் பிரபஞ்சம் (ஏன்றவினை) பிராரத்துவத்தால் காணப்படுவதாயினும் அவற்றின் விரோத இயல்பினை அறிந்து அகற்ற வேண்டும். இதுவே **சிவஞான நெறியின்** தொடக்க மாகும். இத்தகையோர் பிறப்பற முயல்வோராதலால் “ **சேர்ந்த பவமாம் பரிசு அறுப்பார் பார்** ” என்றனர் ஆசிரியர். செய்யுளின் ஏனைப் பகுதிகள் வெளிப்படை. இத் தத்துவங்களைப் பற்றிய எல்லாச் செய்திகளையும் ஈண்டைக்கு விளக்கவேண்டுவது முறைமையாயினும் தனி நூல்போல் விரிதற்கஞ்சி வேண்டுமளவே கூறப் பட்டது கொண்டு பொறுத்திடுக. விரிந்த ஞான

நூல்களால் அறிதல் ஏறபுடையது. அனுதி காலமாகச் சூக்கும நிலையில் தரப்பட்டுத் தூலங்களை மாற்றி மாற்றி யமைத்தற்கண் நீடித்திருப்பதால் **சேர்ந்தபவம்** எனப் பிறப்புக் கூறப்பட்டது. **சேர்ந்த** என்ற சொல் துணைப்பட்ட நிலையுணர்த்தும். பவம் அறுதலே ஒரு பரிசுதான்; ஆகலின் **ஆம் பரிசு** என்ருர். மற்றும், **பரிசு** என்றமையால் பிறப்புக்குரிய எல்லா வழிவகைகளும் நீங்கிலைன்றிப் பவம் நீங்காதென்பது பெறப்படும். அங்ஙனம் நீக்கும் உரன் உடையதே **சிவஞானம்** ஆகும். இச் சிவஞானப் பேறுபற்றித் திருக்குறள் மறையகத்தே உள்ள **துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல்** பகுதிகள் உரைக்கின்றன. **உடம்பு, உள்ளம், அறிவு** இவற்றின் தூய்மைப்பாடே சிவஞானத்தின் அடிப்படை என்பது தெளிவாம்.

## செய்யுள் — 38

### சித்தவிகாரமறுதல் (துறவு)

**எத்தனையோ தத்துவங்கள் எவ்வெவர் கோட்பாடுடைய**
**அத்தனையும் சென்றங்கு அளவாதே—சித்தம்எனும்**
**தூதுவனைப் போக்கிப்போய்த் தூக்கற்ற சோதிதனில்**
**பாதிதனைக் கும்பிடலாம் பார்.**

**கருத்துக்கள்**

1. [illegible]காரக் கலக்கம்,
2. ஞானத்தால் கலக்கறுதல்,
3. திருவடியில் அழுந்திநிற்றல்.

**விளக்கம்**

தத்துவங்கள் பற்பல மதங்களில் பலவாறு பேசப் படும். ஆகையால் தத்துவ விசாரணை செய்பவன் சமயங்கள்தோறும் தத்துவங்கள் வேறுபட்ட எண்ணிக்கை கொள்வதுபற்றி மயங்கலாகாது கழிக்கத் தக்க தத்துவங்கள் எத்தனையானால் என்ன? மதவாதிகளின் தத்துவப் பூசலில் தலையிட்டால் மனக் கலக்கமே விளையும். மனக்கலக்கத்தால் தெளிவு விளையாது. இதனாலேயே "தத்துவமானது தன்வழி நின்றிடில் வித்தகனாகி விளங்கி இருக்கலாம்" என்றனர் திருமூலர். தத்துவங்கள் பலப்பலவாம் என்பதை "**எத்தனையோ தத்துவங்கள்**" என்றுகூறிக் காட்டியுள்ளார் ஆசிரியர். மதங்கள்தோறும் கூறப்படும் தத்துவ எண்ணிக்கையில் மனத்தைச்செலுத்தி மலக்கம் எய்துதல்வேண்டா என்பார், "**எவ்வெவர் கோட்பாடுடைய அத்தனையுஞ் சென்றங்களவாதே**" என்றார். தடியாலடிபடுதல்போல்வது தத்துவத்தால் மொத்துறுவது. சமயங்கள்தோறும் தத்துவம் பலபடப்பேசப் படும் என்பதைத் திருமந்திரக்காரர், "**தொண்ணூறொடு டாறும் பொது** என்பர்–ஆகின்ற **ஆறாறு** அருஞ்சைவர் தத்துவம்—ஆகின்ற **நாலேழ்** வேதாந்தி, வயிணவர்க்கு —ஆகின்ற **நாலாறு; ஐயைந்து** மாயாவாதிக்கே" எனக்கூறிடுதல் காணலாம். இதனால் "தத்துவக் குப்பையிலே" எனவும் பெரியோர் இழித்துரைக்கலாயினர்.

தூதன் ஒழுங்கானமுறையில் நடந்துகொண்டால் அரசர்க்குள் போரிராது; அமைதி நிலையும். தூதன் கலகஞ்செய்பவனாயின் குழப்பமும் ம

குடிகொள்ளும். ஆதலால் தூதனை முன்னம் நேர்மை யுறுத்தல் நன்ரும். இதனுலேயே. ' சந்திவிக்கிரகங்கட்குச் செல்வாரது தன்மை " எனத் தூதுஎன்னும் சொல்லுக்குப் பொருள்கூறலானர் பரிமேலழகியார். மன்னரைச் சேர்ந்தொழுகல் தூதனின் பண்பாம், இறைவற்கு உறுதிபயப்பதே தூது. தூய்மை, துணைமை, துணிவு, மெய்ம்மை என்னுமியல்புகள் தூதனிடம் துலங்கவேண்டும், இவ்வாறே, நம் **சித்தமானது** விசுவத்தின் தூதனுகி நம்மைப் பக்குவப்படுத்த முயலாமல் வாதனைப்படுத்தவே முயல்கின்றது. உயிர்க்கு இதமானவை நினைந்து இணங்கி வாழுமாயின் இதமே விளையும். சித்தத்தைச் சிவன் பாலே வைப்பது நேரிதாம். சித்தம் ஒருங்கின் சிவம் வெளிப்படும். இங்ஙனம் ஒருங்கிவாராத சித்தத்தை ஞானத்தாலே ஒழித்தால் கலக்கம் நீங்கும். இக்கலக்கம் இன்னதென்பதை " வைத்தநிதி பெண்டிர் மக்கள் குலம் கல்வி என்னும்—பித்த உலகில் பிறப்போடு இறப்பென்னும் — **சித்தவிகாரக்கலக்கம்** தெளிவித்த — வித்தகத் தேவர் " என்னும் திருக்கோத்தும்பியால் அறியலாம். " உள்ளம் பிறநினைப்பின் ஊண்சுவை ஓராது " என்பர்சிவஞானியர். சித்தவிகாரம் தொலைப் புண்டால் சிவஞானம் சித்திக்கும். இந்த ஞானம் சிவ சத்தியாம். இச்சத்தியொருபாதி சிவனும், ஆதலால், அவன் திருவடியில் அழுந்திநின்ருல் பிரபஞ்சதத்துவத் தாக்கிராது. "உள்ளல் நினைவார்க்கு ஊழ் மனத்துவரா" என்பது உறுதியுரை. இறைவன் கருத்துவழி நின்று சித்தத்தினைப் பிரபஞ்சவழி செல்லவொட்டாமல் நாம் ஒழுகின் முழுமுதல்வன் ஞானமாகிய பயனைத் தானே நல்குவன். வேலை கூலிதாராது; வேலை இட்டவன்

கூலிதருவன். வேலை, இட்டவன் இட்டப்படி செய்யப்படவேண்டுவதே வேண்டுவதாம். இவை யாவும் நம் உளங்கொளும்வண்ணம், "**சித்தமெனும் தூதுவனைப் போக்கிப்போய்த் தூக்கற்ற சோதிதனிற் பாதிதனைக் கும்பிடலாம் பார்**" என இவ்வாசிரியர் இசைத்துள்ளார். சித்தம் ஒருக்குதலைப் **போக்கி** என்றசொல் தெரிவிக்கும். "ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதி" யாதலின் **தூக்கற்ற சோதி** என்றார். சிவஞானப் பிராப்தியுண்மையைச் **சோதிதனிற் பாதிதனை** என்பதாலறிவித்துள்ளார். **கும்பிடலாம்** என்றதால் என்றும் உள்ள அடிமைத் திறம் புலப்படுத்தப்பட்டது. "**பார்**" என்றமையால் ஆசாரியனுடைய காட்டுமுபகாரம் உணர்த்தப்பட்ட தென்னலாம். இவற்றால் சித்தம் ஒருக்கிச் சிவாய சிவ என்றிருத்தல் சிவானந்தமுறும் நெறியென நாம் உள்ளங்கோடல் தகும்.

## செய்யுள் — 39

### பற்றறுத்தலே பணியறுத்தல் (மெய்யுணர்வு)

**சாம்பொழுதும் ஏதும் சலமில்லை; செத்தாற்போல்**
**ஆம்பொழுதி லேஅடைய ஆசையறில்—சோம்புதற்குச்**
**சொல்லும் துணையாகும் சொல்லாத தூய்நெறிக்கண்**
**செல்லும் துணையாகும் சென்று.**

**கருத்துக்கள்**

1. தத்துவ அசைவு இன்மை.
2. சார்புகள் அறுதல்.
3. பணியறுத்தல் நிலை; வீட்டுநெறி.

**விளக்கம்**

தத்துவங்கள் ஒருவன் வீடுபேறடைதற்காம் முயற்சிக்கு முதலுதவி புரிதற்பொருட்டுள்ளவையாம். இவை ஒருவன் உலகினை வெறுத்தற்குதவியாகும் அநுபவங்களை விளைப்பனவாம். இவ்வுவர்ப்பே கெடுதல் எனப்படும். சார்பு இருவகைப்படும். அவை, மனைவி, மக்களாதிய **உயிர்ச்சார்பும்**, மனை, செல்வம் முதலான **பொருட்சார்பும்** ஆம். இச் சார்புகள் மென் மேலும், பிறப்பு உண்டாக்கும் திறத்தன ஆகும். ஆதலால், இவற்றை அறவே விட்டொழித்தார் நீத்தா ரெனப்படுவர். இவர்கள் உயிரோடு வாழும்பொழுதே "மண்கம்பமாகிலென்" என்னும் மனப்பான்மை யுடையராய்ச் செத்தாரைப்போன்று சீவிப்பர். இதனால், இத் திறத்தாரை உயிரோடுள்ள செத்தவர் என்னலாம். திகிரியுருட்டி உலகமுழுதாளும் அரசர் முதலாயினரின் மேம்பட்ட புகழுடையவர்கள் ஆவர் இவர்கள். இவர்களை வள்ளுவனார் 'அறம் பூண்டார்' என்பர். இவர்தம் பெருமையுரைக்கும்வழி, "இறந்தாரை எண்ணிக்கொண்டற்று" எனவும் கூறுவர். இப்படிப் பட்ட சிவஞானிகளுக்குச் சரீரம் விடுதலாகிய சாக்காடு வந்து நேரிட்டகாலத்திலும், நாம் கருதிநின்ற அச் சிவ ரூபமாயே விடுவர். இவர்களைத் தத்துவம் அசைப்ப-தில்லை. அசலம்போல்வர் இவர்கள். இதனாலேயே, **சார்பொழுதும் ஏதும் சலமில்லை** என்றார் நம் ஆசிரியர். தேகத்தோடு கூடியிருந்தும் தேக நீங்கியவர்போல் இவர்கள் இருவகைச் சார்பும் அறவே நீத்திருப்பர். சவம், தன்னைக் கட்டிப் புலம்பும் சுற்றத்தையும் கருதுவதில்லை ; தானே ஈட்டிய பொருளையும் விரும்புவதில்லை. இந்த நிலை சாதித்தல் எளிதன்று

இறையடியிலே அழுந்தப்பெற்றவர்க்கு அவ்விறை யருளால் இந்நிலை கைவரும். ஆகையால், "**செத்தாற் போல் ஆம் பொழுதிலே அடைய ஆசை அறின் சலமில்லை**" எனலானார் ஆசிரியர். பற்றற்ற இத்தகையோர் எச் செயலும் அற்றிருப்பர். "செயல் மாண்டவர்" என்பர் இவரை. சகச நிட்டாபரராகிய இவர்களைச் சோம்பர் என்றும் கூறுவர். இது குறித்தே "சோம்பரை உகத்தி போலும்" என இறைவனைக் கேட்கலுற்றார் பிறரும். இந்த நிலை செயற்கரிய நிலையாம். எல்லாம் சிவன்செயல் என்றிருத்தலே **பணியறுத்தல்** நிலை எனப்படும். இது பயனிற் பற்றில்லா நிலையாம். இறைபணி நிற்றலே இவரியல்பு. ஆதலால், **சோம்புதற்குச் சொல்லும் துணையாகும்** என்றார். வாக்கினால் உரைக்கப் படாதது வீட்டுநிலை. இதற்காம் நெறியும் அநுபவத்தால் எய்தப்படுவது. இச் சன்மார்க்கமும் பற்றறுகையின் பயனால் விளைவதேயாகும். இதனிற் சிறந்தபேறு வேறு இல்லை. ஆதலில், **சொல்லாத தூய் நெறிக்கண் செல்லும் துணையாகும் சென்று** எனவும் கூறலுற்றார். எனவே, சொல்லும் துணையும் செல்லும் துணையும் உயிர்க்குச் சார்பறுத்தலேயாம் என்க! பற்றற்ற பரமஞானிகளை இறைவனே பற்றிக்கொள்ள முற்படுதலால் **சென்று** என்றார். இப்பற்றுக்களையும் நிலையே மெய்ஞ்ஞான நிலையாம். ஞானமென்பது **நிலையாமை கண்டு பொருட்பற்று நீக்கிப்** பின் பற்றின் பற்றையும் **பசையற** உணக்கி **அவாவற்றிருத்தலாம்**. இவற்றுள் நிலையாமை காணுதல் தத்துவநீக்கம் கூறிய "**தூலஉடம்பாய**" என்னும் செய்யுளாற் கூறப்பட்டது. மனப் பற்றறுதல் "**எத்தனையோ தத்துவங்கள்**" என்ற

பாடலால் பகரப்பட்டது. பற்றின் பற்றறுகை, "சாம் பொழுதும்" என்னும் இப்பாவினால் சாற்றப் பட்டது. இதனை அடுத்த "வேண்டுங்கால்" என்னும் செய்யுளால் அவாவறுத்தல் விளம்பப்படும். இங்ஙனம் இத்தேவரும், வள்ளுவராம் தேவரும் ஞானப்பகுதியை நான்குவகையாக்கிக் கூறிக்காட்டியுள்ள முறை உளங் கொளத் தக்கதாம்.

## செய்யுள் — 40

### திரு அருள்நாட்டம் (அவா அறுத்தல்)

**வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை என்றமையால்**
**வேண்டின்அ∴ தொன்றுமே வேண்டுவது—வேண்டின்அது**
**வேண்டாமை வேண்டவரும் என்றமையால் வேண்டிடுக**
**வேண்டாமை வேண்டுமவன் பால்.**

### கருத்துக்கள்

1. பிறவாமை வேண்டுதல்.
2. அவா அறுத்தலின் பேறு.

### விளக்கம்

தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார், "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது— வேண்டாமை வேண்ட வரும்" என அவா அறுத்தலின்கண் கூறியுள்ளார். இந்த அவா அறுத்தலும் அவனருளாலே ஆவதாகும். எண்ணில் காலமாகப் பிறப்புப் பிணி மூப்பு, இறப்புக்களால் துன்பமுற்று வருதலை ஒருவன் உணர்வானாயின்

அவற்கு ஆசை இன்பத்தின்பாலே அமையும். இவ்வின்பம் பிறவாமையயால்தான் கிட்டுவது. இப் பிறவாமையைத்தான் நாம் இறைவன்பால் வேண்டல் தகும். இதுபற்றியே " இனிப் பிறவாமை வந்து ஏன்றுகொள்ளே " என இரத்தலுற்றனர் ஞானமுடையவர். சிற்றின்பப் பொருளை அவாவின் அது துன்பம் பயப்பதாய்ப் பிறப்பினும் வித்தாகிறது ; பிறவாமையே இறவா இன்பளிப்பது. ஆதலால் " வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை " எனலானர். " ஆண்டும் அஃதொப்பது இல் " எனவும் இதன் பெருமை சாற்றப்படுகின்றது. தேகம் உள்ளளவும் ஒருவன் ஒன்றை விரும்பாதொழியினும் முகந்த வினையினாலே உள்ளது வந்து கூடாதொழியாது. ஆதலால் விரும்பியே தீரவேண்டி வரும். அத்தகைய நிலையில் பிறிதொன்றனையும் விழையாமல் பிறவாமை என்ற ஒரே நிலையை விரும்புக என அறிவுறுத்தலாயினர். துவரத் துறந்தார்க்கும் இஃது ஒன்று இரக்கத் தக்கதேயாம். இதனால் பிறப்புத் தீர்ந்து பேரின்பு விளையுமேயன்றி, மானம் தீர்ந்து அல்லல் விளையாது. இதனால் நாவுக்கு இளிவரவென்பதில்லை. இதுபற்றியே " இணையில் திருவருள்ளுவப் பெயர் கொள் எம்மான்......இரத்தக்கார்க் காணின் இரக்க " என்று உரைத்து உணர்வு தெருள்வித்தமைகொண்டே ஒருவர்தமையும் இவ்வளவும் ஒன்றும் இரந்தாம் அல்லம் யாம் ; உன்னை இன்று ஈங்கு இரக்கின்றும்— முத்தம் (விடுதலை) தருகவே " என வேண்டலுற்றார் நல்லாற்றூர்ச் சிவப்பிரகாசரும். இம்முறை தோன்று-மாறு நம் ஆசிரியர், " **வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை என்றமையால் வேண்டின் அஃதொன்றுமே வேண்டுவது** " என்று முன்மொழியலாயினர்.

இனிப் பிறவாமை வேண்டவேண்டுமென்ற விருப்பம் விளைதற்கு ஒருவன் **அவா அறுதலை** இரத்தல் வேண்டும். ஆதலால், இறைவன்பால் பிறவாமையைப் பயனாகத் தரும் வேண்டாமையை வேண்டுதலே அமையும் எனப் புத்தி புகட்டலுற்றனர் பெரியோர்கள். அவா அறுத்தலை விளக்குங்கால் அவிச்சையை மெய்ப்பொருளுணர்வால் அறுத்தல் என்பர். இதனையும் இறையருளால் செய்வித்துக் கோடலே தக்கதாம். அக் கருத்தாவின் பக்கலில், 'பிறவாமை அருளுக' எனப் பெருத்ததொரு வேண்டுகோளாகக் கேட்பதற்குப் பதிலாக அப் பயனைத் தட்டாமல் தரவல்லதான எளியதொரு வேண்டுகோளாக "அவா அறுத்திடுக" என வேண்டிக் கொள்க என நயம்படக் கூறியுள்ளமை காணலாம். "மற்றை நம் காமங்கள் மாற்று" என்றே இறைவன் பால் விண்ணப்பித்தமை பிறர்வாக்கினும் காணலாகும். பிறவாமைக்கு வழி இதுவேயாம். இதுபற்றியே, "ஈசனோடாயினும் ஆசையறுமின்கள்.........ஆசை விட விட ஆனந்தம் ஆமே" என்றனர் திருமூலரும். எனவே நாம் விரும்பத்தக்க முழுமுதல்வன்பால் பிற வாமைக்கு உற்பத்தியான அவா அறுத்தல் ஒன்றுமே வேண்டிக்கொள்ள வேண்டுவதாம் எனத் தெளிக. இதுவே, **வேண்டின் அது வேண்டாமை வேண்டவரும் என்றமையால் வேண்டிடுக வேண்டுமவன் பால்**" என்ற வரிகளால் புலப்படுத்தப்பட்டது. இங்ஙனம் தமிழ்மறையாகிய திருக்குறள் விதிகளை மேற்கொண்டு இவ்வாசிரியர் விளக்கிச் செல்லுதலால் சித்தாந்த நெறியும் தமிழ்மறை நெறியும் ஒன்றே என நாம் உணர்தல் பொருந்தும். இவ்வுண்மையும் இங்குத் தெரிதல்நன்று.

இவ்விதமாகத் திருக்குறள்மறையின் உண்மைத் தன்மையை நீண்டகால முன்பே நமக்கு இவ்வாசிரியர் செப்பியுள்ள சீர்மை யாண்டும் போற்றற் குரியதாம்.

---

## செய்யுள் — 41

### சமாதி பரனுதல் (சுகரூபத்தில் பொருந்துகை)

அரண உணர்வுதனில் அவ்வுணர்வை மாற்றில்
கரணமும் காலும் கைகூடும்—புரணமது
கூடாமை யுங்கூடும் கூடுதலும் கூட்டினுக்கு
வாடாமை யுங்கூடும் வந்து.

**கருத்துக்கள்**

1. பற்றறுகை சமாதிபரம்.
2. நினைவால் ஜநநம் நேருகை.

**விளக்கம்**

சிவஞானமே பாதுகாப்பு அளிப்பது இந்த ஞானம் நம் தவத்தாலும், தீக்கையாலும், குரு உபதேசத்தாலும், சரியையாதி உபாயங்களை நெறிப்படி மேற்கொண்டு நடத்தலாலும், சிவத்தின் அருளால் நமக்கு வாய்ப்பதாகும். இச் சிவஞானத்தைக் கொண்டுதான் சீவனறிவை (முனைப்பறிவை) நீக்க வேண்டும். அதாவது, தற்போதத் தலையெடுப்பு இல்லாவண்ணம் செய்து கொள்ளவேண்டும். ஆகையின், ஆசிரியர் **அரண உணர்வுதனில்** என்றுர். இச் சிவஞான மிகுதிப்பாட்டில் சீவபோதம் மாறுபடுதலால் **அவ்வுணர்வை மாற்றின்** என்றுர். இங்ஙனம்

மாறுபாடு நிகழும்போது மிகவும் எச்சரிப்பாக இல்லாக் கால் பழைய இந்திரிய மூலமான உயிர்ச்சார்பும் பொருட்சார்பும் பற்றும். ஒழிக்கப்பட்ட சார்புகள் மீளவும் தாக்குமாயின் சிவஞான அநுபவம் சிதைந்து போம். மனம் தொழிற்படத் தொடங்குதலால் பிராண வாயு முதலான ஏனைய எல்லாத்தத்துவங்களும் வந்து சூழ்ந்துகொள்ளும். ஆதலால், **கரணமும் காலும் கைகூடும்** என்றார். பூரணப்பட்ட அசைவற் றிருக்கும் அமைதி நிலை கூடாமல் மீளவும் மயக்க நிலை எனப்படும் திரிபுணர்ச்சி தாக்கலுறும். இதனாலேயே, **புரணமது கூடாமையும் கூடும்** என்றுள்ளார். இங்ஙனம் மயக்கமும் விகற்பமும் வளைத்துக் கொள்ளு தலால், இத் தூலதேகம் போனாலும், மீளவும் சூக்கும உடலானது மற்றொரு தேகத்தில்புகும். இப்படியே எத்தனை பிறப்பு வேண்டுமாயினும் எடுக்கநேரும். "**எல்லாப் பிறப்பும் பிறந்து** எய்த்தேன்" என்ற வாசகம் பலபிறவி எடுத்தலைக் குறிக்கும். இதுபற்றியே, **கூட்டினுக்கு வாடாமையும் கூடும் வந்து** என்றுள்ளார் ஆசிரியர். இதனால் சமாதிபரனாகவே இருத்தல் வேண்டுமாயின் இந்திரிய வேடர்களின் கலைப்புகட்கு இடஞ் செய்வனவாகிய உயிர்ச்சார்பு, பொருட் சார்புகளை அறவே ஒழிக்கவேண்டுமெனல் ஒரு தலையாம். இதுவே அடைந்த சுகரூபத்திலே அழுந்தி நிற்றற்குரிய உபாயமாகும் என்ப.

---

## செய்யுள் — 42

### சிவபரம் கைவிடாமை

**இன்றிங் கசேதனமாம் இவ்வினைகள் ஓரிரண்டும்**
**சென்று தொடருமவன் சென்றிடத்தே—என்றும் தான்**
**தீதுறுவன் ஆனல் சிவபதிதான் கைவிடுமோ**
**மாதொருகூ றல்லனே மற்று.**

**கருத்துக்கள்**

1. வினை தொடர்தல்.
2. சிவத்தின் காத்தலியல்பு

**விளக்கம்**

இறைவன் முற்றறிவுடையன். நாம் சிற்றறிவுடையோம். புண்ணிய பாவங்களாகிய வினைகள் அறிவற்றவை. வினைகள் அறிவற்றிருப்பதனால் தாமாகவே தம்மைச் செய்தாரை அடையமாட்டா. உயிர்கள் சிற்றறிவுடைமையால் அறிந்து கூட்டுந் திறத்தன ஆகா. ஆதலால், முற்றறிவுடைப் பரம்பொருளாணையே வினைகளைப் பிறப்பு, காலம், முறைமை அறிந்தூட்டுகின்றது. இதனால், ஒருவன் புரிந்த வினைகள் செய்தோனைப் பிறப்புத்தொறும் வந்தடையும் என்பது உறுதி. "பல் ஆவுள் உய்த்து விடினும் குழக்கன்று வல்லதாம் தாய்நாடிக் கோடலை - தொல்லைப் பழவினையும் அன்னதகைத்தே" என்பது நீதிநூற் கூற்று. கன்று அறிவுடைச் சித்துப் பொருள். வினை அங்ஙனமன்மையின் சித்துப்பொருள் மாறுபாடு நிகழாவண்ணம் கூட்டுகின்றதென்க. "ஐங்காதம் ஏகினும் தன்பாவம் தன்னுடன்

தொடரும் " என்பதும் ஒரு முது—மொழி. இவை யெல்லாம் உளப்பட, **இன்று இங்கு அசேதனமாம் இவ்வினைகள் ஓரிரண்டும் சென்று தொடரும் அவன் சென்றிடத்தே** என்றனர் ஆசிரியர். சென்று என்பது ஈண்டு செலுத்தப்பட்டு என்ற பொருளில் நிற்பது. இங்ஙனம் வினைகளை ஊட்டுவிக்கும் இறைமை யுடையார்க்கு அவற்றை மீட்டுவிக்கும் உரிமையும் உளதாம். ஆனால், அவ்வுரிமை சிவதீக்ஷையும், சிவ ஞானமும் பெற்றார் விடயத்தில் நிகழ்வுறும். இங்ஙனம் தீக்ஷையும் ஞானமும் பெற்றோர் பிருகிருதி வயப்பட்டாராய்ப் பழக்க வாசனையுட்பட்டு இருவகைப் பற்றும் உடையராய் இறந்துபின் பிறந்தாரேனும், இம்மறு பிறப்பிலே அவர்தம் மனம் அப்பற்றுக்களைப் பற்ற திருத்தற்காவன புரிந்து கைவிடாமல் முழுமுதல்வன் காத்திடுதல் புரியும். அதாவது, விட்ட குறையை நினைப்பூட்டி மீளவும் அச்சன்மார்க்க நெறித் தொடர்பினைக் கூட்டி நிட்டையிலே நிறுத்திச் சாயுச் சியத்தைத் தரும். இங்ஙனம்புரிவது அப்பரமனது முழுக்கருணையால் விளைவதாம். இந்தக் கருணை யானது சிவத்தைவிட்டு ஒருபோதும் நீங்குவதில்லை. இவற்றை நாம் தெரியும் வண்ணம், இவ்வாசிரியர் இச் செய்யுட்கண், **சிவபதிமாதொருகூறன்** (ஆதலால்) **என்றும் தான்தீதுறுவன் ஆனால் கைவிடு**மோ எனக் கூறித் தேற்றுகின்றார். இதனால், நாம் சன்மார்க்க நெறியிலே தலைப்பட்டால், அந்நாள்முதலே சிவ-பெருமான் நாம் தவறினாலும், அத்தவறு நீக்குவித்துத் தன்னடி சேர்த்துக்கொள்ளும் தயை பெரிதும் பூண் இன்றான் என்பது கருத்தாகக்கொள்க !

## செய்யுள் — 43

### சிவனது அருட்செயல்

அநாதி சிவனுடைமை யாலெவையும் ஆங்கே
அநாதியெனப் பெற்ற அணுவை — அநாதியே
ஆர்த்த துயரகல அம்பிகையோ டெவ்விடத்தும்
காத்த லவன்கடனே காண்.

**கருத்துக்கள்**

1. சிவனுடைமை.
2. அநாதி முறைமை.

**விளக்கம்**

அறிவுள்ளனவும், அறிவில்லனவுமாகிய யாவும் ஆண்டவன் உடைமையாம். இதனாலேயே இறைவனை **உடையான்** என்பர். மேற்கூறப்பட்டவற்றுள் அறிவுள்ளவை **அடிமை** எனப்படும். அறிவில்லாதவை **உடைமை** எனப்படும். அறிவுள்ளவை உயிர்கள். அறிவில்லாதன மாயை கன்மங்கள். " தாரகமாம் அத்தன் தாள்நிற்றல் " என்பதால் மாயை கன்மங்கள் உடைமை எனத் தெரிவித்துள்ளனர். " அதனின் ஈறலா ஒன்றுபல வாறே தொழும்பாகும் " என்றதனால் உயிர்கள் அடிமை எனப்பட்டமை தெரியலாம். " அடியேனை ஐயாறன் **அடிமைக்**குளே சிறப்பித்தவா " என்பர் வாகீசர். இதனால் உயிர்கட்குள்ள சுதந்தர-மின்மை தெரியலாகும். இதனை, " **அநாதி சிவ னுடைமையால் எவையும்** என்றுரைத்தனர் இவ் வாசிரியர். இந்த உடைமைகளுள் சேதன உடைமைப்

பொருளாகிய உயிர்களை அநாதியே பேதித்து நிற்பன பாசங்கள். இப் பாசங்கள் உயிர்களைவிட்டு நீங்குதல் வேண்டும். எவரும் தம்முடைய சொத்தினுக்கு அழிவு வாராமல் காத்துக்கொள்ளும் கருத்துடையர். இவ்வாறே இறைவனும் ஆவிகட்குள்ள பாசப் பற்றுக்களை நீக்கித் தூய்மையாக்கிக்கொள்ளும் பெருங் கருணை உடையான் ஆவன். இந்தக் கருணை சிவனை விட்டு ஒருபோதும் நீங்கா இயல்பாம். ஞாயிறு தன் கதிரில் நீக்கமின்றி நிற்பன். இதுபோல்வதே இறை நிலை. இந்த இயல்பே சத்தி எனப்படும். ஆதலால் தன்னிடம் இயல்பாகவே விட்டு நீங்காத சத்தியோடு கூடிய சிவம் அநாதியே மலத்தை இயல்பாக உடைய உயிர்களைப் பேதித்து நிற்கும் பாசங்கள் விட்டு நீங்கும்படி செய்வன். இங்ஙனம் இவன் புரிவதால் உயிர்கட்குப் பெத்தநிலையில் காத்தல் நிகழ்கின்றது. முத்திநிலையில் உடம்பு கூடுதல் இல்லையாகின்றது. இதனைத் திருவடியிற் கூட்டிக்கொள்ளுதல் என்பர். இவ்வாசிரியர் இச் செய்திகளை நமக்குணர்த்தும் பொருட்டே "**அநாதியெனப் பெற்ற அணுவை அநாதியே ஆர்த்த துயரகல அம்பிகையோடு எவ் விடத்தும் காத்தல் அவன் கடனே காண்**" என்றுள்ளனர். இவ்வாற்றால் உயிர்கட்கியல்பு மல முண்மையும், இறைவற்கியல்பு சத்தியுண்மையும்— இறைவற்குக் கடமை உயிரினை மல நீங்கவைத்துத் திருவடி சேர்த்தலும் என அறியலாம். "திருவடி நெடுங்கரை சேர்த்துமா செய்யே" என்ற பட்டினத் தடிகள் வாக்கும் இங்கு நோக்குடைத்தாம்.

## செய்யுள் — 44

### ஞானபூஜை

தம்மில் சிவலிங்கம் கண்டதனைத் தாம்வணங்கித்
தம்மன்பால் மஞ்சனநீர் தாமாட்டித் — தம்மையொரு
பூவாகப் பூவழியா மற்கொடுத்துப் பூசித்தால்
ஓவாமை யன்றே உடல்.

**கருத்துக்கள்**

1. ஞானபூசை முறைமை.
2. உடல்நீக்க முறைமை.

**விளக்கம்**

சன்மார்க்கநெறி என்பது ஞானமார்க்கமாம். இதற்கே சத்தியநெறி எனவும் பெயர்வழங்கும். இவ்வாறு கூறுவதனால், ஜீவன், ஞானாசாரியனாலே தீக்ஷிக்கப்பெற்று அவராலே கூறப்படும் அநுபவரசமான உபதேசங்களைச் செவியேற்று, அவற்றையே தம் உள்ளத்தில் தங்கவைத்துப் பின் ஏதுக்களும் திருட்டாந்தங்களும் ஒன்றுபட்டிருக்கும் தெளிவடைந்து அந்த நெறியே உண்மை தவறாமல் ஒழுகுவதே — பிட்டை கூடுதலே — சன்மார்க்கத்தியல்பாகும். இந்த நெறியிலே நிற்போர் முதல் முதலாக இறைவன் உபகரித்துள்ள தனு கரண புவன போகங்களின் இயல்புகளை— உண்மைகளை—ஐயமறத் திரிபு நீங்கத் தெளிந்து இவை நாமாகமாட்டோம் எனத்துணிந்து விட்டுநீங்கிடுதல் வேண்டும். பட்டையெல்லாம் உரித்தபிறகு உள்ளே தண்டிருத்தலை அறிவதுபோலத் தத்துவங்களை யெல்லாம் நீக்கிய பிறகு ஆன்மாவானது தன்னைத்தரிசிக்க

நேரும். இதுவே ஆன்ம தரிசனம் எனப்படுவது. இந்தநிலை சன்மார்க்கப் பாதையில் முதல் மைல்கல் ஆகும். இதோடு நின்றுவிடலாகாது இந்த ஆன்மாவினை உடலாகக்கொண்டு உள்ளே இருந்து நடத்துவது யாதென்ற தெளிவடையவேண்டும். இந்த நிலையில் அறிவுக்கறிவாய் நின்றுணர்த்தும் பொருள் புலப்படும். அப்பொருள் ஞானமயமானது. சிவலிங்கமெனப்படுவது. இந்த ஞானக்காட்சியையும் அநுபவிக்கவேண்டும். "தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்" என்றவாக்கும் இவ்வுண்மை தெரிவிக்கும். இவ்வாறு உள்ளும்புறம்பும் அகலாது நிற்கும் பொருளியல்பை உணர்ந்தபின், ஜீவபோதம் செருக்குறுதல் கூடாது. அச்செருக்கற்று அந்த ஞானசொருபத்துள் தான் அடங்கிக்கிடப்பதை அறியவேண்டும். இதுவே இவ்விடத்து வணக்கம் ஆகும். இவ்வாறு முறையே புரிவதை இவ்வாசிரியர், **தம்மில் சிவலிங்கம் கண்டு அதனைத் தாம் வணங்கி** எனக்கூறி யுணர்த்தியுள்ளார். இந்த நிலையில் ஜீவபோத முனைப்புக்கும் சிவபோத நினைப்புக்கும் ஒரு மோதல் நிகழ்வதை ஞானிகள் உணரநேர்வர். அப்போது ஆசாரியனருளாலே, ஜீவபோத ஒழிவுக்கு வழிசெய்வர். இந்த ஒழிவு, சிவம் தனக்குத் தாரகமாய் விளங்குவதை அவனருள்கொண்டு அறிவதால் நிகழும். இந்நிகழ்ச்சியில் ஒரு **சாந்தம்** விளையும். இதன் பயனாக அன்பு அதிகரிக்கும். இந்த அன்புவெள்ளத்தே ஜீவன் அகப்பட்டதும், மெய்தான் அரும்பும், கண்ணீர் பெருகும். இப்படி அன்பு மயமாக ஜீவன் ஆவதே முற்கூறப்பட்ட சிவலிங்கத்துக்குரிய மஞ்சனம் ஆகும். இந்தப் பக்தியின்சிரத்தையே ஜலம்என்பர். "வாயில் மஞ்சனநீர்

தன்னை விளைத்த **அன்புஉமிழ்வார்** போல விமலனார் முடி மேல் விட்டார்" என்ற சேக்கிழார் வாக்கு அன்பே திருமஞ்சன நீராம் என்பதை விளக்கும். "அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பு" என்பதும் இவ்வுண்மை காட்டவல்லதாம். இதனை இந்நூலாசிரியர், **தம் அன்பால் மஞ்சனநீர் தாம் ஆட்டி**" என்று கூறித்தெளிவிக்கும் இயல்பு காணத்தக்கதாம். மற்றும். இப்படிச்செய்யும் ஆன்மா தன்னையே அச்சிவலிங்கத்துக்குச் சமர்ப்பணம் செய்யவேண்டும். இவ்வாத்ம சமர்ப்பணமே ஆவியை அடிமையாக்கல் எனப்படும். மாலையானது, அணிபவனால் தாங்கப்படுவது. இவ்வாறே தம்மை ஒரு பூவாலாகிய திருப்பள்ளித் தாமமாக மயங்காமல் சாத்திவிட்டால் **ஞானபூஜை** என்று இஃதுரைக்கப்படும். இதனை இவ்வாசிரியர், **தம்மை ஒரு பூவாகப் பூவழியாமல் கொடுத்துப் பூசித்தார்**" என்று கூறிக்காட்டியுள்ளார். தம்மையே கொடுத்தபின் ஆட்கொள்ளும் பாரம் சிவத்தின்மேலாவதை அறியலாம். "பாரம் அவனுக்கு அன்றாய்" என்ற ஞானியுரையும் இங்குக் கருதிப் பார்த்தல் தகும். இவ்வாறெல்லாம் படிப்படியாக நிகழ்வனவற்றை ஞானமார்க்கத்தில், **ஞானத்திற் சரியை, ஞானத்தில் கிரியை, ஞானத்தில் யோகம்** என்பர். இதன்பின் நிகழ்வதே சிவபெருமானோடு அபேதமாய்க் கலத்தில் என்கிற **ஞானநிஷ்டை** ஆகும். இந்நிலை கலைவுறாமல் இருத்தலே ஞானமார்க்கத்தில் முக்கியமானது. இதனையே நம் நாயனார் **ஓவாமை அன்றே உடல்** என்று கூறியருளியுள்ளார். இதுவே சிவனைக்கண்டு ஐக்கியப்படுவதாம். செம்பானது உருகியிருக்கும் பக்குவத்திலே குளிகையினது ஐக்கியம்

கூடுமாயின் அநாதியான களிம்பும், செம்பென்னும் உருவமும் நீங்க மாற்றுப் பிரகாசித்துச் செம்பொன்-ளுகும். பிறகு இப்பொன் செம்பாவதில்லை. களிம்பு கூடப் பெறுவதில்லை.

இவ்வாறே, ஒருவன் தவத்தால் விளையும் சத்தி-நிபாதத்தில் உண்டான அன்பின் மிகுதியாலே தேக முதலியவற்றை நீங்கி, தன் உண்மையை உணர்ந்து, தன்னையாளும் சிவனைக்கண்டு, ஒன்றுபட்டுத் தற்-போதமற்றிருப்பாளுயின் அவனுடைய உடலூழாம் பிராரத்தமும் தன்னடைவிலே கொடுமைகாட்டாமே தணிந்துகழியும். இக்கழிவின் முடிவிலே தேகம் நீங்கும். தேகம் நீங்கியபோதே திருவடியிலே இரண்-டறக் கலந்துவிடுவான். இதனுல் மீண்டும் தேகம் (பிறப்பு) எடுக்கமாட்டான். இதனை, " **ஆத்தி மலக்-கிட்டு அகத்திழுக்கு அற்றக்கால் மாத்திக்கே செல்-லும் வழியது ஆமே** " என்னும் திருமூலருரையாலும் தேறலாம்.

## செய்யுள் — 45

ரன்

**தன்னைப் பெறுவதின்மேல் பேறில்லை தான்என்றும்**
**தன்னைத்தான் பெற்றவன்தான் ஆரென்னில்—தன்னுலே**
**எல்லாந்தன் உட்கொண்டு கொண்டதனைக் கொள்ளாதே**
**எல்லாமாய் நிற்கும் இவன்.**

**கருத்துக்கள்**

1. தன்னைத்தான் பெறுதல்.
2. தன்னுள் யாவுங் காண்டல்.
3. பூரணனுய் நிற்றல்.

**விளக்கம்**

ஞானத்தின் மேற்பட்ட நற்சாதனம் வேறில்லை. அதனில் தன்னைத்தான் பெறுதலும், எல்லாமாய் நிற்றலும் சிறப்புடைய நிலைகளாம். சிவனருளைப் பெறுதற்கண் பெருவேட்கையுற்று அந்த அருள்பெற்ற பின்னர் ஞானம் தலைப்பட அந்த ஞானம் தன்னை யார் என்று தெரிவிக்க அவ்வுண்மையறிதலே தன்னைப் பெறுதல் எனக் கூறப்படும். தன்னை அதுகாறும் தத்தம் வழிகளிலே கள்வர்போல் மடக்கி நடப்பித்த தத்துவங்கள் நீங்கிவிடுதலால் தன்னையே தானறிதல் நிகழ்கின்றது. 'நான் யார் ?' என்ற உண்மை தெளிவாக உணரப்படுதலின் மிக்க பேறு வேறில்லை. தன்னைத்தான் காக்கின் சினங்காத்தல் வேண்டுமது போன்று, தன்னைத்தான் காணவேண்டின் தத்துவங்களை அணுகாமற் காக்கவேண்டும். இதுபற்றியே, **தன்னைப் பெறுவதின்மேல் பேறில்லை** என்றார். இதனால் ஒருவன் தன்னைத் தத்துவக் கூட்டத்தொன்றாகக் கருதுவது பேரிழவாம் என்க.

'**தான்** என்றும், **தன்** **தான் பெற்றவனை** என்றும் இரண்டாகப் பேசுவதன் கருத்தென்ன என்பதே நாமறியத் தக்கது. முன்பு ஆன்மா தன்னைப் பாசமாகவே கருதிக்கிடந்த முறைமை ஒழிய அருளாலே பரமனையும் தெரியப்பெற்று, பாசத்தையும் அறியப்பெற்று, பாசத்தை விட்டொழிக்க அதன் பயனாகத் தன்னை இன்னான் என அறியலுறுகிறான் இதுவே **தன்னை அறிதலாம்.** இதன்பின்னர், தற்போதம் மடங்கப்பெற்று இறைஞான எல்லையுட்பட்டு, முன்பு பாசத்தை விட்டதும் தன்னைக் கண்டுகொண்டமை

போல, தன்னைக் கண்டு சுகித்தலையும் ஒழித்துவிட்டால் வியாபக நிலை எய்துவான். இந்த நிலையில் தற்போதம் சீவியாது. இவ்வாறு சலனமற்ற தேக்கமாகிப் பூரணனாய் நிற்கப் பெறும்போது எல்லாம் தன் வடிவாகவும், அண்டமாதிகட்குக் கருத்தாவாகத் தான் விளங்குதலும் தெரிவான். இதுவே **தன்னைத் தான் பெற்ற நிலை** என்னப்படும். இதனால், தன்னை அறிதலும், அதன்மேல் தன்னைப்பெறுதலும் என்ற இரண்டுநிலைமைகளை ஞான நெறியில் நிற்போர் படிப்படியாக அனுபவிப்பார் என நாம் தெரியலாகும். இவற்றை விளக்குமுறையாகவே, **தான் என்றும், தன்னைத்தான் பெற்றவன் தான் ஆர் என்னில்** என வினவிக் கொண்டு, அவற்றின் விடையாகத் **தன்றலே எல்லாம் தன்னுட்கொண்டு, கொண்டதனைக் கொள்ளாதே எல்லாமாய் நிற்கும் இவன்** என்று தெரிவித்தருளினர் ஆசிரியர். இதுவே **ஆன்ம யோகம்** எனப்படும் என்பர்.

## செய்யுள் — 46

### ஞானயோக சிவயோகங்கள்

**துன்பமாம் எல்லாம் பரவசனாய்த் தான்துவளில்**
**இன்பமாம் தன்வசனாய்த் தானிருக்கில்—என்பதனால்**
**நின்வசனா யேஇருக்கின் நின்னுடனும் நேரிழையாள்**
**தன்வசனா யேயிருப்பன் தாள்.**

**கருத்துக்கள்**

1. இந்திரிய வசம் துன்பமயம்.
2. தன்வசம் இன்பம்.
3. வேதாந்த உண்மை.

4. ஞானயோகம்.
5. சுசுருபப் பிராப்தி.

**விளக்கம்**

ஆன்மா எப்போதும் ஒன்றைச் சார்ந்தே நிற்பது. அறிவு குன்றிய நிலையில் நிலையில்பொருள்களை நிலையென விபரீதமாக நினைந்து அவற்றையே சார்ந்துறைகின்றது. அறிவுதயம் பெற்ற பின்னர் நிலையான ஆதாரம் கடவுளே என்பதை உணருகின்றது. அங்ஙனம் உண்மை நிலையை உணரப்பெறுவதே ஞானயோக அடிப்படையாம். இவ்விரண்டிற்கும் இடைப்பட ஒரு நிலை நிகழ்கின்றது. அதாவது, எல்லாப் பொருள்களும் நமக்காதாரமானவையல்ல என்ற உணர்வுக்குப் பின்னர் எல்லாவற்றிற்கும் 'நானே ஆதாரமாவேன்' என்ற உணர்வெழுக்கும். இதுவும் சரியன்று. இந்தப் பொய்யுணர்வையும் போக்கவேண்டும். எல்லாப் பூதங்கட்கும் ஆகாயம் ஆதாரமாய் நிற்பது. கடலில் உள்ள நீர்ப்பரப்புக்கு நிலமே ஆதாரமாய் இருப்பது. ஊருக்குத் தரையே ஆதாரமாய்த் தாங்குவது. இந்த உண்மைகள் ஆய்வின் பின்னர்த் தெளியத் தோன்றும். இவ்வாறே, புறச்சார்பும் அகப்பற்றும் அற்றபின் உண்மைச்சார்பு புலப்படும். இவ் வுண்மையை இறைவனே ஆசானுகி அறிவிக்கின்றுன். அதன்பின் அவ்வழியே நிகழ்கின்ற அநுபவம் இம் மெய்மையை வலுவுடையச் செய்கின்றது. இவ்வலிமையே சுசுருபத்தை எய்துவிக்கும் இயல்புடையது. எனவே, ஆன்மா, பாசப் பொருட்களின் வசப்பட்டு அப்பாச ஞானமே தலையெடுத்து நிற்கப் பெறின், அவ்வப்பாசமே

ஆன்மாவைப் பல துன்பங்கட்கு ஆளாக்கும். நெருப்பை அறிந்து தொட்டாலும், அறியாமல் தொடினும் சுடுதல் துயரம் விளேந்தேதீரும். ஏன் எனில், நெருப்புக்குத் தன்னைத் தொடுகின்றவனுடைய அறிவு அறியாமை நிலேகளே எண்ணிப் பயன்படும் தகைமை கிடையாது. நாம் நெருப்பை அதனியல் அறிந்து நமக்கும் பயன்படும் முறையில் செலவிட்டால் இன்பம் அடையலாம். இதனை உலகபாசப் பொருட்கள் யாவற்றின் விஷயத்திலும் பொருந்தும் நீதியாக நாம் கொள்ளல் தகும். பாசச்சார்பு துன்பமே பயப்பதை, "**துன்பமாம் எல்லாம் பரவசனய்த் தான் துவளில்**" என்றுள்ளார் ஆசிரியர். **துவளில்** என்ற சொல் உயிரைப் பாசம் வாட்டுந் தன்மை தெரிவிப்பதாகும். **பரவசன் ஆய்** என்ற வார்த்தை ஆன்மாவானது பாசவசப்பட்டொழுகுதலே உணர்த்தும். ஆகவே, பாசங்களேவிட்டு ஒருவுவதே ஆன்மாவுக்கு உள்ள தற்காலிக சுதந்தரமெனப்படும். ஏனெனில் இந்நிலே உண்மைச் சுதந்தரமன்று. உயிர் என்றும் அடிமையேயாம். "துஷ்டனைக் கண்டால் தூரவிலகு" என்பதொரு பழமொழி. "தீயாரோடு இணங்கி இருப்பதுவும் தீதே" என்பதும் நல்லுரை. இவை பாச விஷயத்தில் ஆன்மா ஒழுகவேண்டிய முறையை உணர்த்தும்.

இனிப் பாசங்களேப் பற்றன்றென விட்டுநீங்கிய உயிர், தன்னைக் காணத்தலைப்படும். இது ஆன்ம யோகம் எனப்படும். ஒருவன், தன்னுேடு தானே கூடுதலும், அதன்மூலம் இன்பம் துய்த்தலும் இயற்கையாகாது. அது வெறும் போலியின்பு எனவே கூறப்படும். தன்னையே யாவற்றிற்கும் கருத்தாவாக

மதித்தல் தற்போதம் எனப்படும். தற்போதம் மயக்க மருந்துடன் கலந்துள்ள உணவுபோல்வது. இதனால் உண்டாவது மயக்க இன்பமேயன்றிச் சுழுப்தி இன்பாகாது. அவ்வாறே, ஆன்மா தானே கர்த்தனாய் எல்லாவற்றையும் தானே அறிகின்றவனாய் நின்று விகற்பித்தால் இதனால், இம்மை மறுமை இரண்டுக்கும் கிலேசமே விளையும். அதிகாரிக்கு அதிகாரம் இன்பமாயிருக்கிறது. அதன் பொறுப்பு துன்பமாயுள்ளது. இதனாலேதான் செங்குட்டுவன் என்னும் சேர வேந்தன் அரசபதவியைத் "துன்பம் அல்லது தொழுதகவல்லது" எனத் துணிந்துரைத்தலானான். ஆன்ம யோக நிலை—ஆன்மானந்த நிலை—இந்நிலையதேயாம். ஆதலால், ஆன்மா தான் யார்வசத்துள்ளோமென்னும் நிலையை நன்குணர்ந்து, தன் வசம் இன்னதென்பதைத் துணிந்து அவ்வசப்பட்டொழுகுதலே இன்பமாம். இதில் ஆன்மாவுக்குக் கிலேசத்துக்கான வழியில்லை. வண்டியில் படுத்துறங்கிக் கொண்டே செல்பவனுக்கு, நடத்தலாதி துன்பங்கள் இம்மியும் இருத்தல் கிடையா. இதனால் தூக்கத்துக்கும் இடையூறிருப்பதில்லை. இங்ஙனமே இறைவசப்பட்டு அவனருள் வழியே செல்வது இன்பம் தருவதென நாமறிதல் தகும். ஆன்மா, திரிவுகாட்சி எனப்படும் பிரபஞ்ச நீதியை விட்டுநீங்கித் தன் உண்மையான சைதன்ய நிலைக்கு ஏறி, அதன்பின் அச்சைதன்ய நிலையில் நிர் விகாரமாயிருக்கவேண்டும் என்பது தெரியலாம். இந்த நிலையில்-தான் முற்கூறப்பட்ட ஆன்மயோகம் சிவசைதன்ய வசப்பட்டிடுதலால் ஞானயோகம் எனக் கூறப்படும். அப்போது சுகரூபம் பிரகாசிக்கும். இதுவே எல்லா வேதாகமங்கட்கும் கருத்தாம். இதனையே **சித்தாந்தம்**

தெளிவுறுத்துகின்றது. இதனை, "**இன்பமாம் தன் வசனுய்த் தானிருக்கின்**" என்றவரி புலப்படுத்தும். **என்பதனுல்** என்றசொல் இக்கருத்து எல்லாவேதாகமங் கட்கும் உடன்பாடென்பதை உணர்த்தும்.

ஆகையால், நாம் திருவருள்நெறி பற்றுக் கோடாகக்கிடப்பின், அத்திருவருளை விட்டு ஒரு போதும் பிரிதலில்லாத சிவம்–ஞேயம்–ஆன்மாவினே டொன்றுபட நிற்பன். ஞான சத்தியைவிட்டு வேருக நிற்றல் இறைவற்கியல்பில்லை. இதனுல் பாசத்தை விடவேண்டிய ஞாதுரு அதனை ஒருவி அருளை மருவுதலாகிய ஞானம் பெற்றபின் ஞேயம் புணரப்படும் எனத் தெரியலாம். இதனையே, "**நின்வசனுயே இருக்கின் நின்னுடனும் நேரிழையாள் தன்வசனுயே இருப்பன்தான்**" என்று புலப்படுத்திக் கூறியுள்ளார். **தத் துவம் அசி** என்ற சொற் பொருளை விளக்கு முறையில் இவ்வாசகம் அமைந்துகிடத்தல் சிந்திக்கத் தக்கதாகும். இதுவே உண்மையான சிவ யோகம் எனப்படும்.

## செய்யுள் — 47

### சிவயோகநிலை இடையருமை

**செத்தாரே கெட்டார் கரணங்கள் சேர்ந்ததனே (டு)**
**ஒத்தாரே யோகபர ரானவர்கள்—எத்தாலும்**
**ஆராத அக்கரணத் தார்ப்புண்டிங் கல்லாதார்**
**பேராமற் செல்வரதன் பின்.**

**கருத்துக்கள்**

1. யோகபரர் கடமை.
2. பாக்கிய ஈனர்.

**விளக்கம்**

குடியானவன் தன்னிடமுள்ள மாடு, கலப்பை, விதை இவைகளை நல்லதொரு நிலத்தே பயன்படுத்தினுல் போகம் அறுவடை செய்து சுகிப்பான். களரிலே — வறள்வெளியிலே — பயன்படுத்துவானுயின் பாடுபடுவதுதான் பயனுகும். அறுவடைச் சுகமிராது. அங்ஙனமே, நாம் நமது கரணங்களைப் பாசவயலை விட்டு — ஜீவபோதவெளியைவிட்டு — சிவஞான நன்செய்யிலே பதிவிப்போமாயின் ஞான போனகம் எனப்படும் சுகசொரூபம் துய்த்து வாழலாம். இவ்வாறன்றிப் பாசப்படர் வெளியிலேயே செல்லவிட்டிருப்பின் துயரமே அடையநேரும். "மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்தி—பொய்ம்மையாம் களையை வாங்கிப் பொறை எனும் நீரைப் பாய்ச்சித் — **தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலியிட்டுச் — செம்மையுள் நிற்பராகில் சிவகதி விளையும் அன்றே**" என்பதும் திருநாவுக்கரசர் திருவாக்கு. ஆதலால் கரண வியாபாரம் முளைக்காதபடி ஞானநெறியிலேயே ஆன்மாக்கள் நிற்கவேண்டும். அங்ஙனம் நின்றுல் ஜனனம் மரணம் கெடும். இந்த ஞான அழுத்தம் நிலைத்திருந்தால் சிவரூபத்திலே பொருந்தி வாழஇயலும். இவர்களைச் **சிவயோக தற்பரர்** என்பர். இச்செய்தியை, "**செத்தாரே கெட்டார் கரணங்கள்; சேர்ந்து**

**அதனேடு ஒத்தாரே யோகபரர் ஆனவர்கள்** " என்று கூறித் தெளிவுறுத்தலுற்ருர் ஆசிரியர்

கரணங்கள் தத்தம் வழியொழுகும் அவா அடங்கப் பெருத இயல்புடையன. "ஆசைக்கோர் அளவில்லை" என்பர் தாயுமானவர். கரணங்களை அவற்றின் விழைவுவழியிலே ஓடவிட்டு அமைதியுறச் செய்தல் அசாத்தியம். கரணங்கள் நம்மை ஆசை யென்னும் பாசத்தாற் பிணிக்கும் தகையன. ஆதலால், இவற்றை அவற்றின் இயல்புகளினின்று மடக்கி அடக்கிச் சிவயோக நெறிப்படுத்தி நடத்துவதே பேர் ஆற்றல் ஆகும். அவ்வாறன்றி, கைதிபோலக் கரணம் காட்டும் நெறியே செல்பவர் பிறப்பும் இறப்புமே அடைவர். சைதன்யப் பொருளாகிய நாம் அசேதனப் பொருளாகிய கரணங்களின் வழிச் செல்லுதல் மடமையாகும். இக்கருத்துப் புலப்படுமாறு நம் நாயஞர், **எத்தாலும் ஆராத அக்கரணத்து ஆர்ப்புண்டு இங்கு அல்லாதார் பேராமல் செல்வர் அதன் பின்** என்றுரைத்தருளினுராவர். இதனை, " **உள்ளச் செய் ஆங்கே உழவு செய்வார்க்கு—வெள்ளச்செய் யங்கே விளைந்தது தானே** " என்னும் திருமந்திர மொழிகளாலும் உறுதியுற உணரலாகும்.

---

## செய்யுள் — 48

### சிவயோகிகவின் சீர்மை

**கண்ணும் கருத்தும் கடந்ததொரு பேறேயும்**
**கண்ணும் கருத்தும் களிகூர—நண்ணி**
**வடமடக்கி நிற்கும் வடவித்தே போல**
**உடனடக்கி நிற்பர்கள்காண் உற்று.**

### கருத்துக்கள்

1. சிவத்தின் பெருமை.
2. சிவயோக சாதனை.
3. சிவயோகியர் பெருமை.

### விளக்கம்

சிவம், நமது கண்ணுக்கும் கருத்துக்கும் எட்டாத சொருபமுடையது. இப்படிச் சொல்வதனுல் நமக்கும் அதற்கும் தொடர்பே இல்லை என்றெண்ணிவிடக் கூடாது. நமக்கு முற்றிலும் ஆதாரமான பொருள் சிவமே. அது நம்முடன் ஒன்ருயும், நமக்குவேருயும், நம்பால் உடனுயும் உதவுகின்றது. ஆதலால் இதன் தொடர்பின்றி நாம் வாழ இயலாது. இதன் தொடர்பினை நாம் **பெற்றே** தீரவேண்டும். ஆதலால், ஈண்டு ஆசிரியர். **ஒரு பேறேயு**ர் என்றுள்ளார். பெறத்தக்க செல்வமாத லாலும் தனிப்பெரும் செல்வமாதலாலும் இங்ஙனம் கூறியுள்ளாராவர். இத்தகைய பொருள் பௌதிகப் பொருள்போல் சுட்டியறியத்தக்கதன்று. ஆகையால், "**கண்ணும் கருத்தும் கடந்தது**" என்ருர். "எழுதிக் காட்டொணுதே" என்பதன் கருத்தும் இதுவே.

இத்தகைய பொருளைச் சிவஞானிகள் தம் ஞானத்தால் ஒன்றுபட்டுப் பரமானந்தமே புசித்திருப்பர். அவர்கட்கு விசுவம் தோன்றுவதில்லை. ஒடுங்கினாலும், விழித்தாலும் இப்பரமானந்தமே—சிவ சொரூபமே—அனுபவமும் காட்சியும் நல்கி அவர்களைக் களிப்புக் கடலுள் ஆழ்த்தியுதவும் இதுபற்றியே, **கண்ணும் கருத்தும் களிகூர நல்வாரி** எனலானார். ஆலம் வித்து மிகவும் நுண்ணியது. எனினும் அது தனக்குள் மிகப் பெரியதொரு மரத்தினை அடக்கித்தான் உள்ளது. இதனால் ஆலம் வித்தின் மகத்துவம் எத்தகையதென நாமறியலாம். இதுபோலவே சிவஞானிகளும் அளவிட முடியாத முழுமுதல்வனைத் தம்முள் அடக்கித் தங்கள் ஆன்ம சுபாவத்தை அறவே நீத்துச் சிவமாகியே நிலைத்து நிற்பர். இக் கருத்தை, **வடமடக்கி நிற்கும் வடவித்தே போல உடனடக்கி நிற்பர்கள் காண் உற்று** என்று கூறியுள்ளார் நம் நாயனார். "உருவு கண்டு எள்ளாமை வேண்டும்" என்பதன் கண்ணும் இத்தகையார் பெருமை புலஞ்செய் கருத்துள்ளமை காணலாம்.

## செய்யுள் — 49

### சிவத்தை உள்ளத்துக் கொள்ளுதல்

**வானகமும் மண்ணகமும் ஆய்நிறைந்த வான்பொருளை**
**ஊனகத்தே உன்னுமதென் என்றனையேல்—ஏனகத்து**
**வாதனையை மாற்றும் வகையதுவே மண்முதலாம்**
**ஆதனமே அன்றோ அதற்கு.**

### கருத்துக்கள்

1. வான் பொருள்.
2. உள்ளத்தடைத்தல்.
3. மாயையின் பரிக்கிரக இயல்.
4. வாதனை மாற்றம்.

### விளக்கம்

ஆகாயம் எல்லாப் பொருளையும் தானடக்கும் பரப்பினது. எல்லாவற்றின் உள்ளும் புறம்பும் வியாபித்திருப்பது. ஒரு புல்லின் நுனியில் இருக்கும் பனித்துளிக்குள்ளே அதனைக் காணமுடிகிறது. சிறிய பளிங்கினுள் பெரிய பொருள் அடங்கிக் காட்டுகிறது. "கண்ணளவாய் நின்றதோ காணுங் கதிரொளிதான் விண்ணள வாயிற்றன்றோ விளம்பு" என்ற இடம் இங்குச் சிந்திக்கத் தக்கது. இவ்வாறே ஆகாயம் முதல் பிருத்வி ஈறாக உள்ள பஞ்சபூத பரிணமமாகிய பிண்டப் பிரமாண்டங்களும், இவற்றிற்குக் காரணமான தத்துவங்களும், இவற்றுட்பட்ட ஆன்மகோடிகளும், தானே ஆய்ப் பூரணமாய் நிற்கின்ற சிவசொரூபத்தைச் சிவஞானியாவான் தனக்குள்ளே அடக்கமுடியும். மண் முதலான யாவும் அந்தப் பொருளுக்கு ஆதன-மாகும். இவ்வாறான பொருளை ஞானாசாரியன் அறிவிக்குமுறையினைக் கூடப்பெற்றால், அப் பெற்றி உடையார்பால் மேற்கூறிய பொருளின் வியாத்த மெல்லாம் நின்று பிரகாசிக்கும். ஆனால் இந்த ஞான ஒளி, ஞானதிருட்டி இல்லார்க்குப் புலப்படாது. சூரியன் எவ்வளவு பிரகாசமுடையவனாயினும் குருடர்க்குப் புலப்பாடு இலதாம். இந்த ஞானிகள்

ஆடியின்மையமொத்த பான்மையர். சூரியன் நேரே பஞ்சினை எரிக்காவிடினும் சூரியகாந்தக்கல் பஞ்சை எரித்துவிடுகிறது. ஆனால் சூரிய கிரணத்தின் உதவியினால்தான் இவ்வாறு செய்யவல்லதாகிறது. அவ்வாறே ஞானாசாரியன், சீடனிடத்து அநாதியே கூடியுள்ள வாசனையைப் போக்குகின்றான். அங்ஙனம் போக்கப்பட்ட ஞானசீடன் மேற்கூறிய உண்மையை அநுபவரீதியாக அறியவல்லவனாகிறான். இதுவே சிவத்தை அடக்கிப் பவத்தைத் துடைக்கும் வழியாம். இதனால், **வானகமும் மண்ணகமுமாய் நிறைந்த வான்பொருளை ஊனகத்தே உன்னுமது** கூடும் என்றுள்ளார் ஆசிரியர். **மண்முதல் யாவும் அப் பொருட்கு ஆ**தனமாயிருத்தலால் ஞானியும் அப் பொருளிருக்கைக்கு உரியவனாகிறான். ஆதனமானது அமர்ந்திருப்போரைத் தாங்கிக் காட்டுதல்போல் ஞான நிட்டையரும் சிவத்தைத் தம்முள் அடக்கிக் காட்டு-மியல்பினராவர். இவர்களின் இத் திறத்தை வணங்கும் மாணவனின் அநாதியான வாசனைகளைப் போக்குதல் கொண்டு நாமறிதல் கூடும் என்பதனை **ஏனகத்து வாதனையை மாற்றும் வகை அதுவே** என்ற சொல்லால் தெளிவுறுத்துள்ளார். இதுவே சிவஞான முறைமையாகும்.

---

## செய்யுள் — 50

### புறத்தேயும் சிவச்செயல் புரிதல்

**கல்லில் கமரில் கதிர்வாளில் சாணையினில்
வல்லுப் பலகையினில் வாதனையைச்—சொல்லும்
அகமார்க்கத் தாலவர்கள் மாற்றினர்காண் ஐயா !
சகமார்க்கத் தாலன்றே தான்.**

### கருத்துக்கள்

1. சகமார்க்க இயல்பு.
2. அகமார்க்கத்து அருமை.
3. அகமார்க்க சாதனை புரிந்தோர் ஐவர் செய்கை.

### விளக்கம்

உலகாசாரம் எனவும் ஞானசாரம் எனவும் வாழ்க்கைவழி இரண்டுவகைப்படும். உள்ள அறிவை ஊனோம்புதற்கண்ணே செலுத்தி வாழ்வது உலக ஆசாரம் எனப்படும். தாம் பெற்ற ஞானத்தை உலக நெறியிலும் மேற்கொண்டு உலகினைத் தம்வழியிலே திருப்பிச் சிவபோகந் துய்ப்பதே ஞானசாரம் எனப்படும். இத்தகையோர் நெஞ்சம் எப்போதும் எப்பணியிலும் சிவத்தின் திருவடியிலேயே தஞ்சமாகக் கிடக்கும். இவர்கள் நெஞ்சமும் சிவத்துக்குப் பள்ளியறையாகும். தாமும் சிவத்துள்ளாழ்ந்துத் தம்முள்ளும் சிவமழுந்தப் பெற்றிருத்தலே இவரியல்பு. எச் செயலையும் சிவனுக்காகவே சிவன் செயலெனவே செய்வர். இவர்கள் புறம்பேயும் சிவத்தைக் காணலால் வாதனைதீர்ந்து வாழ்வார். இதனை நாமறிவதற்கு நம் நாயனார் ஐவர் திருத்தொண்டர்களையும், அவர்தம்

செயலையும் காட்டாகத் தந்துள்ளார் இச் செய்யுளில். அவர்கள் சகமார்க்கத்தால் தம்வினையை மாற்றினரிலர். ஆகையால், **சகமார்க்கத்தால் அன்றே** என்றார். இவர்கள் தம்வேதனை இவர்புரிந்த அகமார்க்கத்தால் மாறியது. ஆதலால், **வாதனையைச் சொல்லும் அக மார்க்கத்தால் அவர்கள் மாற்றினர் காண் ஐயா** என்றுரைப்பாராயினர். அகமார்க்கம் ஞானநன்னெறியே யாகும். மேலான நன்மை முத்தியே. அதனை அடைதற்கு ஞானமே ஏது. ஆதலால் ஞானநெறி மேலானநெறி எனப்படும். இது சன்மார்க்கம் எனவும் கூறப்படும். ஞானத்துக்கு மேற்பட்ட மார்க்க மின்மையை இச் சொற்றொடர் தெரிவிக்கும். தமது வாழ்க்கை நெறியையே சத்திய நெறியாக—சன்மார்க்க நெறியாக — அகமார்க்கமாக நடத்திய பெரியார்கள் ஐவர் வரலாற்று விரிவுகளைத் திருத்தொண்டர் புராணத்தே காணலாம். அவர்களுள் இங்குக் காட்டப் பட்ட முதலாமவர் **திருக்குறிப்புத் தொண்ட நாயனர்** ஆவர். இவரது திருவுள்ளம் எப்போதும் சிவத்தின்பால் பதிந்தே கிடந்தது. இவரது புறத்து வாழ்க்கை ஆடைகளை வெளுத்தல். இப் புறத்து வாழ்க்கையிலும் இறைபணி நிற்றலைக் கையாண்டனர் இவர். அடியார்கள் கேளா முன்பே குறிப்பறிந்து ஒலித்தளித்தல் இவர் பண்பாயமைந்தது. இங்ஙனம் இவர் அடியார்க்குச் செய்தளித்துவந்த இத் தொண்டினையே சிவபெருமானுக்கும் செய்யவேண்டி நேரிட்டது. தாமே வலியக் கேட்டு வாங்கி வெளுத்தளிக்க ஒருப் பட்டது இவரது உள்ளம். சிவத்தின் சோதனை மழையின் மூலமாக நிகழ்ந்தது. குற்றேவல் தவறிற்றே என எண்ணி வெதும்பினரேயன்றிக் காலத்தை

நொந்துகொண்டாரிலர். முன்பே ஒலித்து மனைக் காற்று ஏற்க அறிந்திலனே எனத் தம்மையே நொந்து கொண்டனர். இந்த அபராதத்துக்காக—சிவபெருமானுகிய அடியாரது திருமேனியைக் குளிருக்குட்படச் செய்த குற்றத்துக்காகக் "கந்தை புடைத்திட எற்றும் கற்பாறைமிசைத் தலையைச் சிந்த எடுத்தெற்றுவன்" எனத் துணிந்து அங்ஙனமே செய்யலுற்றுர். வளைத் தழும்பர் மலர்ச்செங்கை தாங்கிற்று. இங்ஙனம் புறத் தொழிலிலே தம் சிவபத்தியை இவர் ஒன்றுபட வைத்தமையால் நம் சேக்கிழார் பெருமான், "சீர் நிலவு திருக்குறிப்புத் தொண்டர் *திருந்தொழில்* போற்றி" எனலுற்றுர் என்க.

**அரிவாட்டாயர்** வரலாற்றுள்ள பத்தி நுணுக்கம் இந்நூல் 20-ஆம் செய்யுள் விளக்கத்தே தரப்பட்டமை காணலாம். இங்கு சிவபெருமான் திருக்கை சென்று அரிவாள் பற்றும் திண்கையைப் பிடித்துக் காத்தது. "நன்று நீ புரிந்த செய்கை" என்று சிவபெருமானுல் இவர் புறச்செயலின் திறம் புகழப்பட்டுள்ளமை காணலாகும்.

இனி **ஏயர்கோன் கலிக்காமர்** செயலும், அவரது சிவத்தன்பு உயிரையும் பொருட்படுத்தாது புறத்தே புரிந்த நிலையினை எடுத்துக் காட்டுவதாகும். "நாயனை அடியான் ஏவுங் காரியம் நன்று! இதனைச்செய்வான் தொண்டனும்." என இந் நாயனுர் சுந்தரமூர்த்தி சுவாமிகளையும் வெறுத்து மொழியலுற்றுர். அவரைக் கண்ணுலே காணவும் விரும்பினரிலர். "பாதகச் சூலை தன்னை உற்ற இவ் வயிற்றினேடும் கிழிப்பன்" என்று சொல்லித் தீர்த்தார். இத்தகைய உறுதிப்பாடு இவர்க்

கிருந்தமை போற்றற்குரியதாகுமன்றே! இவரது செயற்கரும் செயலும் உள்ளும் புறம்பும் ஒரு நிகராகச் சிவ நிறைவிருந்தமை புலப்படுத்துவதாகும்.

இப்பால், மூர்த்தி நாயனார். சிந்தைச் சிவமே தெளியும் இயல்பினராகித் தாம் புரியும் சந்தனத் திருத் தொண்டுக்குச் சமணரால் முட்டுற்ற காலை முழங்கை தேய்த்தார். இவர் செயலைச் சிவபெருமான் 'அன்பின் துணிவால் செய்த செயல்'' எனவே கூறலுற்றார். இதனாலேயே நம் சேக்கிழார்பெருமானும் இவர் அரசு புரிந்த செயலை வித்தரிக்காமல், ''அகல் பாறையின் வைத்து முழங்கையை அன்று தேய்த்த'' அருஞ் செயலையே முடிவாய்ப் புகழலுற்றார்.

மூர்க்க நாயனார் என்பார் சூதாடுதல் தொழிலை மேற்கொண்டும் அதனால் வந்த ஊதியத்தை அல்லாருங் கறைக்கண்டர் அடியவர்கள்தமக்கே ஆக்கினார். தமக்குப் பயன்படுத்தினாரிலர். ஆதலால், இவரை ''நல்லார் நற்சூதராம் மூர்க்கர்'' எனலானார் சேக்கிழாரும். இங்ஙனமாக இவர்கள் யாவரும் **உள்ளும் புறம்பும் ஒருபடித்தாக** ஒழுகிய சிவத்தன்பாம் செயல் சிவஞானச் செயலாகக் கொள்ளப்பட்டமை உணரலாம். இவ்விதமாகச் சிவத்தினை உள்ளும் புறமும் எந்த நிலைமையிலும் கோடலரிதென்பதையும், அங்ஙனம் கோடலால் சிவம்மகிழ்ந்து சிவபோகம் தரும் என்பதையும் நமக்குணர்த்தும் பொருட்டே, ''**கல்லில் மலரில், கதிர்வாளில், சாணையினில், வல்லுப் பலகையினில் வாதனையை மாற்றினர்**'' என்றார் ஆசிரியர். இதனால், நாம் எச்செயலில் புறத்தே ஈடுபட்டுக் கிடப்பினும் அச்செயலின் மூலமாகவே அகமார்க்கத்தை

அநுட்டித்துச் சிவானந்தத் தழுந்தல்கூடுமென உணர்தல் தக்கதாம் **காண்** என்றமையால் அநுபவத்தால் இதனை உணரவேண்டும் என்பது தெரியப்படும். "பையா" என்னுமல் மாணுக்கனை விளித்தற்கண் 'ஐயா' என்றுள்ளமையால் சீடனுடைய உயர்வில் ஆசிரியர்க்குள்ள பரிவு புலப்படும். இதுகாறும் கூறப்பட்டவைகளால், நாம் உள்ளும் புறம்பும் சிவஞானமே துணையாய் அழுந்த வேண்டுமென்பதை அறியலாம்.

---

## செய்யுள் — 51

### நினைவொழிய நிற்றல்

**உள்ளும் புறம்பும் நினைப்பொழியில் உன்னிடையே**
**வள்ளல் எழுந்தருளும் மாதிறுெடும் — தெள்ளி**
**அறிந்தொழிவாய் அன்றியே அன்புடையை ஆயின்**
**செறிந்தொழிவாய் ஏதேனும் செய்.**

### கருத்துக்கள்

1. நினைப் பொழிவு.
2. ஞானயோகம்.
3. பத்தியோகம்.

### விளக்கம்

ஞானநெறிச் செல்வார், உள்ளும்புறம்பும் ஒருநிகராகவே ஜீவபோதம் சற்றும் ஜீவிக்காமல் இறையருளில் அழுந்தி முற்கூறப்பட்ட நாயன்மார்களையொப்ப நடத்தல்வேண்டும், அவ்வாறின்றி உள்

ளத்தே காணவேண்டுமெனவும் புறம்பே காண வேண்டுமெனவும் சிவபோதங்கொண்டு விசாரிப்போ மாயின் இரண்டுபட்டுத் தோன்றலுறும். முழுமுதற் பொருள் ஓரிடத்தது அன்று. ஆதலால், பிண்டம், பிரமாண்டம், தத்துவம், ஆன்மபோதம் ஆகியவற்றை **ரூபம் — தரிசனம் — சுத்திகளாலே** அருள்மயமாக்க முயலவேண்டும். இவ்வருளே ஞானமயம் எனப்படும் ஒரே நீர்மையாகும். அதன்பின்னர் தன்னினைவு ஒழியப் பெறும். இந்நிலையில் அருளொடுபொருந்தும் சிவம் ஏதும் கைம்மாறு கருதாமல்வந்து தோன்றி ஆன்மா வினை ஒரு தன்மையாக்கிக்கொண்டு தானேயாகி நிற் கும். இதுவே சிவப்பிரகாச நிலையாம். ஆதலால், சிவ யோகத்தின்கண்ணே நிற்பர் சிவத்தைப்பற்றிய ஆராய் வும் இன்றி அனுபவிக்கின்றோம் என்ற எண்ணமும் மிறந்து நிற்றல்வேண்டும். இதுவே **ஞானயோகம்** எனப்படும். இதனையே நம் ஆசிரியர், **உள்ளும் புறம்பும் நினைப்பொழியின் உன்னிடையே வள்ளல் எழுந் தருளும் மாதிநெடும் ; தெள்ளி அறிந்தொழிவாய்** என்று கூறியுள்ளார்.

இவ்வாறன்றி, சிவனைப்பற்றிக் கேட்டாலும், நினைத்தாலும், சிவனடியார்களைக் காண நேரிடினும், சிவனுருவம் கண்டாலும் உள்ளம் நெக்குருகும் பேரன்பு நிகழுமானல் இத்தகைய அன்பாலும் கருத் தழிவு நேரும். இதனாலும் சிவனுடனே ஒருநீர்மை ஆகிவிடலாம். இதனைப் **பக்தியோக**மென்பர். "நினைத்தொறும் காண்தொறும், பேசுந்தொறும், எப் போதும் அனைத்தெலும்பு உள்நெக ஆனந்தத்தேன் சொரியும்" என்ற திருவாசகப் பாடல் இந்நிலை யுணர்த்துவதாகும். இத்தகைய பக்தி வாய்த்தல்

எளிதன்று. நாயன்மார்கள் யாவரும் இத்தகையரே யாவர். இதனால் நம் ஆசிரியர், **அன்புடையை ஆயின் செறிந்தொழிவாய்** என்றார். மேற்கூறப்பட்ட இரண்டு யோகநிலைகளின் முடிவும் சிவஞானைக்கியமாதலே யாதலால் **ஏதேனும் செய்** என்று நியமித்துள்ளார். செய் என்றமையால் பேச்சுப் பயனற்றதென்பது உணர்த்தப்பட்டதென்னலாம்.

## செய்யுள் — 52

## பத்தியோக நிலைமை—கண்ணப்பர்

**கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை என்றமையால்**
**கண்ணப்பன் ஒப்பதோர் அன்பதனைக்—கண்ணப்பர்**
**தாமறிதல் காளத்தி யாரறிதல் அல்லதுமற்**
**றாரறியும் அன்பன் றது.**

### கருத்துக்கள்

1. கண்ணப்பதேவர் அன்பு
2. அன்பின் நிலைமை.

### விளக்கம்

**பத்தியோகம்** எளிமையானதாயிருப்பின் அதனை மேற்கொள்ளலாமே என நாம் எண்ணுதல் கூடும். பத்தியின் இயல்பினை வரையறுத்துக் காட்டல் இயலாது. சிற்றின்பினைத் தலைவன் தலைவியரே தம்முள்ளத்தாலறிதல் கூடுமேயன்றிப் புறத்தோர்க்குப் புலப்படக் காட்டலாகாது. அவ்வாறே அன்புநிலையும் அன்பினைச் செலுத்துவோரும் செலுத்தப்படுவோருமே

அறிதல் இயலும். மணிவாசகப் பெருமான் பக்தி வெள்ளத்திற் படிந்த பெரியார். இவரே தம்மை அன்பற்றவர் எனக் கூறிக்கொள்ளுகிறார். கண்ணப்ப நாயனார்போலும் அன்பு தனக்கில்லையே எனக் **“கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின் ......என்னையும் ஆட்கொண்டருளி”** எனக் கூறி அன்பின் ஆழம் அறியவொண்ணா நிலையினைப் புலப் படுத்துள்ளார். கண்ணப்ப நாயனாரின் பத்திப் பிரபாவம் எத்தகையதென்பது இந்நூலின் முன்னரே கூறப்பட்டுள்ளது. ஆதலால், பத்திநெறியானது அளவுகடந்த தவத்தால் விளைவதாகும். இந்த அன்பு வரும்போதே இன்ப மயமாக வரும். ‘தெய்வப் பிச்சன்’ எனப் பிறரால் கூறுவிக்கும். ஆகலின், கண்ணப்பர்போன்ற அன்பு முன்செய் தவத்தின் ஈட்டத்தால் வாய்க்குமாயின் நல்லதே. இவ் வாய்ப்பு மிகவும் அரிதாம். இதனை விளக்கும் பொருட்டே இவ் வாசிரியர், **“கண்ணப்பன் ஒப்பது ஓர் அன்பு இன்மை** எனக் கூறி அதனைக் **கண்ணப்பர்தாம் அறி**வர் என்றார். அன்றியும், அவ்வன்பின் நிலைக்களமாகவுள்ள சிவ பெருமானே அதனை அறிய இயலும் எனத் தெரிவித்தற் பொருட்டே **காளத்தியாரறிதல் அல்லது மற்றார் அறியும் அன்பன்று அது** என்றும் கூறலானார். இதனால் பத்திநெறியானது புண்ணியப் பெருக்கால் தன்னடைவிலே நிகழ்வதென நாமறியலாம். “இன்பில் இனிதென்றல் இன்றுண்டேல் இன்றுண்டாம் — **அன்புநிலையே அது”** என்பது திருவருட்பயன்.

---

## செய்யுள் — 53

### பத்தியோகநிலை — சேந்தனார்

அவிழ்ந்த துணியில் அவிழ்ந்த அவிழை
அவிழ்ந்த மனத்தால் அவிழ்க்க — அவிழ்ந்தசடை
வேந்தனார்க் கின்னமுத மாயிற்றே மெய்யன்பிற்
சேந்தனார் செய்த செயல்.

### கருத்துக்கள்

1. அன்பின் அவிந்த நிலை.
2. அன்பின் செய்கை.
3. அன்பே சிவத்தின் உணவு.

### விளக்கம்

கடவுள் நமக்கு உடம்பு முதலிய வசதிகளைத் தன் திருவுள்ளத்திலே கொண்டுள்ள அன்பினால் புரிகின்றான். நன்மை உள்ளிருந் தறிவுநெறியில் நடத்துகின்றான். இங்ஙனம் நமக்குத் தாயினும் தயாமிக்கு ஆவன ஆற்றும் பெருந்திறத்தை நினைக்க நினைக்க மனத்திலே அவன்பால் இச்சை அதிகரிக்கும். இவ்வதிகரிப்பு எல்லைகடந்தோடுமாயின், மலர் மலர்ந்து அதுகாறும் மறைத்துப் பொதிந்துவைத்திருந்த தேறலை வண்டுக்கு வழங்குவதுபோல, மனம் நெகிழ்ந்து அவிழும். இந்த அவிழ்ந்த நெஞ்சம்யாவற்றையும் — தன்னையும் — பிறர்க்கே வழங்க எண்ணும். தம்மினும் பிறர்பால் — ஈசன்பால் — நேசம் ஏற்படுவதே இதற்குக்காரணமாகும். " அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு " என்ற குறட்கருத்தும் இது புலப்படுத்துவதேயாம். இங்ஙனம் மனம் அவிழ்ந்தநிலை

பெற்றவர் **சேந்தனூர்** ஆவர். இவர் திருப்பல்லாண்டு பாடத் தில்லைக்கூத்தனூர் தேரோடலுற்றதென்பர். விறகுவிற்றுவரும் சொற்பப்பொருளையும் அடியார்க்-குக் கூழுண அளித்தற்கே அர்ப்பித்தார். இவர்தம் பத்திவலையிற்பட்டான் பரமன். ஒருநாள் நள்ளிரவில் இவர்பாற்சென்று கேட்டு அன்பவிழ அகம் அவிழ அவர் துணியவிழ்த்தளித்த களியினை உண்டுகளித்தான் பரமன். இவ்வரிய செயலை அம்பலம் அறியவைத்தான். தன் திருமேனியிலும் அவரிட்டகூழமுதினைத் தெரியத்தெளித்தே இதனால் அன்பென்னும் அரும்பு மலர்ந்தால் போகம்என்னும் பழமாகி இனிக்கும் என்பதை உணரலாம். அன்பு என்னும் ஆறு கரைபுரண்டு ஓடவேண்டும். இவ்வா-றன அன்பு இப்பிறப்பில் ஏற்பட்டால் பிறவியும் பயனுடையதாகும். அன்பினால் நிகழ்ந்தசெயல் "நாம் செய்தோம்" என்ற எண்ணமற்ற இயல்புடையதாதலால் நாயனார் **அவிழ்த்த** என்னுமல் **அவிழ்ந்த** என இச் செய்யுளிற் குறிக்கலுற்றார். கண்ணனும் குசேலரது அவல்முடிச்சைத் தானே அவிழ்த்தான் என்பது வரலாறு. **அவிழ்ந்தமனத்தால்** எனவும், **அவிழ்ந்த சடைவேந்தன்** எனவும் பாடலில் கூறியிருக்கும் நயம் சிந்தைக்கு விருந்தளிக்கும். சேந்தனார் சிவனார்க்கு அன்பவிழ்த்து அவிழளித்தாற்போன்று திருக்கடவூராரும் படிப்போர்க்குத் தமதன்பவிழாகிய நயம் பொதிந்த இப்பாடலை அருளியுள்ளமை போற்றத் தக்கதாகும். "அன்பில்லதனை அறம் காயும்" என்பதும் உள்ளம் கொள்ளவேண்டுவதே. மற்றும், தேவர்கள்யாவரும் தந்நலத்தையே மதித்து நம்பெரு-மாற்கு ஆலாலம் என்னும் **நஞ்சினை** இட்டனர்.

ஆனால், அன்புருவாகிய நம் சேந்தனார் அண்ணலார்க்கு இட்டது **இன்னமுதம்** ஆம் என்று கருதவைத்துள்ள திறம் நமக்குக் களியூட்டும்.

---

## செய்யுள் — 54

### பத்திநிலை—பாண்டிமாதேவியார்

**சுரந்த திருமுலைக்கே துய்ய சிவஞானம்**
**கரந்துண்டார் பிள்ளைஎனச் சொல்லச்—சுரந்த**
**தனமுடையாள் தென்பாண்டி மாதேவி தாழ்ந்த**
**மனமுடையாள் அன்பிருந்த ஆறு.**

**கருத்து**

பாண்டிமாதேவியார் அன்பிருந்த முறை.

**விளக்கம்**

உள்ளம் அன்பு உள்ள இடம் அதனை வெளிப்பட உணரவேண்டுமாயின் அதனையுடையார் செயலால் உணரலாம். தாயின் அன்பை முலைப்பால் வெளிப்படலாலும், மற்றையோரன்பைக் கண்ணீர் வெளிப்பாட்டினாலும் நாமறியலாம். ஆதலால் முலைப்பாலும் கண்ணீரும் அன்பின் வடிவேயன்றி வேறல்ல. "இல்லா முலைப்பாலும் கண்ணீரும் ஏந்திழைபால் நல்லாய் உளவாம்" என்ற சிவஞான போத உதாரணச் செய்யுளகத்தும் இவ்வுண்மை காட்டப்பட்டிருத்தல் காணலாம். "புன்கண் நீர்பூசல் தரும்" என்பது வள்ளுவர் வாக்கு. அன்பு, அகத்தே எப்போதும் நிற்கும் பொய்யிலா மெய்ப்

பண்பு. வாயில் கண்டதும் வெளிப்படும் இயல்பினது. பால் பொழிதற்கிடமானர் உமாதேவியார் தனத்திலிருந்து தூய சிவஞானப் பாலைப் பொழிய அதனைத் திருஞானசம்பந்தப் **பிள்ளையார்** பருகியருளினர் என்ற சொல்லைக் கேட்டதையே வாயிலாகக் கொண்டு மங்கையர்க்கரசியார் பால்பொழியும் தனமுடையவராயினர். இதுதான் அன்பின் உள்ளம் எங்ஙனமிருக்குமென்பதை உணர்த்தவல்ல செய்கையாம். இந்த அன்பினை அளவிட்டுரைத்தல் ஒண்ணாது. இதுபற்றியே "மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம்" எனப் போற்றலுற்றார் சேக்கிழாரும். பள்ளமடையில் வெள்ளம் பாய்வதுபோல அன்பு உள்ளமடையில் இறைவனும் அடைவான் என்பது இப் பாடற் கருத்தாகும்.

## செய்யுள் — 55

### அன்பாற் போதங்கரைத்தல்

**அன்பேஎன் அன்பேஎன் றன்பா லழுதரற்றி**
**அன்பேயன் பாக,அறி வழியும்—அன்பன்றித்**
**தீர்த்தம்தி யானம் சிவார்ச்சனைகள் செய்யுமவை**
**சாற்றும் பழமன்றே தான்.**

**கருத்துக்கள்**

1. அன்பால் அழுது அரற்றல்.
2. அன்பால் அறிவு அழிதல்.
3. அன்பால் முத்திப் பேறு.

**விளக்கம்**

அன்பின் வளர்ச்சியில் படிமுறை உண்டு. முதிர்ந்த அன்பு **தீவிரதர அன்பு** எனப்படும். இதனை **அயரா அன்பு** என்றும் கூறுவர். இத்தகை அன்புடையார் சிவானந்தமாகிய வீட்டை உடையவராவர். "அயரா அன்பின் அரன்கழல் செலுமே" என்பது சித்தாந்தம். முதிர்ந்த பத்தி நிலையில், அன்பு செய்யும் **உயிரும், அன்பும்**, அன்பு செய்யப்படும் **சிவமும்** உள்ளன எனினும் பிரிப்பின்றி அத்துவிதமாய்க் கலந்து நிற்கும். இதனாலேதான் "அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின் அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே" என்றனர் திருமூலர். தீவிரதர அன்புடையார் பித்துக்கொண்டவர்போலத் தன்னை மறந்திருப்பர். தன்னை மறத்தலே ஞானயோகிகளின் முயற்சி. இதனைப் பத்தர்கள் அன்பினால் அடைவர். இதுபற்றியே, "அன்பினால் அடியேன் ஆவியோடு ஆக்கை ஆனந்தமாய்க் கசிந்துருக **என்பரம் அல்லா** இன்னருள் தந்தாய்" என்பர் மணிவாசகரும். இத்தகை அன்பு முத்தியினும் நிகழ்வதேயாகும். ஆதலால், அன்பும் சிவமும் ஒன்றேயாயிருத்தலை அநுபவமூலம் உணர்ந்து "அன்பே அன்பே" என்று அன்புநீர் பெருக அழுதழுது அரற்றவேண்டும். இங்ஙனம் அழ அழ அழுபவரும் **அன்பின் வண்ணத்த**ராகிவிடுவர். இந்த நிலையில் இவர்கள் பேய் பிடியுண்டவர்போலத் தம்மை முற்றும் மறப்பர். இதுவே அன்பால் தற்போதம் அழிதல் எனக் கூறப்படுவது. இந்த அன்பு நிலையே ஆனந்த நிலையாம். அன்பே இல்லாமல், தீர்த்தயாத்திரை செய்வதால் உடம்புதான் தூய்மையுறும். ஆன்மசுத்தி நிகழாது. அன்பில்லாத்

தியானம் உப்பில்லாக் கூழேபோல்வதாகும். அன் பற்ற அருச்சனைகள் மதியில்லாவானம் நிகர்க்கும் ஆனதுபற்றியே, "என்பேவிறகா இறைச்சி அறுத்-திட்டுப் – பொன்போற் கனலிற்பொரிய வறுப்பினும்– அன்போடுருகி அகங்குழைவார்க்கன்றி — என்பொன் மணியினை எய்தவொண்ணாதே" என மந்திரம் கூறுகின் றது. "தேசுற்றறிந்து செயலற்றிருந்திடில் — ஈசன் வந்தெம்மிடை ஈட்டி நின்றானே" என்னும் வரிகள் அறிவு கரைதலை அறிவிக்கும். அன்பின்முதிர்ச்சி, பிஞ்சுமுதிர்ந்து பழமாகி இனிப்பதுபோல்வதாகும். சாற்றும்பழம் என்பது இதனை உணரச்செய்யுமிடமாம். இதனால், பத்திப்பெருக்கத்தால் அருள் வயப்பட்டுத் தற்போதங்கரைந்து தன்னைமறந்து தலைவனைத் தலைப் படல்கூடும் என்பதை நாமறியலாம். ஆனால் எல் லோர்க்கும் இத்தகை அன்புளம் அமைவது எளிதன் றாம். இதற்கான மெய்த்தவத்து முதிர்ச்சி இந்நிலை கூட்டி இன்னிலை காட்டும் என்ப.

## செய்யுள் — 56

### யாவர்க்குமாவது ஞானயோகம்

**எல்லார் அறிவுகளின் தாற்பரியம் என்னறிவு**
**செல்லும் இடத்தளவும் சென்றறிந்தேன் — வல்லபடி**
**வாதனையை மாற்றும் வகையிதுவே மற்றவற்றுள்**
**ஏதமறக் கண்ட**

**கருத்துக்கள்**

1. பத்தி யாவர்க்கும் கூடுதல் அரிது,
2. ஞானயோகமே வாசனை தீர்த்து முத்திதருவது

3. பற்பல உபாயங்களின் கருத்தொருமை.

4. பிறசமயிகள் உரை மயக்கம்.

5. ஞானயோகமே இதமானது.

**விளக்கம்**

பக்தியோகத்தைப்பற்றி மாணுக்கருக்கு உபதேசித்த நம் நாயனுர் அஃதமைவதன் அருமையையும், இயல்பாகவே அஃது விளையுமென்பதையும், கண்ணப்ப நாயனுர், சேந்தனுர், மங்கையர்க்கரசியார் ஆகிய இம்மூவர் வரலாறுகளாலும் உணர்த்தினுர். இம்மூவரும் பிறருக்கே ஊட்டிவளர்க்க முயன்றனர் என்பதை நாம் உணரலாம். ஆகையால் பத்திநெறியை இயற்கை நிகழ்வுக்கு விட்டுவிட்டு, எடுத்த இப்பிறப்பிலே பிறப்பற்றிருத்தற்கு எல்லாரும் மேற்கொள்ளத் தக்கது ஞானயோகம் ஒன்றே எனவும் அதுவே படிப்படியாகப் பயிற்சியால் சாதிக்கத்தகுவது எனவும் இச்செய்யுளில் கூறலாயினர்.

அன்னமே பசியைப்போக்குவது. இதற்கு அமுதம் என்றும் பெயர். பசிப்பிணி மருந்தெனவும் இது பேசப்படும். இதனை உதவுபவனைப் **பசிப்பிணி மருத்துவன்** என்பர். இதுபோலவே ஆராத அமுதாவது ஞானம் ஆதலால், ஞானமே நன்மருந்தாம். இதனை ஆசாரியன் விளக்கிருன். ஆதலால் அவருக்குப் **பவப்பிணி மருத்துவர்** என்பது பெயராம். ஞானமின்றி முத்தி கிட்டாது. கண்இன்றிப் புறப்பொருளழகை ரசிக்க இயலாது. கைகளால் தடவிக் காண்டல் உண்மைகாண உதவாது. இந்த உண்மைகளை யெல்லாம் நம்மை ஆராயவிட்டுவிட்டால் சிரமப்

படுவோம். நுண்ணறிவின்மையால் உண்மை காணுமல் மயங்குவோம் ஆகையால், ஆசிரியர் தாமே பற்பல சமயப்பனுவல்களையும் ஆய்ந்து, தெளிந்து அனுபவித்து நமக்கு முடிந்த முடிபாக அறிவிக்கிருர். இம்முடிந்த முடிபே **சித்தாந்தம்** எனப்படுவது. இதனுலேயே, "**எல்லார் அறிவுகளின் தாற்பரியம் என் அறிவு செல்லும் இடத்தளவும் சென்றிருந்தேன்**" என்றுதாம் ஆராயாமற் கூறவில்லை என்கிருர். ஒன்றை உறுதியுறக் கூறுங்கால் ஞானிகள் இவ்வாறு கூறுதல் மரபு என்பதை "யாம் மெய்யாக் கண்டவற்றுள் இல்லை" எனத் திருவள்ளுவர் கூறுமுறைமையாற் காணலாம். நமக்கிருப்பது வாதனை. இதனை நீக்கவேண்டும். நமது நாதனை நம் நணுகல் வேண்டும். இதற்கு ஞானமே சிறந்த சாதனம். புலமையைப் புலமையால்தான் காண முடியும். அங்ஙனமே, ஞானமயமாயபொருளை அதுவே கருவியாகி உதவுவதால் அடையவேண்டும். ஆதலாலே, "**வல்லபடி வாதனையை மாற்றும் வகை இதுவே**" என அறுதியிட்டுபதேசித்துள்ளார். இந்த ஞானுனுபவம் இவ்வுண்மையையும், இதனுல்விளையும் ஆனந்தத்தையும் தரும். இதுவே எல்லாக் குற்றங்களையும் நீக்கும் முறைமை. இதனைச் சாதித்தலே தக்கது என்பார், "**மற்றவற்றுள் ஏதமறக்கண்டவிதம்**" எனக்கூறலானுர். இதுவே நன்மார்க்கம் என்பதை இதம் என்றசொல் விளக்குதல் காணலாம்.

---

## செய்யுள் — 57

### ஞான உபாயம் பெறுகை—நிற்கை

**வித்தும்அதன் அங்குரமும் போன்றிருக்கும் மெய்ஞ்ஞானம்**
**வித்தும்அதன் அங்குரமும் மெய்உணரில்—வித்ததனில்**
**காணமை யால்அதனைக் கைவிடுவர் கண்டவர்கள்**
**பேணமை யாலற்றார் பேறு.**

### கருத்துக்கள்

1. ஞானம் பெறுதல்.
2. ஞானத்தில் நிற்றல்.
3. ஞான முடிபினை எய்தல்.

### விளக்கம்

இச் செய்யுள்போன்ற கருத்துடையதே திரு வுந்தியாரில் **28-ஆம் பாடல்** இந்நூல் விளக்கத்தில் **சத்தியஞான அபேட்சை** என்ற தலைப்பின் கீழ் மேலுள்ள செய்யுட் கருத்து விளக்கப்பெற்றுள்ளது. மீண்டும் அதனை இங்குக் கூறுதல் விரிவு செய்யு மாதலின் ஆண்டே கண்ணுறுமாறு வேண்டுகை செய்து, இங்குப் பொழிப்பாக இப்பாடற் கருத்து தரப்படுகின்றது.

நெல் முதலான வித்துக்கள் யாவும், அங்குரிக்கும் போது முளையோடு இரண்டுபடாமல் அம் முளையளவும் வியாத்தமாகிப் பரிணமித்து வருகின்றன. இந்தப் பரிணமத்தையே பயனாகக் கருதுதலால் இதனை விரும்புபவர்கள் காத்திருப்பர். அங்ஙனம் இருப்- போர்க்குப் பரிணமம் முதிர்ந்தபோது முன் உள்ள

வித்து வெகுவிதமாகப் பலிக்கின்றது. அவர்கள் பசியைப் போக்கி இன்புறுத்துகின்றது. ஆதலால், வித்தினுற் பயன்கொள்ளக் கருதுபவன் வித்துப் பருத்ததுமே எடுத்துண்ணலாகாது. அது ஒன்று பலவாகப் பரிணமைப்படுமளவும் காத்தல் புரியவேண்டும். **அது போலவே,** வித்தாகிய சிவமும் ஆன்மாக்களுக்கு இருவினையொப்பும் மல பரிபாகமும் உண்டானதுமே கருணையையே திருமேனியாகக் கொண்டு வெளிப்பட்டுப் பக்குவான்மாக்களைத் தம்மை நேசிக்கும்படிச் செய்து, இவர்களிடம் அநாதியே தாம் உட்பொருளாயிருந்து நடத்திவரும் உண்மையை அறிவித்து இந்த உண்மைஞான சுகரூபத்தில் ஆன்மாக்களை நிற்கச் செய்து, இந்தச் சிவயோக நிலை முதிர்ந்ததும் தன்னுடைய பேரின்பத்தை இவர்கள் அநுபவித்துச் சம்பூரணத்தை அடையும்படி சிவபோகத்தைக் கொடுக்கும். இதனைத் தெரிவிப்பதே "**வித்தும் அதன் அங்குரமும் போன்றிருக்கும் மெய்ஞ்ஞானம்**" என்ற வாசகம். இங்ஙனம் வித்துப்போல்வதே **சிவம்** எனவும், அவ் வித்தின் முளைபோல்வதே **ஞானம்** எனவும் நாம் உணரக் கடமைப்பட்டுள்ளோம். இதனை, "**வித்தும் அதன் அங்குரமும் மெய் உணரில்**" என்ற வரிகள் உணர்த்துகின்றன. இவ்வாறன்றி, வித்துப் பயிரான மாத்திரத்தே அதனில் உடனே வித்திருக்கக் காணுமையால் இப்பயிர்களின் ஊடே வித்துப்பரிணமித்து அத்துவிதமாய் நிற்றலால் பரிணும முடிவிலே கதிராகப் பலிக்கும் என எண்ணுமல், அப்பயிரை முதிரவிடாமல் கைவிடுவர்சிலர். இவர்களைப் பவுத்தர் என்பர். இவர்கள், ஞானத்தில் நின்று சாதித்து ஞானமே

ஆகியும், இந்த ஞானத்தின் முதலாகிய சிவத்தினைக் கூடிப் பேரின்பத்தைப் பெறமாட்டாமல், ஞான தரிசன மொன்றையே பிறவிப்பயன் என எண்ணிச் சிவரூப உண்மையை அறியாமல் ஞானத்தையும் கைவிட்டுச் சிவபோகத்தை இழந்திடுவர். ஆதலின், இவர்கள் பாக்கிய ஈனர்களாவர். இதனை, **வித்து அதனில் காணுமையால் அதனைக்கைவிடுவர்''** என்ற இடம் உணர்த்தும். நெல்லு முதலியவற்றிலே அங்குரங்கள் உண்டெனவும் அவ்வங்குரங்களிலே வித்துக் கலந்து நிற்குமெனவும் அறிந்தவர்களும் கதிரை முதிரவிடாதே பிரயோசனங் கொள்ளாமல் பராமுக மாகப் பயிரைப் பேணுதொழிதலால் அதன் பயனைப் பிறர் அடையத் தாம் இழந்துவிடும் ஈனரேயாவர். இவ்வாறே, சிவனைத் தாரகமாதலொழிந்து ஞானம் பிரகாசியாது என அறிந்தவர்களும் அந்தஞானத்தைக் கைவிடாமல் நின்று, விசுவத்தைக் கைவிட்டு, அந்த ஞானமாகவே சாதித்து இந்த ஞானத்தின் ஐக்கியத் தாலே சிவனைப் பெற்றுப் பேரின்பம் அனுபவித்துத் திருப்தி அடையமாட்டாமல் வாதனையின் மிகுதியால் பராமுகமாய்த் தாம் பெற்ற ஞானத்தினைப் பின்பு அனுபவிக்கலாமென்று நித்தத்துவம் பெற்றிப்பாரைப் போல நெகிழ்ந்திருந்தவர்கள் தமக்குப் பேருன சிவபோகத்தை இழப்பர். ஆதலால் ஆன்மானந்த சுகமே சுகம் என்ற எண்ணமும் வண்ணமுடைய தாகாது. இதனுல் இத்தகைய தவம் தமக்குக்கிடைக்கப் பெற்றதே என்று செருக்கடையாமல் இடைவிடாமல் ஞானமாய் நின்றே சாதனைபுரிந்து ஞானத்தின் உறுதி யாலே ஞானமயமானதும் பலிக்கத்தக்கதான சிவபோகத்திலே அழுந்தி அனுபவித்தல் ஞானயோக

மாம். இவ்வுண்மையை, **கண்டவர்கள் பேணுமையா லற்ருர் பேறு** எனக்கூறித் தெருட்டியுள்ளார் ஆசிரியர். இக்கருத்தினைப் பின் உள்ள திருமந்திரமும் காட்டும்.

**வித்தினில் அன்றி முளையில்லை அம்முளை**
**வித்தினில் அன்றி வெளிப்படும் மாறில்லை**
**வித்தும் முளையும் உடனன்றி வேறில்லை**
**அத்தன்மை ஆகும் அரன்நெறி காணுமே.**

## செய்யுள் — 58

### சிவசொரூப ஞானம்

**ஒன்றன் றிரண்டன் றுளதன் றிலதன்று**
**நன்றன்று தீதன்று நானன்று—நின்ற**
**நிலையன்று நீயன்று நின்னறிவு மன்று**
**தலையன் றடியன்று தான்.**

### கருத்துக்கள்

1. சிவத்தின் சொரூப இயல்.
2. ஆராய்வுக்கு அப்பாற்பட்ட நிலை.

### விளக்கம்

தத்துவங்கள் யாவும் கரைந்தபிறகு உதிப்பதே சிவசொரூபம். ஆதலால் எல்லாப் பொருள்களும் தானேயாய் உள்ள ஒரே பொருள் எனப்படுவதன்று சிவம். இதனை **ஒன்று அன்று** என்பது காட்டும். பாசத்தைவிட்ட பசுவினுலே அடையப்பட்ட இரண்டொன்ரும் பொருளாம் சுட்டியறியப்படாத நிலை உடைமையாலே சிவம் இரண்டாயிருக்கும் பொருளும்

அன்று. **இரண்டன்று** என்ற இடம் இதனைக் குறிக்கும். மாற்றம் மனம்கடந்த பொருளாயிருப்பத ஞலே பிரத்தியக்ஷமாயிருப்பதும் அன்று. இதனை **உளதன்று** என்ருர். ஞானவான்களுக்கு ஞானயோக முதிர்ச்சியிலே இங்கேயும் பரமானந்தத்தைத் தளித் துதவுவதனுலே **இலது அன்று.** ஆன்ம போதம் ஒன்றை நன்றென்றும் தீதென்றும் கூறும். இப் பொருள் ஆன்மபோதம் ஒழிந்தபின் கூடும் பொருளா யிருத்தலால் சுட்டப்படுவதான **நன்றன்று தீதன்று.** பசுஞானம் நானே பிரமமெென அகங்கரிக்கச் செய்வ தாதலால் **நான் அன்று.** பாசத்தோடு அநாதி காலமாகக் கூடியிருக்கும் இந்த நிலையுமன்றென்பார் **நின்றநிலை அன்று** என்ருர். பசுஞானத்தையும் பாசஞானத்தையும் கொண்டது ஆன்மா. இதனுல் சுட்டுணர்வும் சிற் றுணர்வுமே உடையது ஆவி. ஆதலால் **நீ அன்று** எனப்பட்டது. இந்தஆன்மாவுக்கு அறிவாய் நிற்பதான ஞானமும் அன்று என்பதை **நின் அறிவும் அன்று** என்பதுணர்த்துவதாகும். ஆதலால் இப்பொருட்கு ஆதியும் இல்லை அந்தமும் இல்லை. " ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதி " என்பது திருவெம் பாவை. இதனுல் **தலை அன்று அடி அன்று தான்** என உணரல் தக்கதாம்.

---

## செய்யுள் — 59

**செய்யாச் செயலையவன் செய்யாமை கண்டுதனைச்**
**செய்யாச் செயலிற் செலுத்திஞல்—எய்யாதே**
**மாணவக ! அப்பொழுதே வாஞ்சைக் கொடிவளர்க்கும்**
**ஆணவமும் இத்தால் அறி.**

## கருத்துக்கள்

1. ஆன்மாவின் சுதந்தரமின்மை.
2 நிராலம்ப மாதல்.
3. ஆணவ மறுதல்.

## விளக்கம்

ஆன்மா பக்குவப்பட்டுவிட்டால் அதனிடத்திலே பரமானந்தம் விளைகிறது. இந்த இன்பம் ஆன்மாவே உண்டாக்கிக்கொண்டதன்று. சிவன் விகாரியாய் நின்றுகொடுத்ததும் ஆகாது. தற்போதம் ஒழிந்த நிலையிலே இவ்வின்பம் பிரகாசிக்கின்றது. ஆகையால் இந்தப் பேரானந்தம் உதித்தபொழுதே அதனைத் தனித்து நின்றறியாமல் அச் சுகரூபமாகவே நிற்க வேண்டும். அப்படி நின்றால் நினைவு அவிழ்ந்துபோம். இதுவே நிராலம்ப நிலை. இந்த நிலைதான் மூலமல நீக்கத்துக்கு வழி. ஆதலால், ஆசிரியர், **செய்யாச் செயலை அவன் செய்யாமை கண்டு, தன்னைச் செய்யாச் செயலில் செலுத்தினால்** என்று கூறியுள்ளார். இப்படி நிராலம்ப நிலை எய்தினால் அதுகாறும் நினைவின் வடிவாய் நின்று ஆசையாகிய கொடிகளைப் படரவிட்டுக்கொண்டிருந்த மூலமலம் எனப்படும் ஆணவம் வேரற்றுவிடும் இதன் வளர்ச்சிக்கான போதம் அற்றுவிட்டமையே இதற்குக் காரணமாம். ஆதலால் உளம் இறந்த நிலையை நாமடைவதே சாலும். இதற்கென வேறு பெருமுயற்சி தேவையில்லை. இதனால் நாம் ஆணவ நோய்க்கு அஞ்சவேண்டுவ-தில்லை. " அஞ்சுவதுமில்லை : அஞ்ச வருவதுமில்லை " என நிற்கலாம். இத் தன்மையை, **"வாஞ்சைக் கொடி**

வளர்க்கும் ஆணவமும் அப்பொழுதே எய்யாதே" என்று கூறிக் காட்டினர் ஆசிரியர். மாணவக! என்றமையால் ஆசாரியன் சொல்வழி நிற்றலொன்றே செய்யத் தக்கதென்பதும், அதனில் ஆராய்ச்சி நிகழ்த்துதல் தகாது எனவும் நாமறியலாம். இத்தால் அறி என்றமையால் தமது அநுபவ சித்தி கண்டு தெளிதல் கூடும் என்பதுணர்த்தப்பட்டது. இதனுல் பிறப்பு இறப்புக் காரணமான மலம் நீக்கமடைதல் இக்கப்பட்டதென்னலாம்.

## செய்யுள் — 60

### நியம மின்மை

**ஏதேனும் காலமுமாம் ஏதேனும் தேசமுமாம்**
**ஏதேனும் திக்கா சனமுமாம்—ஏதேனும்**
**செய்வா னொருவனுமாம் செய்யாச் செயலதனைச்**
**செய்யாமை செய்யும் பொழுது.**

**கருத்து**

காலம் முதலியன கருதப்படாமை.

**விளக்கம்**

கிணற்றில் தவறிவிட்டு விழுந்தவனைத் தூக்கி விடுவதற்கு நல்ல நாள் எது என்று பார்க்கமாட்டோம். அரசனுணையாலே வேற்றிட மாற்றப்பட்டானும் புறப்பட நாள்பார்த்தல் இயலாது. வேண்டாத் திசைக்குச் செல்லும்படி ராஜா உத்தரவு இருந்தால் சூலம் பார்த்தற்கு இயலாது. இவ்வாறே, பிறப்

பிறப்பில் அழுந்திவிட்டோமே என்ற கிலேசமிகப் பெற்றுச் சிவாக்ஞையாகிய ஞானநெறியிலே ஒழுகப் பெறுமவனுக்குக் காலம், தேசம், திக்கு, ஆசனம், தொழில் ஆகிய இவற்றில் இன்னது தேவை இன்னது ஆகாது என்று பார்த்துக் காலம் போக்குகை வேண்டாவாம். சிவனருளே இவற்கு உடனிருந்து யாவற்றையும் அநுகூலப்படுத்துவதால் இவன் ஞான மார்க்கத்தில் அடிவைத்தலே அமையும். ஞானநெறி இங்குச் **செய்யாச் செயல்** எனப்பட்டது. இது தன்னிலே பக்குவத்தால் அமைவவாதலின், அதனை மேற்கொண்டு அவ்வழி நிற்றல் **செய்யாமை செய்தலாம்**. அதாவது செய்கிறேமென்ற நினைவுமற நிற்றலாகும் "வேயுறு தோளிபங்கன்" திருப் பாட்டும் ஞானநெறி நிற்பார்க்கு நியமம் முதலிய கட்டுப்பாடு தேவையின்மை தெரிவிக்கும். **செய்யும் பொழுது** என்றமையால் மற்றைப் பொழுதில் கால மாதிய நியமங்கள் கணிக்கப்படும் என்பது பெற்றும். இதனால் சிவத்தினது திருவுள்ளமே யாவுங் கூட்டு விக்கும் என நாம் தெளிந்து சன்மார்க்கத்தில் இழிய வேண்டும் என்றல் ஒருதலை.

---

## செய்யுள் — 61

## சிவயோகத்து எளிமையும் பெருமையும்

**செய்தற் கரிய செயல் பலவும் செய்துசில**
**செய்தற் கரியதனை எய்தினர்கள்—ஐயோநாம்**
**செய்யாமை செய்து செயலறுக்க லாயிருக்கச்**
**செய்யாமை செய்யாத வாறு.**

## கருத்தும் விளக்கமும்

சிவபோகம் மேலானது. தன்னின் மேலான தில்லாதது. இதனை உணர்ந்த சிலர் சிவத்தைக் குறித்துத் தங்கள் உடம்பையும் உள்ளத்தையும் வாட்டிச் செயற்கரும் செய்கைகளைப் புரிந்து—வல்வினைகளை ஆற்றி—அடைதற்கருமையான பேற்றினை அடைந்தனர் இதனை இப் பாடலின் **முதலிரண்டடிகள்** உணர்த்துவனவாம்.

நம்மால் அத்தகைய வினைகளைச் செய்தற்கியலாது. என்றாலும் அதனால் நாம் பெறுதற்கரிய பேற்றினை இழக்கவேண்டுவதில்லை. ஆனால் இந்த ஞானயோக நெறியிலே நின்றால் போதுமானது. இந் நெறியில் செய்யவேண்டிய செய்கைகள் ஏதும் இல்லை. ஒன்றும் செய்யாமையே இதற்குரியது. ஆதலால் விகற்பம் ஒழிந்து நிர்விகாரமான சுபாவத்தைப் பொருந்திச் சுகதுக்கங்களில் மொத்துண்டாமல் பிறப் பிறப்புகளை வேரறுத்துவிடலாம். "நடுங்கோள் மனத்தை: விடுங்கோள் வெகுளியை: தானம் என்றும் இடுங்கோள் **இருந்தபடி இருங்கோள்;** கொடுங்கோபச் சூருடன் குன்றம் திறக்கத் துளைத்த **வைவேல் விடுங்கோன் அருள் வந்து தானே உமக்கு** வாய்த்திடுமே" என்ற அருணகிரியார் உபதேயமும் இதனைப் புலப்படுத்தும் பான்மையது. ஆதலால் இருந்தபடி இருத்தலாகிய இந்த எளிய ஞான யோகத்தை நாம் புரியாது பாழ்போவது வருந்தத் தக்கது. இதனை உணர்த்துதற்கே, "**ஐயோ! நாம் செய்யாமை செய்து செயலறுக்க லாயிருக்கச் செய்யாமை செய்யாத ஆறு (என்னே)** என்று

இவ்வாசிரியர் இங்ஙனம் கூறியுள்ளார். **ஐயோ** என்ற சொல் நம்மீது ஆசிரியர்க்குள்ள இரக்கம் புலப்படுத்தி நிற்கின்றது. எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகுதல் இவர்தம் இயல்பாகும். சும்மா இருந்து சுகமெய்துதற்கு மாந்தர் சற்றும் கருதாமல் ஆலைவாய்க் கரும்புபோலும், அலைவாய்த் துரும்புபோலும் அல்லற்பட்டு வறிதே மாள்வதும் மீள்வதும் குறித்து இங்ஙனம் இரங்கிக் கூறியமை இவ்வாசிரியரது செந்தண்மை காட்டா நிற்கின்றது என்க. உபாயமாதலின் எளிய முறைப்படுத்திக் கூறியுள்ள திறம் போற்றற்குரித்தாம்.

## செய்யுள் — 62

### பக்குவரல்லாதார் செயல்கண்டு பரிவது

**இப்பொருள்கள் யாதேனும் ஏதெனினும் ஒன்றுசெய்தல்**
**எப்பொருளும் செய்யா தொழிந்திருத்தல்—மெய்ப்பொருளைக்**
**கண்டிருத்தல் செய்யாதே கண்ட மனிதரெல்லாம்**
**உண்டிருப்ப தென்னே உரை.**

### கருத்துக்கள்

1. ஞானபக்குவம் அடையும் நிலைகள்.
2. ஞான நிலை.
3. உலகர் நிலை.

### விளக்கம்

உலகமக்கள் யாவரும் பேரின்பநிலை பெறுதற்கு உரிமை உடையவர் ஆவர். இந்த உரிமையைக்

காட்டுவதே மனிதஉடம்பு. இவ்வுரிமை பெற்ற நாம், வந்த வேலையைச்செய்து பலனை அடைதலே முறை. வந்த காரியத்தைப் பாராமல் அதற்குமாறான வேறு வேலையைப் பார்த்தலால் பேரின்பத்துக்கு மாறான அற்பபோகங்களையும் சிலவேளை பெருந் துக்கங்களையும் அடைய நேரிடுகிறது. "கருமமே கண்ணாயினார்" என்ற சொல்லும் காரியத்திற் கருத்திருக்கவேண்டும் என்பதை நினைவூட்டுவதே. இங்ஙனம் ஆன்மாக்கள் தாம் தம் நன்மைக்கே உரிய காரியங்களைச் செய்யாமல் தமக்கே துன்புதரும் காரியங்களைச் செய்து அவத்தைப் படுதலை ஞானிகள் காணநேரில் வருந்துவர். இங்ஙனம் செய்தல், பிறர் பேதைமைகண்டு இரக்கத்தால் வருந்துதல் எனப்படும். ஆதலால் மானிடர்கள், இப்பிறப்பில் நற்கருமங்களைப் புரிந்து தவப்பயனெய்தி ஏற்ற தீக்ஷைகள் பெற்றுச் சரியையாவது, கிரியையாவது, வல்வினையையாவது, ஆதாரயோகமாவது, ஒன்றை முறைப்படி புரிதல் வேண்டும். இதனை, **இப்பொருள்கள் யாதேனும் ஏதேனினும் ஒன்று செய்தல்** என்ற இடம் புலப்படுத்தும். இதுகாறும் ஆன்போதம் தூநெறிப்படுதல் கொண்டு செய்யப்படு-மவற்றைக் கூறிவிட்டுப் பின்னர் ஆன்மாக்கள் ஒன்றையும் செய்யாதிருத்தலாகிய நிராதார யோகத்தைச் செய்ய வேண்டும் என்பார், **எப்பொருளும் செய்யா தொழிந் திருத்தல்** எனலானார். இதன் பின்னர் சிவாதார உண்மை புலப்படும். இந்த உண்மையான பொருள் நிற்கின்ற முறைமையை அறிந்து, தானும் அந்த உண்மையில் முறைமையாகப் பார்த்துக் **கூடி யிருத்தல்** வேண்டும். இங்ஙனம் செய்யமாட்டாத வரை இவ்வாசிரியர், **மெய்ப் பொருளைக் கண்டிருத்தல்**

**செய்யாதே கண்ட மாந்தர் எல்லாம்** எனக்குறிக்கின்றார். ஆகையால், இத்தகையர் இவ்வுலகிற் பிறந்து உண்டு வாழ்தல் வீணும் எனத் தெரிவித்தற்பொருட்டு இரக்கத்தோடு "**உண்டு இருப்பது என்னே**" எனக் கூறி அங்கலாய்க்கின்றார். "தொண்டு பூண்டு அமுதமுண்ணுத் தொழும்பர் சோறுகக்கும் ஆறே" எனப் பிற பெரியார்களும் இவ்வாறுரைத்தல் காணலாம். மானிடர்கள் பெறுதற்கரிய சிவபோகப் பேற்றினைப் பெறமுயலாமல், தாம்தாம் பெற்ற தேகங்களையும் அர்த்தங்களையுமே நிலையென மருண்டு கருதி இதாகித பலன்களைப்புசித்து அஞ்ஞானமாய்ப் போதலும் சாதலும் என்னகாரணமோ எனக் கேட்டுத் தம் மாணுக்கரையும் தம் கருத்துக்கு உடன்பட வைப்பாராகி **உரை** என்றார். ஆகவே பிறப்பற முயலாதார் அறப்பெரும் பேதையர் ஆவர் என நாம் தெளிதல் ஒள்ளிது.

## செய்யுள் — 63

### கர்த்தாவின் வழிநிற்றல்

**வீட்டிலே சென்று வினையொழிந்து நின்றிடிலென்**
**நாட்டிலே நல்வினைகள் செய்திடிலென்—கூட்டில்வாள்**
**சாத்தியே நின்றிலையேல் தக்கனர் வேள்விசெய்த**
**மாத்திரமே யாம்கண்டாய் வந்து.**

**கருத்துக்கள்**

1. இல்லற நெறி பயனளியாமை.
2. துறவற நெறி பயனறுதல்.
3. ஞான நன்னெறி நிற்றல்.
4. கருத்தா வழிநில்லாத தக்கன் கேடு.

**விளக்கம்**

மக்களிற் பெரும்பாலார் இல்லற நெறி நிற்பவர் ஆவர். இவர்களும் இவ்வில்லறத்தில் இருந்து கொண்டே ஞானநெறியினை மேற்கொண்டொழுக வேண்டும். ஞானநெறி என்பது மேலே சொன்ன விவரங்களுடையதாம். இதனை நீதி நூலில் **அறத்தாறு** என்பர். இல்லறமாயினும், துறவறமாயினும் அதனில் ஞானமார்க்க சீலமே இன்றியமையாததென்பதை உணர்த்துதற்பொருட்டே இல் **அறம்** எனவும் துறவு **அறம்** எனவும் அறத்தாறு குறிக்கும் சொல் சேர்க்கப் பட்டுள்ளது. இதுபற்றியே "**அறத்தாற்றின்** இல்வாழ்க்கை **ஆற்றின்** புறத்தாற்றின் போஒய்ப் பெறுவது எவன்" என்றுள்ளார் வள்ளுவனாரும். ஆகையால் மனைவி, மக்கள், நண்பர் முதலியவர்கள் வழிநில்லாமல் பற்றின்றிக் கருத்தாவழி நிற்றலே சரியான இல்லறமார்க்கமாகுமென நாமறியவேண்டும். மற்றும், இல்லறத்தை நீத்துத் துறவு மேற்கொண்டு மேற்கூறியவர்களையும் தொழில்களையும் கைவிட்டுக் காட்டிலே வாழ்ந்தாலும், தன் வழியே ஒழுகி கர்த்தாவழி ஒழுகாமற்போனால் அத் துறவு பயனற்றதே யாகும். பிறரை வெட்டி வீழ்த்தும் வாளாயுதம் செயல் மடங்கி அமைதியுற்றிருக்கவேண்டுமாயின் கூட்டுக்குள் புகுந்து அடங்கி நிற்கவேண்டும். கூட்டைவிட்டு வெளியே உருவப்படுமாயின் அதனிடம் அமைதிச்செயல் தங்காது. சினச்செயலே செறியும். இவ்வாறே ஞானநெறியில் நிற்போர் சிவ சைதன்னியத்துக்குள் தம் சைதன்யம் அடங்கி நிற்கப் பெறவேண்டும். வாட்படையைத் தன்னுள் அடக்கிக் கொண்டிருப்பது அதன் கூடு. அவ்வாறே சிவசைதன்ய

பரிபூரணம் ஆன்ம சைதன்யத்தை அடக்கி நிற்கப் பழகவேண்டும். கூடு, தன்னுட்பட்ட வாட் படையின் மறத்தன்மையைப் போக்கித் தன்னுடைய அறச் செயலுக்குட்படுத்து நிற்றல் நாமறிவோம். அங்ஙனமே சிவசைதன்யமும் புரிவதே "கருத்தாவழி நிற்றல்" ஆகும். இதனால் தனக்கென ஒரு செயலு மின்றி நீர்வழிப்படும் புணைபோல் வாழ்வதே ஞான மார்க்கமாகும். இப்பயிற்சியால் சிவத்தையே ஆண்டானாகக் கொண்டு ஆன்மா அடிப்பட்டுக் கிடத்தல் ஏற்படும். இதுவே துன்பமற்றநிலையாம். இது பற்றியே, **கூட்டில் வாள் சாத்தியே நின்றிலை யேல் வீட்டிலே சென்று வினை ஒழிந்து நின்றிடில் என்? நாட்டிலே நல்வினைகள் செய்திடில் என்?** என்று கூறியுள்ளார் நம் ஆசிரியர்.

தக்ஷன் என்பான் தான் புரிந்த வேள்வியில் எல்லாத் தேவர்க்கும் அவியளித்தான். சிவனைக் கருதினானலன். அதாவது சிவம் எத்தேவரினும் மேலான பொருள் என எண்ணிலன். ஏனையதேவருள் ஒருவராகவே கருதியமையால் அவரையின்றியே வேள்வியை முடித்தலுறும்போது அவ்வேள்வி அவற்குப் பயனளியாது தீங்கே தந்தது. தீங்குகள் வெளிப்படை. சிவத்தைப் பொது நீக்கிச் சிறப்பாகக் கருதி வேள்வியை ஆற்றியிருப்பின் நற்பயன் விளைந் திருக்கும். "பொது நீக்கித் தனை நினைய வல்லார்க்கு என்றும் அருந்துணை ஆவன் பரமன். செய்யப்பட்ட நற்கருமம் வேள்வி. செய்தவனே சிறப்புள்ள தக்கன். துணைநின்றோர் தேவர் பலர். எல்லாம் அமைந்தும் சிவத்தின் துணையைத் தக்கன் கருதா (அப்பரமன் வழிநில்லாத) ஒரு குறையே அவனையும்,

ஏனைத் தேவரையும், அவன் வேள்வியையும் பயன் கொள்ளவொட்டாமற் செய்துவிட்டது. புறத்தே நிகழ்ந்த இச் செயலே அகச் செயலாம் ஞான மார்க்கத்துக்கும் ஏற்ற சான்றாயிருத்தல்பற்றி, "**நக்கனார் வேள்வி செய்த மாத்திரமே ஆம் கண்டாய் வந்து**" என்று கூறிக் காட்டினார் ஆசிரியர். இதில் கருத்தாவழி நிற்கப்பெறாத மடமை தக்கனிடம் இருந்ததை நமக்குத் தெரிவிக்கும்பொருட்டே **நக்கனார்** எனக் கூறியுள்ளார். இவ்வுயர்வு உண்மையில் இழிபே குறிப்பதாம். தீயவழுக்கியும் வாயாற்சொலல் பெரியோர்க்கு இயல்பன்றென்பதும் இதனாலறியலாம்.

---

## செய்யுள் — 64

### செயலறநிற்கும் சாதனை

**சிவன்முதலே அன்றி முதலில்லை என்றும்**
**சிவனுடைய தென்னறிவ தென்றும் — சிவனவன(து)**
**என்செயல தாகின்ற தென்றும் இவையிற்றைத்**
**தன்செயலாக் கொள்ளாமை தான்.**

**கருத்துக்கள்**

1. சிவனே முதல்.
2. சிவ சைதன்யமே பூரணம்.
3. எல்லாம் சிவன் செயல்.
4. நம் செயலாவது இல்லை.

**விளக்கம்**

ஞான நெறியில் நின்றாலல்லது பிறவியறாது. ஞானநெறி நிற்பாருக்கு மூன்று முக்கிய இயல்புகள் இன்றியமையாதன. அவை,

1. நித்தனாகியும், சுத்தனாகியும், எப்பொருட்கும் தாரகனாகியும், கிருத்தியகாரணனாகியும், கைவல்யத்-தியாகியுமாகி எங்குமாகி நிற்கின்ற சிவன் அல்லது வேறு 'நான்' என ஒருமுதல் இல்லை என்ற உறுதி யான எண்ணம்.

2. ஆன்மாக்கள் எதனை அறியினும், கண்ணொளிக்குள் ஆன்மபோதம்போல நின்று யாவற்றையும் அறிவது சிவனறிவேயாம் என்கிற அறிவு.

3. ஆன்மாக்கள் புரியும் எச்செயல்களும் சிவன் செயலே என்ற கருத்து — ஆகிய இவைமூன்றும் ஆம். இதனால் நான்என்ற முதலின்மையும், எல்லாம் அவனறிவேயாதலும், எல்லாம் அவன்செயலேயாவதும் கருதித் தன்னை அவனுக்குட்படுத்தியும், தன்னறிவை, அவனறிவுளடங்கச் செய்தும், தன் செயலாக எதனையும் செய்யாமையும் ஞானசாதனையாம். இங்ஙனம், நினைப்பன, சொல்வன, செய்வன இவற்றைக்கருத்தாவின் செயலென்றே கருதித் தான்அற நின்றவர்கள் அந்தப் பொருளாகியே தீர்வர். இப்பெத்த நிலையில் சிவம்தன்னைக்காட்டாது நம்முள்ளிருக்குமாறே நாமும் இப்பெத்த நிலையிலேயே அவனுள் நம்மைக்காட்டாது நின்றொழுகலே தலைமையான மார்க்கமாம்.

---

## செய்யுள் — 65

### சைவ சித்தாந்தச் சிறப்பு

**இன்றிச் சமயத்தி னல்லதுமற் றேழையுடன்**
**ஒன்றுசொலி மன்றத்து நின்றவரார்—இன்றிங்கே**
**அங்கம் உயிர்பெறவே பாடும் அடியவரார்**
**எங்குமிலை கண்டாய் இது.**

**கருத்துக்கள்**

1. சிவம் காட்டும் உண்மை.
2. அடியார் அவ்வழி ஆற்றல்.

**விளக்கம்**

ஒன்றை உறுதியாய்க் கூறுபவர் **மன்றத்தே** நின்று கூறுவர். இதனால் அது உண்மையெனப்படும். தானும் தன் மனைவியுமாய்க் கூறுதல் மேலும் உறுதி யாகும். " மையறு சிறப்பின்மிக்க **மனையவள் தன்னைப்பற்றி** மொய்யலர் வாவிபுக்கு மூழ்குவாய் " எனச் சிவபெருமான் திருநீலகண்ட நாயனாரை உத்தர விடுதலால் இச் செய்தியை உணரலாம். ஒருநாள் கூறிப் பின்னர் மறைந்திடாதிருத்தல் அவ்வுண்மையின் மேற்பட்ட உண்மை இல்லை என்பதைக் காட்டும். இந்த முறையிலே சிவபெருமான் **ஞான சத்தியுடனே திரு அம்பலத்தே** என்றும் **எழுந்தருளியிருந்து** ஆனந்த நிருத்தம் செய்தருளித் தன் மெய்யடியார்கட்கு எடுத் தருளிய **ஸ்ரீபாதமேரக்ஷை** என்பதைத் திருக்கரத்தாலே காட்டியருளி (மோனத்தால் மொழிந்து) திருக்கண் சாத்தியருளியாவருங் காண நிற்பதுபோல வேறெச் சமயத்தும் இல்லை. இதுவே **பரமஞான உபதேச** மெனப்படும் இது **சைவ சித்தாந்தத்தே** நிகழ்வது. ஆதலால் பலரும் ஏற்ப ஒப்பற்ற உண்மையை மன்றி லேறிக் கூறும் இச் சமயமே உண்மையான **ஞான சமயம்** ஆகும். இதனைக் கர்த்தாவின் செயல்கொண்டு நாம் துணிதல் தக்கதாகும். இதனையே, **இன்று இச் சமயத்தின் அல்லது மற்றேழையுடன் ஒன்று சொல்லி மன்றத்து நின்றவர் ஆர்** என்று கட்டுரைத்துக்

காட்டியுள்ளார் ஆசிரியர். ஆகையால், யாவரும் இச் சன்மார்க்க நெறி நிற்றலே தக்க செயலாமென்க.

இனி, இக் கருத்தாவின் செயல்வழியே ஒழுகிக் காட்டிய சம்பந்தப் பெருமாள் நாயனார் செய லொன்றையும் சான்றாக நமக்குக் காட்டியுள்ளார் ஆசிரியர். நம் நாளிலே நாம் வாழும் இந்த நாட்டிலே இச் சித்தாந்த சைவசமய நெறியிலே நின்று கர்த்தா வழி நிற்றலே மெய்ஞ்ஞானமென்பதை அறிவித்தற் கருதி அமுது ஞானமுதமாகிய திருமுலைப்பாலை அமுது செய்து இப் பெருமையையே துணையாகக் கொண்டு நீண்டகாலம் எலும்பாகக் கிடந்ததை முன்புபோலப் பிராணன் பெறச் செய்தனர். உள்ள வயதும் உற்றெழச் செய்தனர். அங்ஙனம் எழுப்பப்பட்ட **பூம்பாவையார்** சித்துச் செய்கைபோன்று மறைந்தா ரிலர். பின்னரும் வாழ்ந்து அரும்பதம் அடைந்தனர். இங்ஙனம் பலரறியச் செய்தமை தமக்கொரு பெருமை கருதிச் செய்யப்பட்டதன்றாம். பெருமான் பெருமையே இவரால் கருதிச் செய்யப்பட்டது. இதுபற்றியே சேக்கிழாரடிகளும் "மட்குடத்தைக் கண்டு **தம்பிரான் கருணையின் பெருமையே கருதி**" எனவும், "மன்னுவார் சடையாரை முன்தொழுது" எனவும் உரைத்துக் காட்டியுள்ளார். இதனால் நாயனார் நம்பனார் கருத்துவழியே ஒழுகலாற்றிக் காட்டிய திறத்தினை நாம் அறிதல் கூடும். இங்ஙனமாய நிகழ்ச்சி பிற சமயத்திலது. ஆதலால், ஆசிரியர் "**இன்று இங்கே அங்கம் உயிர்பெறவே பாடும் அடியவர் ஆர் ? எங்குமில்லை ; கண்டாய் இது**" எனச் சாற்றியருளலானார். இதனைப் பின் உள்ள திருமந்திர மாலையானும் உணரலாகும்.

**தன்னைப்** பரனைச் சதாசிவம் என்கின்ற
மன்னைப் பதிபசு பாசத்தை மாசற
முன்னைப் பழமல மூலத் **தைவிட்(டு)**
**உன்னத் தகும் சுத்தசைவர்** உபாயமே.

குருவருளால் சிவஞானத்தைக் கொண்டு அவ்வழி ஒழுகலே சுத்தாத்துவித சித்தாந்த சைவ உபாயமாம் என்க!

## செய்யுள் — 66

### சிவஞானிகள் பெருமை

**விரிந்தும் குவிந்தும் விழுங்குவர்கள் மீண்டும்**
**தெரிந்தும் தெரியாது நிற்பர் — தெரிந்தும்**
**தெரியாது நிற்கின்ற சேயிழைபால் என்றும்**
**பிரியாது நின்றவனைப் பெற்று.**

### கருத்துக்கள்

1. அருளிற்பிரியாச் சிவம்.
2. சிவஞானிகளின் ஒருதன்மைத்தாம்நிலை.

### விளக்கம்

சிவனது ஞானசத்தியால் ஆன்மாக்கள் நடத்தப் படுகின்றன. இந்தச் சத்தி எல்லாவற்றையும் அறிந்தும் அறிவித்தும் நடத்துவது. தாமரைப்போதினைப் பக்குவப்படுத்தியும், மலர்த்தியும், தீய்த்தும் சூரியன் செய்வதுபோல் காணப்படினும், அவனது சந்நிதி மாத்திரை இங்ஙனம் நிகழ்த்துவதால், சூரியன் விகார முறுதல் இலன். அங்ஙனமே சிவனது ஞானசத்தியும்

விகாரமடைதல்இல்லை. இந்தச் சத்தியோடுவிட்டு நீங்காநிலையினன் சிவம். இத்தகைய சிவத்தினை எய்தப் பெற்றவரே சிவஞானிகள். ஞானத்திற் பிரியாத சிவத்தைத் தாமும் பிரியாதிருத்தலின் இப்பெயரா லழைக்கப்படுவாராயினர். இத்தகையவர்கள் சிவத் தினை ஒருபோதும் மறவார். அதாவது, எந்த நிலையி னும் சிவசிந்தனையோடே இருப்பர்ஆவர். தம்மிடம் பிராணனுய் இச்சிவரூபம் நிற்றலை இவர்கள் உணர்ந் தவர்கள். இங்ஙனமே வெளியிடத்தும் சிவம் நிற்கின்றதென்பதை இவர்கள் கண்டவராவர். இங்ஙனம் உள்ளும் புறம்பும் சிவமே வியாபித்து நிற்றலைக் காண் டலால் சிவபோகத்தை இவர்கள் எய்தியவராவர். சிவ போகத்தை அனுபவிப்போர்க்கு அவ்வனுபவம் தம்மையும், பிரபஞ்சத்தையும் அந்தப்பொருளையும் மறந்து சுபாவத்தில் அழுந்தி அனுபவிக்கச் செய்யும். இதனை நம் நாயனுர், **விரிந்தும் குவிந்தும் விழுங்குவர்கள்;** என்றுர்.

இங்ஙனம் இவர்கள் யாவற்றையும் மறந்து அநுபவ நிலையிலிருக்குங்காலத்தும் அவர்களுடைய பிராரத்துவத்திளுலே திரும்பவும் பிரபஞ்ச வாசனைத் தாக்குத லுக்கு உள்ளாகவேண்டிவரும். இந்த வேளையில் இவர்கள் மிகவும் எச்சரிப்பாயிருந்து சிவசொரூப ஐக்கியத்திளுலே இப்பிரபஞ்ச நீதியை அறியமாட் டார்கள். கண்ணை மூடி இருப்பவனுக்கு எப் பொருளும் அருகில் இருப்பினும், அறியவாராது. இதனையே, **மீண்டும் தெரிந்தும் தெரியாது நிற்பர்** என்றுர். இதனுல் சிவஞானிகட்கு ஒடுக்கத்திலும், விரிவிலும், திருவிலும் இங்ஙனம் சொரூப ஐக்கியப் பட்டு நிற்றலையன்றிப் பிரபஞ்சப் பழக்கம் ஒரு சிறிதும் கூடாதென நாம் கருதலாம்.

## செய்யுள் — 67

### திரோதாயி நீக்கம்

ஆதனமும் ஆதனியும் ஆய்நிறைந்து நின்றவனைச்
சேதனனைக் கொண்டே தெளிவுற்றுச்—சேதனனைச்
சேதனனி லேசெலுத்திச் சிற்பரத்த ராயிருப்பர்
ஏதமறக் கண்டவர்கள் இன்று.

**கருத்துக்கள்**

1. தத்துவ ஆத்மத் தொடர்பு.
2. சைதன்ய சொரூப நிலை.
3. ஆசாரியனுதவி.
4. சைதன்யக் கரைவு,
5. திரோதாயி நீக்கம்.

**விளக்கம்**

ஆத்மா தனித்து நில்லாது. எப்போதும் இறைவனைத் தாரகமாகக்கொண்டிருப்பினும் பாசத்துட்பட்டிருக்கையில் தத்துவங்களையே தன் இருக்கையாகக் கொண்டுள்ளது. ஆகவே தத்துவங்கள் ஆத்மாவுக்கு ஆசனம்போல் உதவுகின்றன. உடம்பு ஆதனத்தின்மீது தானாக அமராது. அதனை இடமாகக் கொண்ட உயிர் அவ்வுடம்பினை அங்ஙனம் அமர்த்தி வைக்கிறது. சவத்தை இருக்கவைக்குங்கால் உயிருடையோர் அதனைப்பற்றி நிற்கவேண்டியுள்ளமை காணலாம். இங்ஙனமே தத்துவாதனத்தின்மீது தக்கவாறு ஆன்மாவினை அமர்த்திப் பிடிப்பது சிவம். எனவே, சிவமானது ஆன்மாவினை ஆதனமாகக் கொண்டு ஆன்மாவினையும் தத்துவங்களையும் (தத்துவக்

களைவறிவு தோன்றுகைக்காக) இணைத்துதவுகின்றது. இவ்வாறு அநாதியே பொருந்தி அவையே ஆகியும், தானே ஆகியும், அவையே தானே ஆகியும் நிற்கின்ற சைதன்யமே சிவ சொரூபம். இச் சிவத்தின் திருவருளினலே அந்தச் சைதன்யமே திருமேனியாகக்கொண்டு எழுந்தருளுகின்றான் ஆசாரியன். அங்ஙனம் எழுந்தருளி உபகரிக்கும் ஆசாரியனைக்கொண்டே உண்மையினைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிகிறோம். தெளிந்தபின் அவ்வழியே நிட்டை கூடுதல்வேண்டும். அதாவது, அந்தச் சைதன்ய சொரூபராய் நிற்கின்ற தம்மையும் அந்தச் சைதன்யத்தோடு கரையும்படி செய்ய வேண்டும். சிவசைதன்ய வியாபகத்திலே நாம் அடங்கி விடவேண்டும். "உங்கையிற் பிள்ளை உமக்கே அடைக்கலம்" என்ற நிலை இதுவாம். தம்மைச் சிவன்கையிலே கொடுத்துவிடுவர். இந்த நிலையில் **திரோதானசத்தி** நிகழ்கின்றது. அருட்சத்தியாலே ஞானத்துக்கு மேலாகிய அந்தச் **சிவமாகியே** இருப்பர். இந்தச் சாதனை என்று கூடுகிறதோ அன்றைக்கே இந்த நிலையும் கூடுகின்றது. இவர்களைச் சிவனை மணந்த கலியாணர்கள் என்பர். "இன்றோர் இடுக்கண் எனக்கு உண்டோ" என்றிருக்கும் கவலையற்ற பெருநிலை இதுவாம்.

---

## செய்யுள் — 68

### சிவஞானிகளின் இருவகை நிலை

**தாமடங்க இந்தத் தலமடங்கும் தாபதர்கள்**
**தாமுணரில் இந்தத் தலமுணரும்—தாமுனியில்**
**பூமடந்தை தங்காள் புகழ்மடந்தை போயகலும்**
**நாமடந்தை நில்லாள் நயந்து.**

**கருத்துக்கள்**

1. தாபதர்களின் ஒடுக்கமும் விழிப்பும்.
2. தாபதர் சாபம் தடுத்தல் அருமை.

**விளக்கம்**

சிவஞானிகள் குணமென்னும் குன்றேறி நிற்பாராவர். அதாவது, ஞானத்திலே நின்று சாதித்தவர்கள் அந்த ஞானமயமாகிய சிவத்தைப்பெற்று அச் சிவனிடத்திலே ஒடுங்கிநிற்பர். இங்ஙனம் இவர்கள் நிற்கையில் இவர்கள் ஞானமும் ஒக்க ஒடுங்கிநிற்பர். ஆகவே இவர்கள்தாமென — சிவமென வேறுபட்டிரார். இங்ஙனம் நிற்றலே குணக்குன்றிவர்ந்து நிற்குந்நிலையாம். இதற்குமேல் இவர்கள் தேகநீக்கம் அடைதலொன்றே அன்றி ஏறவேண்டியநிலை ஏதுமிலது. மலைமேலுள்ள சிகரத்தை அடைந்தவன் அதன்மேலும் ஏறவேண்டிய இடமிலை. இதனை நம் ஆசிரியர், "**தாமடங்க இந்தத் தலமடங்கும்**" எனக்கூறிக் காட்டியுள்ளார். இதுவே தாபதரின் ஒடுக்கநிலை எனப்படும். இதுவே தூங்காமல் தூங்கிச் சுகம்பெறு நிலையாம்.

ஒருசமயம் சிகரத்தே நிற்பவனுடைய ஒருகால் ஒருக்கால் சிறிது வழுக்கநேருமாயின் உடனே தன் கைகளைப் பயன்படுத்தி மறுபடியும் சமாளித்து முன் நிலை ஏறியேநிற்பான். கீழே உருண்டு விழக்கருதவே மாட்டான். இவ்வாறே. ஏன்ற வினைகாரணமாகத் தாபதர் தமது முந்திய ஒடுக்கநிலையின் ஒரு சிறிது வழுவ நேரிட்டு நிலைதிரிவராயின் சிவநிலையினின்று ஞானநிலைக்கு இறங்குவர். ஞானநிலை மாயைநிலை போல்வதன்று. ஆதலால், இந்தஞானமே அவர்கட்குத்

தனுகரண புவனபோகமாகியுதவும். மாயை அவர்கட்கு இங்ஙனம் ஆகவேண்டியதில்லை. இதனால் அவர்கள் பிரபஞ்சத் தாக்குதல்கட்கு உள்ளாகாமல் திரும்பவும் சிவத்தினிலே ஒடுங்கப்பெறுவர். ஏனெனில் ஞானத்திலே நின்றவன் விழநேரிட்டால் அதற்குக் கீழேஉள்ள பிரபஞ்சத்தில் விழுவன். ஞேயத்திலே (சிவத்திலே) அழுந்தினவன் வழுவினால் அதற்கும் கீழே உள்ள ஞானத்திலேதான் விழநேரும். அந்த ஞானமே திரும்பவும் அவனை மேலேற்றிவிடும், இதனால் விசுவம் அன்னவனைக் கூடாதென்று நாம் உணரலாம். இதனையே, **தாபதர்கள்தாம் உணரில் இந்தத் தலமுணரும்** என்றுள்ளார் ஆசிரியர்.

இங்ஙனம் இவர்கள் ஒருசிறிது வழுவுதல்கண்டு இவர்களது **தாக்கற்ற** உள்ளத்தின் தன்மையை உணராதார் இவர்களை எள்ளுதலும் செய்வர். அது எள்ளுவோரின் மடமையால் நிகழ்வதாம். இந்த நிலையில், தாபதர்கள் அங்ஙனம் எள்ளுவோருடைய மடமை போக்குதற்பொருட்டுச் சபித்தல்செய்வர். இந்தக் கோபம் நீடித்திராது. இதனாலேயே "**வெகுளி கணமேயும்**" என்றார் வள்ளுவர். அங்ஙனம் ஒருகண மாத்திரையே அக்கோபம் நிகழ்வதாயினும் சிறு நெருப்புப் பொறிபட்ட பஞ்சுப்பொதிகள் பசுமம் ஆதல் போலச் சபிக்கப்பட்டாரிடமிருந்த செல்வமும், புகழும், செல்வாக்கும் நீங்கிப்போம். மேற்கூறிய இம்மூன்றுமே அஞ்ஞானிகட்குத் துணையாய் நின்றவை. இவை வெடியொலிகேட்ட பறவைகளைப் போல் விட்டகலும். இதனை வள்ளுவர், **காத்தல் அரிது** என்றுள்ளார். நம் நாயனார், **தாம் முனியின் பூமடந்தை தங்காள் ; புகழ்மடந்தை போயகலும் ;**

**நாமடந்தை நில்லாள் நயந்து** என்று தந்துள்ளார். இதனால் வேந்தரும் மாந்தரும் கற்றோருங்கூடத் தாபதர் சாபத்தினைத் தாங்க இயலாதென உணரலாம். **நயந்து** என்றமையால் கற்றோர் உள்ளத்தைவிட்டு நீங்கும் தன்மையற்றதான கல்வியும் கடிதின் நீங்கி விடும் என்பது பெற்றாம்.

## செய்யுள் — 69

### தாபதர்பால் தாணுபுரியருள்

**துரியம் கடந்தசுடர்த் தோகையுடன் என்றும்**
**பிரியாதே நிற்கின்ற பெம்மான்—துரியத்தைச்**
**சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யும் தன்மைகளும்**
**ஆக்கியிடும் அன்பர்க் கவன்.**

### கருத்துக்கள்

1. பெம்மான் நிலை.
2. முத்தரிடம் சிவம்புரி செயல்.

### விளக்கம்

பரமேசுவரன் ஞானசக்தியோடு நீக்கமற நிற்பவன். இந்த ஞானசக்தி ஆன்மபோதத்தால் அறியப் படாதவள். சிவபோதத்தால் அறியத்தக்கவள். முத்தர்களிக்குமாறு செய்யவல்லவள், மயக்கத்தைச் செய்யாதவள். இதனால் இங்குத் **துரியம் கடந்த சுடர்த்தோகை** எனப்பட்டது. துரியமாவது ஆன்ம அறிவு. இங்ஙனம் ஞானசத்தியுடன் பிரிவற நிற்கும் பெம்மான், தன்பால் பேரன்புவைத்த ஆன்மாக்களை

ஆன்மபோதம் கூடாமல் விழிக்கச் செய்திட்ட ஞான சத்தியிலே கூட்டிடும். தன்னாலே செய்யப்படும் சாப விடைகளை அத்தாபதர்களைக் கொண்டு தான் கூடி நின்று செய்வன். உண்மையில் இச்செயல் சிவம்புரி செயலாயினும். உலகத்தார் கண்ணுக்கு அத்தாபதர்கள் செயலாம்படி காணப்படும். எனவே சிவஞானியரைக் கருவியாகக்கொண்டு நிக்கிரக அநுக்கிரகச் செயல்களைச் சிவமே புரிகின்றதென்பதே கருத்தாம். இதனால் விளைபுகழ் உண்மையிற் சிவத்துக்கே உரியதாயினும் தாபதர்க்கே சார்கின்றது. மழைப்புகழ் உண்மையில் கடலுக்கே உரியதாயினும் மேகத்துக்கே சார்தல் கண்கூடாம்.

## செய்யுள்
## 70' 71, 72, 73,

### சிவஞானியர் செயல்கள் சிவன்செயலே ஆதல்

**ஓடம் சிவிகை உலவாக் கிழிஅடைக்கப்**
**பாடல் பனைதாளம் பாலைநெய்தல்—ஏடெதிர்வெப்**
**பென்புக் குயிர்கொடுத்தல் ஈங்கிவைதாம் ஓங்குபுகழ்த்**
**தென்புகலி வேந்தன் செயல்.**

**கொல்கரியின் நீற்றறையின் நஞ்சின் கொலைதவிர்த்தல்**
**கல்லே மிதப்பாய்க் கடல்நீந்தல்—நல்ல**
**மருவார் மறைக்காட்டில் வாசல்திறப் பித்தல்**
**திருவாமூ ராளி செயல்.**

**மோக மறுத்திடில்நாம் முத்தி கொடுப்பதென**
**ஆகமங்கள் சொன்ன அவர்தம்மைத்—தோகையர்பால்**
**தூதாகப் போகவிடும் வன்தொண்டன் தொண்டுகளை**
**ஏதாகச் சொல்வே னியான்.**

**பாய்பரியொன் றந்தப் பரமானந் தப்பரனைத்**
**தூயதிரு வாய்மலரால் சொற்செய்து—மாயக்**
**கருவாதை யாமறியா வாறுசெய்தான் கண்டாய்**
**திருவாத வூராளும் தேன்.**

## கருத்துக்கள்

1. சிவஞான பூரணராகிய நால்வர் அருட்செயல்கள்
2. யாவும் சிவத்தின் செயலே என உணர்தல்.

## விளக்கம்

சைவசமயம் உய்யவந்த பெரியார்கள் பலர். அவருள் சமய ஆசாரியராவர் நால்வர். இந்நால்வரும் ஞானத்தில் ஞானமுடைய மேல்நிலை எய்தியவர்கள். இவர்கள் பெருமையெல்லாம் இவர்தம் வரலாறுகளால் விரிவாக அறிதல் தக்கது. நால்வர் நான்மணிமாலை நூல் இவர்கள் பெருமையைப் பேசிப் புகழ்வது. இவரெல்லாரும் சிவஞானியர். ஆன்ம அறிவு சற்றும் சீவிக்கப் பெறாதவர். சிவனது திருவடியிலே (ஞானத்திலே) அழுந்தியவர்கள். பிரபஞ்சவாசனை ஒருசிறிதும் தாக்கப் பெறாதவர். அல்லும் பகலும் சிவம் நடமாடும் சிந்தையே உடையவர்கள். உலக மக்கட்கு இவர்களுடைய பெருமை தெரியவேண்டும். செயற்கரும் செயல்களைச் செய்பவரையே உலகம் பெரியர் என மதிக்கும் இயல்புடையது. ஆதலால், தம் அடியவர்களாகிய இவரை உலகம் மதிக்கச்செய்ய வேண்டியது சிவத்தின் பொறுப்பாயிற்று. இதனால் இவர்களைக்கொண்டு சிவம் பற்பல அருஞ் செயல்களை நிகழச் செய்தது இவ்வருஞ் செயல்களைச் செய்யத் தொடங்கும் போதெல்லாம் இவர்கள் சிவனருளா—

சிவத்தின் கருத்தை–சிவனிசைவை–ஏற்றே செய்யலாயினர். செய்து முடித்தபின்னரும் இவ்வருஞ் செயற் பெருமைகளையெல்லாம் தம்மை உடையவராகிய சிவத்தினிடமே ஒப்படைத்தனர். இரவல்வாங்கி உபயோகித்த கருவிகளை வேலை முடிந்ததும் கருவிக் குரியாரிடம் நன்றியோடு ஒப்படைப்பதே நல்லோர் தொழில் ஆகும். இங்ஙனம் இவர்கள் ஒம்படை செய்தமை உரைப்பனவே தேவார திருவாசகங்கள் ஆம். இம்முறையில் இவர்கள் ஆற்றிய அருஞ் செயல்கள் சிலவற்றை நம் நாயனர், ஒவ்வொருவர் செயற்கு ஒரு செய்யுள்வீதம் தந்துரைப்பாராயினர். இந்த நான்கு திருவெண்பாக்களே நால்வர் நான்மணி மாலை நூலுக்கு அடிப்படையாயின என்னலாம். அழுதும் தொழுதும் அறிந்தும் அலறியும் இவர்கள் சிவநிறைவு பெற்றவர்களாதலால் இவர்தம் செயல் யாவும் செம்மேனி அம்மான் செயலே ஆயின என்பர். இனி இவர்கள் புரிந்த அருஞ் செயல்கள் கூறப்படும்.

## திருஞானசம்பந்த சுவாமிகள்

முள்ளிவாய்க்கரையினின்று ஆற்றுப் பெருக்கிலே கோல் இன்றி ஓடஞ்செலுத்தித் திருக்கொள்ளம்பூதூர் அடைந்தனர். இதனில், கோல்இல்லாக் குறையினைச் சிவமே நிறைவேற்றிய தகைமை காணலாகும். இங்ஙனமே ஒவ்வொரு பெருஞ் செயலினும் காண்க! திருப்பட்டீச்சுரத்திலே முத்துச்சிவிகை பெற்றனர். **திருவாவடுதுறை**யிலே உலவாக்கிழி பெற்றனர். திருமறைக்காட்டிலே திருக்கதவம் அடைக்கப் பாடியருளினர். திருவோத்தூரின் இவர் பாடியருள ஆண்பனை பெண்பனை ஆயது. திருக்கோலக்காவிலே

பொற்றாளம் பெற்றனர். பாலை நெய்தல்பாடிய செய்தி முன்னரே கூறப்பட்டுள்ளது. மதுரை வைகை நதியிலே திரு ஏடு எதிரேறப்பாடினர். கூன் பாண்டியன் சுரநோய் தீர்த்தனர். திருமயிலையில் என்பு பெண்ணாக்கியளித்தனர். இத்தகைய செயல்கள் யாவும் செயற்கரும் செயல்களாம். இவை எவராலும் செய்ய இயலா. முன்னவனே முன்னின்று முடிப்பித்த செயல்களாகும் இவை. இவையெல்லாம் புகலி வேந்தர் செயலெனப்படினும், சிவபிரான் திருவருளால் செய்யப்பட்டவை ஆம் இத்திரு வருளைப் பெருமான் ஞானப்பாலருளியதன் மூலம் உலகறிய வைத்தமை தெரியலாம்.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

பல்லவராசன் ஆணைபெற்றுச் சமணர்கள் விடுத்த யானையினின்றும், அடைத்த நீற்றறையினின்றும், விடமூட்டுதலினின்றும் தப்பிப் பிழைத்தனர். கல்லே தெப்பமாகக்கொண்டு கடலை நீந்திக் கரையேறினர். திருமறைக் காட்டில் திருக்கதவம் திறக்கப்பாடினர். திருவாமூரை இவர் ஆண்டருளிய வண்ணம் இவரைச் சிவபெருமான் ஆட்கொண்டு இவ்வருஞ் செயல்களை நிகழ்வித்தனர் என்க !

## சுந்தரமூர்த்தி சுவாமிள்

சிவஞானியர் பொருட்டுச் சிவபெருமான் தாமருளிச்செய்த விதிகளைத் தாமே மீறியும் திருவருள் புரிவர். இவ்விதிவிலக் கருஞ் செயல்கள் சிவம் புரிந்தமை இச்சுவாமிகள் திறத்தே காணலாம். காமத்தை ஒழித்தவர்க்கே வீடுபேற்றை அருளுவ

தென்று வேதாகமங்களிலே விதித்தருளிய சிவபிரானே சங்கிலியார் பரவையார் இருவர்மாட்டும் தூது செல்லலானார். தொண்டர்க்குத் தொண்டராகும் திருவருட்டகைமை ஈண்டு உணரப்படுதல் முறை. இச்செயலை எவருமே பாராட்டிச் சொல்லியிருத்தலின் நம் ஆசிரியர் **ஏதாகச் சொல்வேன் யான்** எனலுற்றார்.

**மாணிக்கவாசக சுவாமிகள்**

பேரின்ப வடிவமுடைய சிவபெருமான் மாணிக்கவாசக மூர்த்தி நாயனார் பொருட்டே தாவு கின்ற குதிரைமேற்கொண்டு எழுந்தருளினார். இப் பெருமானால் ஆட் கொள்ளப்பட்டுத் தம் திருவாய் மலரினின்றும் வாசகத்தேனை வார்த்தருளினர். இத்தேனை அருந்துவார்யாவரும் பிறப்புறுவண்ணம் பெருமான் புரிகின்றனர். திருவாதவூரை இவர் ஆண்டருளியமை போன்றே சிவம் இவரை ஆட் கொண்டருளியது.

இவர்கள் நால்வரும் சாமர்த்தியமான காரியங் களைச் செய்தவர் தாமல்லர் என நாமறியும் பொருட்டே தமது திருப்பதியங்களின் முகப்பிலே **கள்வன்—ஈன்றுள்—அத்தன்—நாதன்** என முறையே சிவ பெருமானைக் குறித்துக்காட்டியுள்ளாரவர். இவற்றால் சிவஞானியர் செயல்கள் சிவத்தின் செயலே எனக் கோடல்தக்கதாம்.

---

## செய்யுள் — 74

### சிவயோகப் பயன்—(முத்தி)

**அம்மையிலும் இம்மையிலும் அச்சம் தவிர்த்தடியார்**
**எம்மையுமாய் எங்கும் இயங்குதலால்—மெய்ம்மைச்**
**சிவயோகமே யோகம் அல்லாத யோகம்**
**அவயோக மென்றே அறி.**

### கருத்துக்கள்

1. சிவஞானியர் அச்சமற்றிருத்தல்.
2. சிவயோகமே (ஞானயோகமே) முத்திதரும்.

### விளக்கம்

'நமனையஞ்சோம்' 'ஞானச் சுடர் வாள் கண்டாயடா அந்தகா', 'எந்நாளும் துன்பமில்லை' என்பன சிவஞானியர் வாசகங்களாம். இம்மை மறுமை பற்றிய எந்தக் கவலையும் இவர்கட்கில்லை. தம்மை முற்றிலும் சிவத்துக்கே அர்ப்பணித்துத் தம்பரங் கெட்டிருப்பதே இவரியல்பு. பூமி நடுங்கினும் இவர்தம் திருவுள்ளம் நடுங்காது. கண்பாவு நெற்றிச் சுடரான் கழலிணையே இவர்கள் திண்பால் அடையப் பெற்றவர்கள். 'அஞ்சல் நெஞ்சே' என்பதே இவர்தம் வீர முழக்காம். ஆதலால், தம்பிரானார் திருவடியைப் பெற்ற இச் சிவயோகியர்கள் (ஞான யோகியர்கள்) பதமுத்திகள் பற்றிய பயம் அற்றவர் களாய்ப் பிராரத்தத்தாலே உடலூழாய்க் கழிகின்ற வினையச்சங்களையும், தாங்கள் சிவசொரூப ஐக்கியம் பெற்றிருப்பவராதலால் கெடுத்து அச்சொரூப முள்ளளவும் தாமும் வியாப்தியுடையவராகிச் சங்கற்ப

விகற்பங்களற்று (எண்ணங்களாகிய அலைகளாலே மோதுண்ணுமல்) எங்கும் திருவருளிச்சை வண்ணம் (சுயேச்சையில்) திரிவர். இதுவே இம்மைக்கண் முத்தியநுபவம் எனப்படும். இந்தச் **சற்காரியமான சிவயோகமே** சிவனை உள்ளவாறுணர்ந்து கூடின **ஞானயோகமாம்**. இஃதல்லாது, மற்றுள்ள எவ்வகை யோகங்களும் சிவனை உள்ளபடியறியாத யோகங்க ளாகையால் அவையெல்லாம் அற்பப் பயனை அளித்து நிலையா இன்பூட்டிப் பின் பிறப்புகட்குட் படுத்தும் இழிதகையினவாம். இத்தகைய திடமான அறிவு இருத்தல் வேண்டுவது முக்கியமானதாகையால் **அறி** என்றும் கூறலுற்ருர் ஆசிரியர்.

## செய்யுள் — 75

### தம்பிரானர் நடுவுநிலைமை

**மன்னன்அருள் எவ்வண்ணம் மானுடர்பால் மாணவக!**
**அன்ன வகைய தரனருளும்—என்னில்**
**அடியவரே எல்லாரும் ஆங்கவர்தாம் ஒப்பில்**
**அடியவரே எல்லாம் அறி.**

### கருத்துக்கள்

1. யாவரும் சிவத்துக்கு அடியவரே (பொது).
2. சிறப்படியவர்களின் நிலைகள்.
3. சிவத்தின் ந( )மை.

### விளக்கம்

ஒரு நாட்டிலுள்ளார் யாவரும் அரசர்கீழ் வாழும் குடிமக்களேயாவர். இவ்வெல்லாரையும் காத்தல்

வேண்டுமென்பதே காவலர் கருத்து. "மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" என்பர் புலவர். ஆனால் குடிமக்களில் அறிவுடையவர்களாய் ஆப்தராயிருப்பவர்களைத் தன்னைப்போன்றாராகவே அரசர் கருதுவர். அங்ஙனமின்றி, அச்சத்தால் அடங்கி ஓரொரு வகை அறிவுத் தகுதி பெற்றாரை ஒவ்வொரு வகை உத்தியோகங்களிலே அரசர் அமைப்பர். குணக்கேடராகிய குடிமக்களைத் தண்டித்துச் சிறையிட்டுத் திருத்தி நல்வழிப் படுத்துவர் வேந்தர். இங்ஙனம் தம்மால் ரக்ஷிக்கப்படும் குடிமக்கள் விஷயத்தில் மூன்றுவிதமாக நடத்தல் அரசர்க்கு நீதியே ஆகும். இச் செயலும் கிருபைச் செயலாகவே செப்பப்படும். இதனாலேயே "நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே" என்றனர் அறிஞர். இவ்வாறே,

பரமேசுவரருடைய திருவுள்ளம் யாவரளவிலும் ஒத்தவாறுயிருப்பினும் மலபாகம் உண்டாமளவும் ஆன்மாக்களுக்குத் தனு கரண புவன போகங்களையும் கன்ம பலங்களையும் கூட்டிச் சுகதுக்க வாதனைகளிலே வைத்தும், சிலரைச் சத்திநிபாதக் குறைவுக்கிடாகப் பதமுத்திகளிலே வைத்தும், மிகுந்த சத்திநிபாதமுடையவர்களைத் திருவடியிலே சேர்த்தும் முறையாக நிறுத்துவான். எல்லோருமே சிவனுக்குப் பொது அடிமைப்பட்டவரே ஆவர். திருவடியைப் பெற்ற அடியார் சிறப்புற்ற அடியாராவர். இதனால் திருவடியிலே எஞ்ஞான்றும் பொருந்தியிருக்குமதே சிவ (ஞான) யோகமாம். இதுவே பிறப்பறுப்பது. "பிறப்பறுக்கும் பிஞ்ஞகன் கழல்கள்" என்பதும் இதுவே செப்புவதாகும். ஆதலால், இந்த ஞான யோகத்திலே நிலைத்துநின்று அநுபவிப்பதே நம் கடமையாகும்.

## செய்யுள் — 76

### கன்மத்தாற் சலியாமை

உடம்புடைய யோகிகள்தாம் உற்றசிற் றின்பம்
அடங்கத்தம் பேரின்பத்து ஆக்கில்—தொடங்கி
முளைப்பது மொன்றில்லை முடிவது மொன்றில்லை
இளைப்பது மொன்றில்லை இவர்.

**கருத்துக்கள்**

1. ஞான யோகிகளின் கன்ம அநுபவ முறை.
2. இருவகை இன்பும் ஒன்றுதல்.
3. கன்ம சலன மின்மை.

**விளக்கம்**

ஞானயோகிகளேயாயினும் அவர்கள் இவ்வுலகில் வாழ்ந்திருக்குமளவும் இந்த உடம்புக்கான வினையை அநுபவித்தே தீர்வர். அங்ஙனம் அநுபவிக்கும் போதும் அவர்கள் உள்ளம் ஞானவெள்ளத்திலே படிந்து கிடப்பதால் ஆகாமியத்துக்கு வழி இல்லை. சஞ்சிதம் ஞானத்தால் தகிக்கப்பட்டு விடுகிறது. ஆதலால், இவர்கள் இவ்வுலகில் எவ்வகை நிலையினரா யிருப்பினும் ஞானிகளாகவே கருதப்படத்தக்கவர் ஆவர். இவர்களுடைய பேரின்ப அநுபவத்தில் வேறு-பாடு இல்லை. நிலையும் பாவனையும் மட்டில் வேறுபடும். மலையை யாரும் அசைக்கமுடியாது. அது எந்த நாட்டில் இருப்பதாயினும் என் ? யாண்டும் அதன் அசலத்தன்மைக்கு மாறுபாடு இல்லையன்றே ! இவ் வாறேதான் ஞானநிலையில் திரியாது அடங்கியவரது தோற்றமும் இருக்கும். இவர்கள் தேகம் நழுவுங்

காலத்தும் இவ்வுடம்பு நழுவுவதை உணரார். இதனால் இவர்கட்கு மறுபிறப்புக்கு வழிஇல்லை. எடுத்துள்ள உடம்போடு இவர்கள் பிறப்பு அற்றுவிடுகின்றது. ஆகையால் கன்ம சலனம் ஊசல்போல் இவர்களை ஆட்டாது. காரணம் ஊஞ்சல் இப்போது தொங்கவில்லை. தரையிலே வைக்கப்பட்டுள்ளது. இவர்கள் சிற்றின்பினையும் பற்றற்ற நிலையில் ஏற்பதால் பேரின்பமாகவே காண்பர். இதனை **முதல் இரண்டுவரிகள்** உணர்த்தும், இவர்களைக் கன்மம் நெருங்காமையைப் **பின் இருவரிகள்** தெரிக்கும். **முளைப்பது** ஆகாமியத்தை உணர்த்துஞ் சொல்லாம். இளைப்பது பிறப்பெடுப்பதைக் காட்டுஞ்சொல். " எல்லாப் பிறப்பும் பிறந்து எய்த்தேன் " என இவ்விளைப்பு கூறப்படும். முடிவது பிராரத்தமாம்.

---

## செய்யுள் — 77

### ஞான தரிசனத்தினும் ஞான அநுபவம் சீரிது

**பேரின்ப மான பிரமக் கிழத்தியுடன்**
**ஓரின்பத் துள்ளானை உள்ளபடி—பேரின்பம்**
**கண்டவரே கண்டார் ; கடலுயிர்த்த இன்னமுதம்**
**உண்டவரே உண்டார் சுவை.**

**கருத்துக்கள்**

1. ஞான தரிசனம் போதாது.
2. ஞான அநுபவமே வேண்டுவது.

**விளக்கம்**

இச் செய்யுட்குரிய விளக்கம் திருவுந்தியார்த் தெளிவுக்கட்டுரை நூலில் 34-ஆம் பாடலடியிலே தரப்பட்டுள்ளமை காணலாம். இறைவன் **ஞேயம்** எனப்படுவன். அதாவது ஞானத்தோடு ஒன்றி யிருப்பவன் என்பது பொருளாம். எனவே ஞான ஞேயங்கள் பிரிப்பற இருப்பன. கோயிலில் அர்ச்சக ருடைய தயவு மட்டில் நமக்குக்கிடைப்பது போதாது, அதனு லடையத்தக்க பயன் முடிந்த பயனுகாது. அவ்வர்ச்சகர் இடைவிடாது அருகிருந்து பூசிக்கும் ஆண்டவருடைய தயவு நமக்கிருந்தால் அதுவே ஆலய தரிசனத்தின் முடிந்த பயனும். ஆகவே ஒருவன் **தத்துவங்களைக் களைந்து,** அதன் பின்னர் **தன்னை** இன்னுரென்று **கண்டு,** அதன்பின் இறைவ னருளெல்லையிலே புக்கு **அன்புடையனுகி,** அதன்பின் சத்தி சொரூபமான **ஞானம் கிடைக்கப்** பெற்றதும் இதனையே முடிந்த பயனென எண்ணிவிடாமல் அந்தக் கிடைத்தற்கரிய ஞானத்தின் பயனே சுகரூபத்து அழுந்துதல் எனத் தெளிந்து **சிவத்திலே அழுந்த** வேண்டும். இதுவே சிவத்தினைத் தரிசித்தல் எனப் படும். கடலிலிருந்து அரும்பாடுபட்ட அமுதத்தைக் கண்ணுலே மாத்திரம் தரிசித்தால் மரணம் நீங்காது. உண்டால்தான் மரணம் நீங்கும். **அசுரர்** எனவும் **அமரர்** எனவும் பெயர்கள் விளைந்த இயல்பினை ஈண்டுக் கருதிக் கோடல் தக்கதாகும். இதுபற்றியே **கடல் உயிர்த்த இன்னமுதம் உண்டவரே உண்டார் சுவை** எனலானுர் ஆசிரியர். தேவாமிர்த இயல்பின் உண்மை நமக்குத் தெரிதற்பொருட்டே சுவை உண்டார் என் றுள்ளார் என்க! மற்ற வரிகள் வெளிப்படை. இதனுல்

இறைவன் உருவமே இன்புருவமாம் என உணர வேண்டும். இதனை "**இறை உருவம் ஆனந்தம் அன்றி வேறொன்றில்லையாம்**" என்பது துகளறு போதம். ஞானனந்தம் என்பதும் அதுவே. **சிவ சாயுச்சியம்** என்பதும் இதன் பெயராம்.

---

## செய்யுள் — 78

### சிவனைக் கருத்தா எனல்

**நம்கையினல் நாம்அனைத்தும் செய்தாற்போல் நாடனைத்தும்**
**நங்கையினல் செய்தளிக்கும் நாயகனும்—நங்கையினும்**
**நம்பியாய்த் தானடுவே நாட்டப் பெறுமிதுகாண்**
**எம்பெருமா னூர்தம் இயல்பு.**

### கருத்துக்கள்

மூளை ஏவுகிறது. கைகால்கள் ஏவலைச் செய்கின்றன. மூளை இக் கரணங்கட்குக் கர்த்தா எனப் படுகிறது. செய்யும் வேலைகட்கேற்பக் கைகால்கள் வளைந்தும் நிமிர்ந்தும் மடங்கியும் அடங்கியும், நீண்டும் குறுகியும் விகாரமடைகின்றன ஆனல் அவற்றை ஏவி நிற்கும் மூளை இவ் விகாரங்களொன்றையும் அடையவில்லை. இது உடல்பற்றிய நூற்கொள்கை. இங்ஙனமே, படைத்தல் முதலிய ஐந்தொழில்களையும் பரையே (சத்தியே) புரிகின்றுள். சிவன் சாக்ஷி மாத்திரையாய் உள்ளான். "தாம் ஏவு தொழில் ஐந்தும் பரை இயற்ற" என இங்கிலை கூறப்படுதல் காணலாம். ஆதலால் சிவன் ஏதும் விகாரம் அடைதல் இலன். எனினும், அவன் ஏவாவிடில் (சங்கற்பிக்காவிடில்) எதுவும் நடவாது. "அவனன்றி ஓரணுவும்

அசையாது" எனச் சிவமே கருத்தாவாகக் கூறப்படுவன். சத்திக்குப் பிராணனும் நாயகனும் சிவமே. ஆதலால், நிர்விகாரியாம் கருத்தா சிவம் என்பர். இதுவே எம்பெருமானுர் இயல்பாம். உபமான உபமேயங்களை முதல் இரு வரிகள் சொல்லுகின்றன. பின் இருவரிகள் சிவனியல்பு செப்புவனவாகும்.

## செய்யுள் — 79

### சிவத்தின் நிர்விகார நிலை

**பொன்நிறம் கட்டியினும் பூணினும் நின்ருற்போல்**
**அந்நிறம் அண்ணலும் அம்பிகையும்—செந்நிறத்தள்**
**எந்நிறத்த ளாயிருப்பள் எங்கள் சிவபதியும்**
**அந்நிறத்த ஞயிருப்பன் ஆங்கு.**

**கருத்துக்கள்**

1. சத்திக்கும் சத்தனுக்கும் உள்ள ஒருமை.
2 சத்திக்கு ஏற்ப சிவமும் நிற்றல்.

**விளக்கம்**

பொன் செந்நிறமுள்ளது. நயப்புடையது பத்தரைமாற்றுத் தரம்உள்ளது. பொன்ஞகவே — கட்டியாகவே — இருக்கும்போது இந்த நிலைகளை அதன்பால் காண்கிருேம் அந்தப் பொற்கட்டி ஆபரணம் ஆக மாறுகிறது. அங்ஙனம் மாறியபோதும் முற்கூறிய அப்பொன்னே ஆவதால் அதன் மதிப்புக்குக் காரண மான உட்பண்புகளாகிய மாற்று, நிறமாதியவை அவ்வாறே மாற்றமின்றி நிற்கும், இங்ஙனமே, சத்தியா

னது யாதொரு ரூபமாகப் பிரபஞ்ச காரியமாகக் காணப் படினும், சிவமும் அதற்கேற்றவாறு மாற்றமின்றியே நிற்பன், அதாவது சுசுரூபமான சிவமும் ஞான சொரூபமான சத்தியும் அந்தந்த இடங்கள்தோறும் அந்தந்தமுறைமைகளாயே நிற்பர் என்பதாம். "ஒருவனே இராவணுதியாவகம்" என்னும் சித்தியார்ப் பாடலுரை ஈண்டைக்கு நோக்கற்குரியது. "அத்திறம் நிற்பன் எந்தை" என்பதும் அது.

## செய்யுள் — 80

### சிவசொரூபங்கள்

தாரத்தோ டொன்ருவர் தாரத்தோர் கூருவர்
தாரத்தோ டெங்கும் தலைநிற்பர் — தாரத்தின்
நாதாந்தத் தேயிருப்பர் நால்தானத் தேயிருப்பர்
வேதாந்தத் தேஇருப்பர் வேறு.

**கருத்துக்கள்**

1. சிருட்டியாதி நிலைமைகள்.
2. இயற்கை நிலை.

**விளக்கம்**

படைப்புக் காலத்தே ஆன்மாக்கள் சூக்கும உடம்புடனே அன்பு அறிவு ஆற்றல்கள் சீவிக்கைக் காகச் சிவன் தம்முடைய சத்தியைத் தோன்றவைத்து தாமும் இச்சாஞான கிரியாசொரூபமாவர். "ஒன்றதாய் இச்சாஞானக் கிரியை என்று ஒரு மூன்ருகி நின்றிடும்" என்பது சித்தியார். **தாரத்தோடொன்**

ருவர் என்பது இச்செய்யுள். சிவர்கட்குத் தூலதேக வகுப்புண்டாதற் பொருட்டுத் தாமும் சத்தியுமாக **அர்த்தநாரீச்சுர** வடிவாவர். **தாரத்தோர் கூருவர்** என்பது இங்ஙிலே. ஆன்மாக்கள் மலபரிபாகம் அடைதற்பொருட்டும், கன்மங்களைத் துய்க்கவும் ஆர்ச்சிக்கவும் **பிரமா, விஷ்ணு, உருத்திரர், மகேசுவரர், சதாசிவர்,** என்னும் சத்திருபங்களுடன், **அந்தரமூர்த்தி** எனப் படும் பிரணவ சொரூபமும் ஆகி, ஆன்மாக்களிடம் மாயாதத்துவங்களுடன்கூடி நடத்துவர். **தாரத்தோ டெங்கும் தலைநிற்பர்** என்பது இதனை உணர்த்தும். ஆன்மாக்களையும் தத்துவங்களையும் பிரிக்கும்பொருட்டு மகாமாயா சத்தி என்று சொல்லப்படுகிற **நாதாந்த நிருவிகாரத்தும்** நிற்பர். **தாரத்தில் நாதாந்தத்தே இருப்பர்** என்பர் இதனை, மேற்கூறியவற்றை அறியயாமல் துணையாம் தன்மையில் வேண்டி மேற் கூறப்பட்ட இச்சைஞானம் கிரியைகட்கு அப்பால தான நாலாந்தானமெனப்படும் **திரோதானசத்தியிலும்** இருப்பர். **நாற்ருனத்தே இருப்பர்** என்பது இதுவாம் இவைகட்கு அநுக்கிரகம் செய்யவேண்டி வேதத்தின் முடிந்த பொருள் எனப்படும் **பராசத்தியிலே** இருப்பர். இங்ஙனம் இருக்கும் நிலையிலெல்லாம் தான்வேருய்த் தன் சுபாவ சொருபமாய் இருப்பர், இதனைக் கூறுவது **வேதாந்தத்தே இருப்பர்; வேறு** என்ற இடம். இதனுல், பராசத்தி, திரோதானசத்தி, இச்சாசத்தி, ஞான சத்தி கிரியாசத்தி என ஐந்து சத்திகள் இறைவனுக் குண்டென்பது பெறப்படும். இவற்றுள் பராசத்தி ஒன்றே **சொருபம்.** ஏனைய நான்கும் அவற்றின் பேத சத்திகளும் **தடத்தம்.** இவற்றுள் **இச்சை** என்பது உயிர்கட்கு மலத்தை நீக்கிச் சிவாநுபவம்தரும்

பொருட்டு முதல்வனிடம் உண்டாகும் கருணையார், சிவப்பேருகிய அதற்குச் செய்யவேண்டிய உபாயங் களை எல்லாம் முதல்வன் விரும்பி அறிதல் ஞானசத்தி எனப்படும். அருளின் வேறல்லாதது கிரியாசத்தி. இதனால் அறிந்த அவற்றை அறிந்தவாறே முதல்வன் சங்கற்பித்துச் செயற்படுத்தல் கிரியைஆம் என்ப.

## செய்யுள் — 81

### எல்லாமாய் அல்லவுமாம் நிலை

**ஒன்றுரைத்த தொன்றுரையாச் சாத்திரங்கள் ஒன்றாக**
**நின்றுரைத்து நிச்சயிக்க மாட்டாவால் — இன்றுரைக்க**
**என்றால் இயன்றிடுமோ என்போல்வார் ஏதேனும்**
**சொன்னால்தான் ஏறுமோ சொல்.**

**கருத்துக்கள்**

1. சிவனது பேத அபேத பேதாபேத நிலை.
2. சொல்லொணாத நிலை.

**விளக்கம்**

உலகில் வாழ் மக்கள் பலர் ஆவர். அவர்தம் உள்ளங்களும் பல; கொள்கைகளும் பல. இந்து அவரவர் விருப்புக்கேற்ப அமைவது. Tastes differ என்பர் . இதனால் மதங்கள் பலவாயின. ஆயினும் அவற்றின் குறிக்கோள் ஒன்றே. இத னால்தான் தெய்வம் பலவாக இருக்கமுடியாதென்பர். உண்ணும் பண்டங்களின் பல்வேறு சுவைகளும் நாக்கு மண்டலம் வரையில்தான் வேறாகக் காணப் படும். ஆனால், இரைப்பை அடைந்ததும் ஒரே

சுவையாக மாறி ஒரேவித இரத்தமாகிறது. இவ்வா றிருப்பனவே கொள்கைப் பன்மைகளும் மதப் பன்மைகளும். ஆதலால், அவ்வச் சமய சாத்திரங் களும் கூறும் கொள்கைகள் ஒரேமாதிரியாக அமைய வில்லை. ஆனாலும், அவைகள், கட்டற்றதும் சுட்-டற்றதுமான முழுமுதல்வனுடைய உண்மைகளில் ஒவ்வொன்றை எடுத்துரைப்பனவே ஆம். ஆதலால், ஏதும் ஏற்கத்தக்கதே எல்லாக் கொள்கைகளையும் ஒன்றுபடுத்தி ஒருமை காட்டுவதே **சித்தாந்தம்** எனப் படும். பரமேசுவரன் எல்லாமாகியும் அல்லவுமாகியும் இருப்பவன். இதனை, ஒருசிலர் **அபேதம்** என்பர். பொன்னும் மணியும் போல்வதென இவர்கள் இதற்கு உவமை காட்டுவர். மற்றும் சிலர் **பேதம்** என்பர். இவர்கள் இருளும் வெளியும் (ஒளியும்) போல்வது என்பர் இதனை. வேறு சிலர் **பேதாபேதம்** என்பர் இந்நிலையை. இவர்கள் சொல்லும் பொருளும் போல்வது என உதாரணம் கூறுவர். இம் மூன்றிலும் உண்மையுளது. ஆனால் முற்றிலும் ஒவ்வொன்றிலும் அமையவில்லை. எங்ஙனம் என்பதை இங்கு விவரித் தால் நூல் பெரிதாகிவிடும். தக்க நூல்களில் தாமே ஓதிக் காண்டல் நல்லது. இந்த மூன்றையும் உளப் படுத்தி முழு உண்மை நிலையாக **அகர உயிர்போல்** என்று சித்தாந்தம் செப்பலுறும். ஆதலால், நம் ஆசிரியர், **ஒன்றுரைத்தது ஒன்றுரையாச் சாத்-திரங்கள்** எனவும், **ஒன்றாக நின்றுரைத்து நிச்சயிக்க மாட்டாவால்** எனவும், **இன்றுரைக்க என்னல் இயன் றிடுமோ** எனவும் உரைத்துச் சித்தாந்த உண்மையின் உயர்வினையும் இயல்பினையும் தெரிவித்துள்ளார். இச் **சித்தாந்த உண்மை** அநுபவ ரீதியிலே ஐயமறப் புலப்

படுவது. ஆராய்ச்சியால் அறியப்படுவதன்று. 'வைதிக சைவ சித்தாந்த உயர்வு இஃதன்றே' என அநுபூதிமான்கள் உணர்ந்து கூறுவர். ஆதலால், இவ் வாசிரியரும், என் போல்வார் ஏதேனும் சொன்-ஞல்தான் ஏறுமோ சொல் என்று கூறலாஞர். சொல் என்ற சொல்லால் தன் கூற்று முற்றும் உண்மை என்பது புலப்படுத்திஞர் ஆவர்.

## செய்யுள் — 82

### யாவும் அருள் ஞானமயம்

யாதேனும் காரணத்தால் எவ்வுலகில் எத்திறமும்
மாதேயும் பாகன் இலச்சினேயே—ஆதலிஞல்
பேதமே செய்வாய் அபேதமே செய்திடுவாய்
பேதாபே தஞ்செய்வாய் பின்.

**கருத்துக்கள்**

1. மதவாதிகள் கருத்து வேறுபடுதல்.
2. ஞாதாக்கள் ஏதும் கருதாமை.
3. யாவும் மாதொருபாகன் மயம்.

**விளக்கம்**

எந்தக் காரணங் கொண்டு பார்த்தாலும் எந்த உலகத்துள்ள எந்தப் பொருளும் சமவாய சமவேத மாயுள்ள சத்தியைப் பொருந்தின சிவத்திஞுடைய அடையாளமாகவே உள்ளமை புலப்படாமற் போகாது. ஆதலால், இப்பிரிவுறவராகிலேயினேப் பேதம் என்பார் என்க! அபேதமென்பார் அங்ஙனம்

அறைக! பேதாபேதமென்பார் பேசுக! நாம் இந்த வாதத்தே தலையிட்டுக்கொண்டு வாளா காலம்போக்கி, வந்த வேலையை மறந்து மாளா திருப்பதே கருத்தாகக் கோடல்தக்கதுஎன ஆசிரியர் அறிவுரை அருளலானார். "வெல்லாமல் எவரையும் ம ரு ட் டி வி ட வகைவந்த வித்தை முத்திதருமோ" என்பது மதவாதம் பயனற்ற வேலையென்பதை நினைவூட்டும். "மாதர்ப்பிறைக்-கண்ணியானை" என்னும் திருநாவுக்கரசு சுவாமிகள் பாடலில் "காதல் மடப்பிடியோடும் களிறுவருவன கண்டேன்" என்பதும், "கண்டறியாதன கண்டேன்" என்பதும்போன்ற இடங்கள் இவ்வுண்மை புலப்படச் செய்வனவாகும். ஆ த லா ல் ஞாதாக்கட்குப் பேத முதலாம் வாதங்கள் கருத்தல்லவாம். இதுவே சித்தாந்தத்தின் பேருண்மைப் பெருமையாம்.

## செய்யுள் — 83

**நின்றபடி நின்றவர்கட் கன்றி நிறந்தெரியா**
**மன்றினுணின் ருடல் மகிழ்ந்தானும்—சென்றுடனே**
**எண்ணுறும்ஐம் பூதமுதல் எட்டுருவாய் நின்றானும்**
**பெண்ணுறநின் றுடும் பிரான்.**

**கருத்துக்கள்**

1. சத்தியை ஒடுக்கிக்கொண்டிருப்பவன் சிவன்.
2. அட்டமூர்த்தங்களாகி நிற்பானும் அவன்.
3. ஆனந்த நிருத்தம் கொண்டானும் அவனே.
4. ஆன்ம போதமற்றார் விளங்க உணரும் திறத்தன்.

**விளக்கம்**

பேதம் முதலான மூன்றனுள் எந்த ஒன்றினுள்ளும் பெருமான் அடங்கியவன் ஆகமாட்டான். ஆபரணமாய் விளங்கும் காலத்தில் பொன்னின் தன்மை விளங்குதல் போல உயிராகத் தோன்றுங்காலத்தில் பிரமத்தின் தன்மை (மறப்பு நினைப்பு; சுகதுக்கம் அற்றநிலை) தோன்றவில்லை யாதலால் அபேதமென்கை முழுப் பொருத்தமாகாது. இருளும் வெளியும் என்புழி பொருள் இரண்டெனப்படினும் ஒன்றன் உதவி இன்னொன்றுக்கு வேண்டாததாகி முடியும். இதனால் இறைவனை இன்றி உயிர் தனித்தியங்கக் கூடு மெனப்படும். ஆதலால் இதுவும் தக்கதன்றாம். சொல்லும் பொருளும் போல்வது எனக் கொள்ளுகை யில் அவையிரண்டும் கலந்து நிற்கவில்லை. ஆதலால் இதுவும் முற்றிலும் பொருத்தமாகாது. இதனாலேயே உயிரையும் உடலையும் போலவும் எனவும், அகரமும் ஏனைய அக்கரங்களும் போல எனவும், பண்ணும் ஓசையும் போல எனவும் உவமைகளைச் சித்தாந்தம் காட்டலுற்றதென்க "புறச்சமயத்தவர்க் கிருளாய்" என்னும் சிவப்பிரகாசப்பாடல் இங்கு ஒப்பு நோக்கி உணரல் பொருந்தும். ஆகையால் சங்கார காலத்திலே சத்தியையும் தன்னுள் அடக்கிச் சங்காரதாண்டவம் செய்தருளுவன் சிவன். படைப்புக்காலத்தே பஞ்ச பூதங்களும் சந்திராதித்தரும் ஆன்மாக்களுமாய்ப் பொருந்தி நிற்பன். திதிகாலத்தில் அடியார் துயரங்கெடத் திருவம்பலத்தே ஆனந்த நிருத்தம் விரும்பியருளும். சிவம் அநாதியே தன்னுடைய சொரூபம் தோன்றாமல் ஆன்மாவாய் நின்ற முறைமை போல, ஆன்ம போதம் தோன்றாமல் சிவமாயே

நின்றவர்கட்கே சிவ சொரூபம் விளங்கும். பிறர்க்கு உண்மை ஒருசற்றும் விளங்காது. இதுபற்றியே **" நின்றபடி நின்றவர்கட்கு அன்றி நிறம் தெரியா "** என்றார் ஆசிரியர். பிறவரிகள் கூறும் செய்திகள் வெளிப்படை.

## செய்யுள் — 84

### நின்றபடி நிற்றல்

**சிவமே சிவமாக யானினைந்தாற் போலச்**
**சிவமாகி யேயிருப்ப தன்றிச்—சிவமென்(று)**
**உணர்வாரு மங்கே உணர்வழியச் சென்று**
**புணர்வாரு முண்டோ புவி.**

**கருத்துக்கள்**

1. நின்றபடி நிற்றல்.
2. சிவத்தை வேறாக விசாரியாமை.

**விளக்கம்**

சிவமே சிவமாக நினைத்தலே தக்கது. பேத முதலான திறங்கள் அற்ற இடத்திலேதான் பக்குவம் விளையும். அந்தப்பக்குவத்திலே காண்பதே சிவ சொரூபம். இவ்வாறன்றி வேறொருவிகற்பமும் கருதலாகாது. இதுவே அநுபவம். . ஆதலால், சிவத்தினை அறிய விரும்புவோர், தன்னை வேறாகவும் சிவத்தை வேறாகவும் வைத்து விசாரிக்கப் புகுதல் நன்றன்று. அச் சொரூபமே சொரூபமாகத் தானு மிருத்தலே நன்று. தன்னை ஒரு பொருளாகவும்,

சிவத்தை ஒரு பொருளாகவும் தனித்தனியே கொண்டு அந்தப் பூரண சைதன்யத்தைத் தன் ஆன்மபோதத்தால் விசாரித்தறிய முயல்வது மடமையாம். யானையைத் தாமரை நூலால் கட்டுவது எத்தகை அறிவீனமோ அத்தகை அறிவின்மை காட்டும் இச்செயல். ஆதலால் 'தான்' கெட்டுச் சிவத்துடனே பொருந்தலே வேண்டுவதாம். இங்கு ஆசிரியர் அநுபூதிமானுதலால் தானறிந்த இந்த உண்மை நிலையைப் பரமகருணையினால் சீடற்கு உபதேசிக்கலுற்ருர் என்பதை பால நிலைந்தாற்போல என்ற இடம் தெரிவிக்கும். "இருந்தபடி இருங்கோள்" என்று அருணகிரியார் கூறுவதும் இவ்வுண்மை காட்டும்.

---

## செய்யுள் — 85

### சிவயோகிகள் அநுபவம்

அதுஇது என்றும் அவன்நானே என்றும்
அதுநீயே ஆகின்ருய் என்றும்—அதுவானேன்
என்றும் தமையுணர்ந்தா ரெல்லாமி ரண்டாக
ஒன்ருகச் சொல்வரோ உற்று.

**கருத்துக்கள்**

1. அத்துவித உண்மையைப் பலபடியாகக் கூறல்.
2. உண்மை ஒன்றே.

**விளக்கம்**

வேதங்கள் நான்கும் ஒரு பொருளையே உரைப்பன. ஆனல் ஒவ்வொன்றையே கொண்டு

பிறவற்றை உபேக்ஷிப்பவர் உண்மை இன்னதென உணரார். நான்கையும் ஒருசேரக் கொண்டு அவை கூறும் கருத்துக்களின் முரண் ஒழித்துப் பொருந்தும் பொருள் கோடலே தக்க பொருளாம். இதனையே சித்தாந்தர் செய்வது. ஆதலால், ஒவ்வொரு கொள்கையே பற்றி நிற்பாரெல்லாருமே சிவம் வேறு தாம் வேறு என இரண்டுபொருளாகக் காண்பவரே யாவர். கையில் இரண்டு பழங்களை வைத்துக் கொண்டு ஒரு பழந்தான் என்பதுபோல் ஆகும் இவர் கூற்று. இரண்டு பழங்களையும் பிழிந்து சாருக்கி வேருந்திறம் போக்கி ஒன்றெனக் கூறுவதுபோல்வதே சித்தாந்த முடிபு. இதனால் ஆன்மாவும் சிவமும் எப்போதும் இரண்டாகவே இருக்கும் என்றும், சிவம் என்று ஒரு முதலில்லை ; ஆன்மாவே சிவம் என்றும், சிவம் என்றும் நீ என்றும் வேறில்லை ; உன்னுடைய உபாதிகள் நீங்கினபோது நீயே சிவம் ஆகிறாய் என்றும், நான் சிவனுடனே கூடிச் சிவனாய்விட்டேன் என்றும் கூறுவராயின் எல்லோருமே உண்மை நிலை கூறாதவராவர். ஆதலால் உள்ளபடி அறிந்திருக்கும் சிவயோகியர் நிலையே சான்றாம். இரண்டாகவும், ஒன்றாகவும் பலவிதமாகக் கூறுதல் மயக்கமுடையதாகும் என்க !

---

## செய்யுள் — 86

### சிவம் எல்லாமாய் நிற்றல்

**ஈறாகி அங்கே முதல்ஒன்றாய் ஈங்கிரண்டாய்**
**மாறாத எண்வகையாய் மற்றிவற்றின்—வேறாய்**
**உடனாய் இருக்கும் உருவுடைமை என்றும்**
**கடனாய் இருக்கின்றான் காண்.**

### கருத்து

ஒன்ருய் வேருய் உடனுய் இருத்தல் சிவத்தியல்.

### விளக்கம்

**ஒன்ருய் வேருய் உடனுய்** நிற்றல் சிவத்தின் இயல்பென்பது முன்னரே விளக்கப்பட்டுள்ளமை காண்க! சர்வ சங்காரத்தின்போது சிவம் ஒன்றுமேயாய் உள்ளது. " அந்தம் " என்பர் இந்நிலையினை. " **ஈருகியங்கே முதல் ஒன்ருய்** " என்பது இப்பாட்டு. மீண்டும் படைப்புக்காலத்திலே சத்தியைத் தோற்றுவித்து அந்தச் சத்தியும் தாமுமாய் எல்லாவற்றையும் அந்தச் சத்தியிடமாய்த் தோற்றுவித்து அந்தச் சத்தியும் இவையும் கூடிநின்று நடக்கும்படி ஒழிவற்ற அட்ட மூர்த்தியுமாகிருன். " **ஈங்கு இரண்டாய் மாருத எண் வகையாய்** " என்ற இடம் கூறுவது இக்கருத்தாம். இங்ஙனம் இவற்றில் பொருந்தியிருக்கும் போதே தான் இவற்றிற்கு வேருய் நிற்கும். **மற்று இவற்றின் வேருய்** என்பர் இதனை. இவ்வாறு வேருய் இருக்கும் போதும் ஒரு பொருள்போன்று **இவைதானே ஆய்** நிற்பன். இது உடனுய் நிற்றல் எனப்படும். **உடனுய் நிற்கும் உருவுடைமை** என்ற இடம் இதனை உணர்த்தும். எப்போதுமே சிவம் யாவற்றையும் யாவரையும் தம் உடைமையாகவே கொண்டிருத்தலைக் கடமையாக உடையவன் என்பது முடிபான உண்மையாம். இதுவே பேத முதலாக நால்வகையாகக் கூறுவார்க்கும் பொதுவாய்ப் பொருந்தத்தக்க நிலையாம் என்க!

## செய்யுள் — 87

உன்னுதரத் தேகிடந்த கீடம் உறுவதெல்லாம்
உன்னுடைய தென்னுய்நீ உற்றனையோ—மன்னுயிர்கள்
அவ்வகையே காண்இங் கழிவதுவும் ஆவதுவும்
செவ்வகையே நின்றசிவன் பால்.

### கருத்துக்கள்

1. சுகதுக்கவாதனை ஆன்மாவினது ஆதல்.
2. வாதனைகள் சிவத்துக்கின்மை.

### விளக்கம்

நம் வயிற்றுக்குள்ளேயும் நுரையீரல் முதலிய இடங்களிலேயும் எவ்வளவோ கிருமிகள் உள்ளன. "பொல்லாப் புழுமலிநோய்ப் புன்குரம்பை" என்பர் அவ்வையார். இவ்வாறு உடலுள் இருக்கும் ஜந்துக்கள் உள்ளே உண்ணுதல் உறங்குதல் நெளிதல் உறங்குதல் முதலான பல சுகதுக்க வாதனைகளை அடைந்து கொண்டே இருக்கின்றன. ஆனால் அவற்றின் வாதனைகளை யெல்லாம் நமக்குள்ள வினை போல நாம் கூடிநின்று அநுபவிக்க இல்லை. இவ்வாறே சர்வத்தையும் கூடிநிற்கும் போதும் அவை ஒன்றோடும் பற்றற நிற்கின்றான் சிவன். நம் வினைகளாலேதான் அந்தக் கிருமிகள் வாழ்கின்றன; சாகின்றன; பிறக்கின்றன. அவ்வாறே, சிவனருளாலே தான் ஆன்மாக்கள் நிலைத்து அறிந்து செல்கின்றன. இதுவே ஆதல் இருத்தல் அழிதல் நிகழ் முறைமையாம். இதனால் சுகதுக்கவாதனைகள் ஆன்மாவுக் கொழிந்து சிவனுக்கில்லை என்பது தெளிவாம்.



---

## செய்யுள் — 88

### சர்வமும் தானும் சிவம்

அவனே அவனி முதலாயி னானும்
அவனே அறிவாய்நின் றானும்—அவனேகாண்
ஆணாகிப் பெண்ணாய் அலியாகி நின்றானும்
காணாமை நின்றானும் கண்டு.

### கருத்துக்கள்

1. ஆதியந்தமாவான் சிவம்.
2. தத்துவ முதலாவன் சிவமே.
3. ஆன்மாவைத் திரோபவித்து நடத்துமவன் சிவனே.

### விளக்கம்

பிருத்வி முதல் நாதம் ஈறான தத்துவங்கள் பயன் படும்படி அவற்றிற்குள் தத்துவனாய் நின்றவனும் சிவனே. தத்துவன் என்ற பெயர் உண்மையாகப் பொருந்துதல் சிவத்துக்கே என்பது அறிதக்கதாம். தத்துவங்கட்கு இப்பெயர் உபசரணையால் அமைவதாம். இதனை, **அவனே அவனிமுதல் ஆயினானும்** என்பது தெரிவிக்கும். இந்தத் தத்துவங்களைப் பொருந்தி ஆன்மாக்கள் கன்ம மலத்தைப் புசிக்கும்படி. அந்த ஆன்மாக்கட்கு ஆன்மாவாய் நிற்பானும் பரமேசுவரனே. அவனறிவுதான் நம்மை நடத்துகின்றதென்பதே உண்மையாம். இஃது, **அவனே அறிவாய் நின்றானும்** என்பதால் பெறப்படும். பூதங்கள், ஆன்மாக்களின் வினைக்கீடாக (நாடகத்தில் தலைவன்

கட்டளைப்படி வேடதாரிகட்கு ஆண் பெண் முதலான வேடங்களைச் செயலர்கள் கட்டிவிடுவதுபோல) ஆண் பெண் அலி (**அவன் அவள் அது**) என்னும் வகுப்புக்களை மேற்கொள்ளும் வண்ணம் அவற்றைக் காரியப்படுத்தும் வகுப்பாய் நிற்பவனும் முழு முதல்வனேயாவன். இவ்விடயத்தை **அவனேதான் ஆணாகிப் பெண்ணாய் அலியாகி நின்றானும்** என்ற இடம் குறிக்கும் இங்ஙனமெல்லாம் செய்தலை யெல்லாம் நாம் அறியவொண்ணா வண்ணம் நமது நன்மையே கருதித் திரோபவித்து (மறைத்து) ஒரு பணியுமற நிற்பானும் அப் பெருமானே ஆவன். இவற்றையெல்லாம் **கண்டு காணாமை நின்றானும்** அவன் என்ற வாசகம் இதனை உணர்த்தும். இங்ஙன மெல்லாம் நிற்பது இறைவனுக்கு மட்டில் உள்ள சாமர்த்தியமாம். "விச்சதின்றியே விளைவு செய்குவாய்" முதலனவும் இச் சாமர்த்தியங் காட்டும் திறத்தன என்பர்.

## தொகுப்புரை

இந்நூலின் 37 முதல் 88 ஆம் பாட்டுமுடிய இந்நூலாசிரியர் தமது பரமகருணையால் எந்த ஒரு தனிப்பட்ட கொள்கையையும் பற்றிக்கொண்டு கூறாமல் தாம் உண்மையாகக்கண்ட முடிபினை (சித்-தாந்தத்தை) உபாயங்களில் ஞான உபாயப்பிரிவில் சிவஞான இயலாக்கி மொழிந்துள்ளார். இவர், உலகில் வாழும் எல்லாமக்களும் **ஞானமார்க்கம்** எனப்படும் சத்தியநெறியை — சன்மார்க்கத்தை — சித்தாந்த சைவநெறியை — மேற்கொண்டு எடுத்துள்ள இப்

பிறப்பிலேயே பிறவிப்பெருங்கடல் நீந்தி இறைவனடி சேரவேண்டுமென்ற அவாவினுலே கூறியுள்ளாராவர். ஞானமே முத்திக்குஏது. அந்த ஞானம் குருவருளால் வருவது. அந்தக்குரு, சரியை கிரியை யோகநெறி நின்று மலபரிபாகமுற்ற பக்குவநிலையில் தோன்றுகிருன். அந்நிலையில் வருபவன் சிவமே ஆவான். அவனுபதேசமே **சிவஞானம்** எனப்படும். இதனில் முதலாகத் தத்துவ உணர்ச்சி பெறுதல் முக்கியமாகும். இஃதில்லாவிடில் சித்தவிகாரக்கலக்கம் நீங்காது. சித்தத்தெளிவால் இறைபணி நிற்றல் ஏற்படும். இதனுல் பற்றறும். பற்றின்பற்றும் ஒழியும். இவரைச் சிவம் காத்தல் தலைப்படும். இந்நிலையில் இவர்கள் ஞான பூசையே விரும்பிப் புரிவர். இதனுல் வாசனையறும். சகமார்க்கத்திலும் அகமார்க்கத்தையே இவர்கள் மேற்கொள்வர். இதனுல் அருளெல்லையுட் புகுவர். இதனுல் அன்புமீதூரும்.

இவ் வன்புநெறியே பக்திநெறி எனப்படும் இது எல்லோர்க்கும் எளிதன்று. ஆதலால் ஞானநெறியே பொதுவெனக் காண்பர்; கடைபிடிப்பர். இதனுல் ஞானபக்குவம் நேரும். இந்தப் பக்குவம்வந்ததும் தம்மையே (ஆன்மாவையே) தாம்காண்பர். அது கைவல்லியம் எனப்படும். இங்கு மயங்குதல் அடையக் கூடாது. இதன்பிறகு ஆன்மாவுக்குள் ஆன்மாவாக இருப்பவரைத் தேடநேர்வர். சிவனருளால் இது விளங்கும். அப்போது ஆன்மபோதம் நீங்கும். இந்த ஆன்மபோத நீக்கத்தை யாண்டும் நிலைபேறுடையதாகச் செய்யவேண்டும். எல்லாம் சிவன்செயல் என்றிருப்பதே இதற்குரிய உபாயமாகும். இதனுல் இத்தகையவர்கள் சிவத்திலே தாமடங்குவர். அப்

போது சிவமே இவர்களைக் காக்கும் கடப்பாடு பெறுவதால் எல்லாம் சிவமயமாகக் காண்பர். சிவம்வேறு; தாம்வேறு என்ற பேதமுதலிய நிலைகளெல்லாம் நீங்கும். சிவசொரூபத்திலே அடங்கி அப்படி அடங்கினேமென்ற நினைவுமற்று ஒன்றாய் நிற்பர். இவ்வாறு அடக்கிநிற்றலே சிவத்தின் வியாபகசொரூபம். இவ்வாறு அடங்கியொன்றாகி வியாப்பியமாதலே ஆன்மசொரூபம் இரு வேறுபொருள்கள் ஒன்றாதல் என்ற உண்மை இந்த ஞானநெறியால் தெளிவாய்க் கூறப்படுவதாகும். எல்லாம் சிவம் என்பதே ஞானயோக முடிவாம். இவையெல்லாம் ஞானாசாரியன் அருள் கொண்டு அடைதல். அவரைச் சிவமாகவேகொண்டு வழிபடுதல் முதலான சன்மார்க்கத்தின் விளைவுகளாம். உலகம் சன்மார்க்க நெறிபற்றி ஒழுகுமேல் எவ்வகைத் துன்பமும் நீங்கும். இன்பமே ஓங்கும் ஞானநெறி—செந்நெறி — வாழ்கயாண்டும்!

இனி, இந்நூலாசிரியர் ஞானாசாரியன் சிவமே எனவும், அன்னவரைப்போற்றி வாழ்தலே உய்திப்பேறு எனவும் எடுத்துரைத்து இந்நூலை முடித்தருளுகின்றாராவர். இச்செய்தி 89 ஆம் செய்யுள் முதல் 100ஆம் செய்யுள்வரை செப்பப்படுவது. இனிவரும் பாடல்களால் கூறப்படும் ஆசாரியநிட்டைபற்றி அறிவோமாக!

சிவஞானப்பகுதி முற்றிற்று.

---

III குருமரபியல்

## ஆசாரிய நிட்டைப் பகுதி

## (பொது) 89—93

### செய்யுள் — 89

### ஆசானே தெய்வம்

இன்றுதான் நீயென்னைக் கண்டிருந்தும் கண்டாயோ
அன்றுதான் நானுன்னைக் கண்டேனே—என்றால்
அருமாயை ஈன்றவள்தன் பங்கனையார் காண்பார்
பெருமாயைச் சூழல் பிழைத்து.

கருத்துக்கள்

1. திருஷ்டிக்குக் கோசரமாகாதவர்.
2. தெய்வமே ஆசாரிய மூர்த்தி.

விளக்கம்

ஒருவருக்கொருவர் எதிராகவே இருந்து பேசும் போது ஒருவரை ஒருவர் கண்ணால் நேரே பார்த்து அறிகிறார்கள். அவர்கள் நேரில் பார்ப்பது ஒருவர் ஒருவருடைய உடம்பைத்தான். உடம்பு சுட்டியறியப் படுவது. ஆதலால் பார்க்கமுடிகிறது. இந்தக் கண்களால் பார்க்கப்படும் பொருள்களுக்கு மாற்றமும் அழிவும் உண்டு. அதாவது சூக்கும நிலையிலிருந்து தூல நிலையாகும் தூல நிலையிலிருந்து சூக்கும நிலை ஆகும். இதுதான் மாயை நிலை எனப் படும். இந்த உடம்பு மாயைநிலை யாதலால் காண

முடிகிறது. மாயைக்கு அப்பாற்பட்ட நிலை ஞான நிலை ஆகும். இதனை ஊனக் கண்கொண்டு காணல் இயலாது. ஞானத்தோடு கூடியதே ஞேய நிலை என்பது. இதுவே சிவம். ஆதலால் இதனை மாயைக் கண்கொண்டு காண இயலாது. மாயைக் கண்ணின் பார்வைக்கு எல்லை வகுக்கப்பட்டுவிட்டது. அவ் வெல்லையை அதனால் கடத்தலாகாது. குனிந்து பார்ப்பவனுக்கு ஆகாயம் தெரியாது. இவ்வாறே மாயையுட்பட்டார்க்கு மாயாதீதம் புலனாகாது. இதனாலே ஒருவரொருவர் உயிரைக் காண இயலவில்லை. ஆசாரியனும் சீடன் உடம்பையே காண்கின்றான். சீடனும் ஆசாரியன் உடம்பையே காண்கின்றான். ஒருவர் ஒருவருடைய சொரூபத்தை மாமிச திருஷ்டியால் காண இயல்வதில்லை. ஞானத்தை உடம்பன்று உபதேசிப்பது. அந்த ஞானம் ஆன்மாவிடமிருந்து வருகிறது. ஆகவே ஞானத்தையும், அதன் ஆதாரமாயுள்ள ஆன்மாவையும் நாம் அறிகிறோமேயன்றிக் காண்கின்றோமில்லை. இவ்வாறே யாவருக்கும் தெரியாத மாயையை உடையவள் சத்தி. அந்தச் சத்தியைப் பாதியிலே உடையவன் பரமேசுவரன். ஆதலால் மாயைக்குத் தப்பினால் மற்றிரண்டையும் கண்டனுபவிக்கலாம். விடப்படாத மாயையாலே மறைக்கத்தக்க மறைப்பெல்லாம் தப்பி மாமிச திருஷ்டியால் பெண்ணுரு ஒருதிறன் ஆகின்ற ஒருவனைக் காண்டல் எளிதன்று. இதனால் நாம் தெரிய வரும் பொருள் யாதெனில், ஈசன் தனதருளோடு கூடி மானிடத் திருமேனி தாங்கி ஆசாரிய கோலத்தோடு வரும்போதுதான் அவனை நாம் காணலாம். இதுவே சகலர்க்குரிய நிலைமை. ஆதலால் ஆசாரிய மூர்த்தியை

விட்டு வேறொரு தெய்வம் இல்லையென்பதே முடிபாம். பாட்டு வரிகள் வெளிப்படை.

## செய்யுள் — 90

### ஞானகுருவின் பெருமை

கடலலைத்தே ஆடுதற்குக் கைவந்து நின்றும்
கடலளக்க வாராதால் போலப்—படியில்
அருத்திசெய்த அன்பரைவந் தாண்டதுவு மெல்லாம்
கருத்துக்குச் சேயனாய்க் காண்.

**கருத்துக்கள்**

1. பக்திமான்களும் பரமனை அறியார்.
2. கடவுள் கருத்துக்கு எட்டாதவன்.
3. அவரது செயலையும் அறிதல் அரிது.

**விளக்கம்**

கடல் பெரிது. அதன் கரையில் நிற்பவன் அதன் ஒரு பகுதியைப் பார்க்கிறான். அதில் இறங்கி நீந்துகிறான். என்றாலும் அவனால் கடல் முழுதும் அறிய இயலாது. கடலின் ஆழத்தையும் அறிந்து அளத்தல் கூடாது. இதனை இச் செய்யுளின் முதலிரண் டடிகள் கூறுகின்றன. இவ்வாறே பரம வியாபகமான பரமேசுவரனை ஆசாரிய ரூபமாக நாம் பார்க்க நேர்ந்-தாலும் அவனது ஏகதேசத்தையே நாம் (சிற்றுணர் வுடைமை பற்றி) அறிகிறோம். இதனால், இப்புவியி லுள்ளார் சரியை கிரியை யோகங்களைத் திர அநுட்டித்த பக்திமான்களாயிருப்பனும் சிவனுடைய

ரூப சொரூப சுபாவங்களை அறிய விசாரிப்பின் கருத்துக்கு எட்டாதாகையால் அறிய முடிவதில்லை. ஆனால் அப் பரமனே ஆசாரியனாகி எழுந்தருளி ஞான தீக்ஷாக் கிரமங்களாலே மலமுற்றும் போக்கி அடிமை கொண்டால் அவனை அநுபவிக்கமுடிகின்றது. அப்போதும் தனித்து நின்று அறியவாராது. அநுமான் சமுத்திரத்தைத் தாண்டினான். என்றாலும் சமுத்திரத்தின் ஏகதேசப் பரப்பினையே அவன் அறிவான். ஆனால் ஆழம் அறியமாட்டான். மந்தர மலை அழுந்தியதால் ஆழத்தை அறியும். ஆனால் பரப்பை அறியாது. இதுபோலும் நிகழ்வதே சிவத்தை முற்றிலும் அறிய எண்ணும் முயற்சி. இதுபற்றி நாம் நமக்கருளும் ஞானகுருவின் பெருமை அறிவர வாரா நிலைமையது எனத் தெரிதல் வேண்டும். கருத்துக்கு அப்பாற்பட்டது கருத்துக்கெட்டாது. சூரியனை விளக்குத் தேடியறியச் செல்லுமாயின் அதுவே ஒளி மங்கி அப் பேரொளியில் ஒடுங்கி ஒன்றாய்விடும். தனித்து நின்றறியாது. இக் கருத்துக்களை இச் செய்யுளின் பின் இரண்டடிகள் கூறுகின்றன.

## செய்யுள் — 91

### அருள் திருமேனியுடையன் குரு

**சிவனெனவே தேறினன்யான் என்றமையால் இன்றும்**
**சிவன்அவனி வந்தபடி செப்பில்—அவனிதனில்**
**உப்பெனவே கூர்மை உருச்செய்யக் கண்டமையால்**
**அப்படியே கண்டாய் அவன்.**

**கருத்துக்கள்**

1. சிவனை ஆசாரிய மூர்த்தியில் தேறுதல்.
2. சிவனைத் தனித்தறிய இயலாமை.

**விளக்கம்**

சிவன் நூலுணர்வால் அறியமுடியாதவன். தேவரும் அறிய இயலாதவன். கருணையிற் பெருமை உடையவன். ஆதலால், அவன் நம்பொருட்டுத் திருமேனிகொண்டு எழுந்தருளுகின்றான். அப்போது அவனது அருளே அவற்குத் திருமேனியாகிறது. சிவத்துள் அடங்கியிருக்கும் அருளே வெளிவந்து ஆசாரிய வடிவாகிறது. இங்ஙனம் சிவம் புவனியில் சேவடி தீண்டும்போது அவ்வருட்டிருமேனியால் காணலாகிறது. அந்நிலையில் நமது அன்பு எல்லையற மிகுகிறது. ஞானக்கண் திறக்கப்பெறுகிறோம் இதனால் ஆசாரியனைச் சிவனாகக் காணமுடிகிறது. இத்தகைய நிலையை எய்தியபின்னரே வாதவூரடிகளும் "சிவனென யானும் தேறினன் காண்க" எனலானார். "அண்ணல் யானும் கண்டேன் காண்க" என இவரால் ஞானாசாரியரே குறிப்பிடப் படுகின்றாராவர். மற்றப்படிச் சிவனை முற்றும் அறிய இயலாதென்பதைக் குறித்தற்கே மேற்கூறப்பட்ட அடிகளை அகத்தே கொண்டுள்ள *திருவண்டப்பகுதியில்* இறுதியில் "அறியாப் பெற்றியோனே" எனக்கூறலானார் என்க! இது எதுபோல என்றால், இந்த உலகத்தில் பரப்பும் பண்டமும் ஆழமும் அறியமுடியாததான உவரிநீர், கூர்மையான சுவையுள்ள உப்பாகும்போது அதன் வடிவத்தைக் காட்டுகின்றது. என்றாலும் அவ்வுப்

புத்தான் கடல்முழுவதும் எனக்கூறல் பொருத்த மாகாது. இவ்வாறுள்ளதே அருளால் சிவன் திருமேனி கொள்ளுமுறைமை. இச்செய்யுளின் பின் இருவரிகள் இவ்வுவமை உரைப்பனவாம்.

## செய்யுள் — 92

### ஞானுசாரியன் ஆன்மாக்களில் ஒருவனுகாமை

**அவனிவனுய் நின்ற தவனருளா லல்ல(து)**
**எவனவனுய் நிற்கின்ற தேழாய் — அவனிதனில்**
**தோன்றுமரப் புல்லூரி தொல்லுலகில் அம்மரமாய்**
**ஈன்றிடுமோ சொல்லாய் இது.**

**கருத்து**

ஞானுசாரியன் நம்மில் ஒருவரல்லர்.

**விளக்கம்**

பூமியில் மரம் வளர்க்கப்படுகின்றது; வளர்கின்றது. அம்மரத்தின் கிளைகளில் புல்லுருவியும் வளர்கிறது. பூமியின் சத்தினை நேரே கிரகிப்பது மரம். புல்லூரி அங்ஙனம் செய்ய இயலாது. இங்ஙனமிருக்கையில், பயன்படுங்காலம் அணுகியதும் கைம்மாறு கருதாமல் தன்னோடி (தன்அடியில்) உள்ளவர்கட்குப் பழத்தை உதவுகிறது. மகிழச்செய்கிறது. ஆனுல் புல்லூரி அங்ஙனம் செய்ய இயலாது. ஏனெனில் புல்லூரி பூமிதாரகமாகவுள்ளதன்று. மரந்தாரகமாக யுள்ளது இவ்வாறே ஞானுசாரியனும் மானிடத் திருமேனி உடையாராகக் காணப்படினும் சிவமே

அவராம் தொடர்புடைமையால் ஞானதீக்ஷைகளைச் செய்து பேரின்பம் தரவல்லவனாக உள்ளார். மற்றையோர் மானிட உருத்தாங்கி நிற்பினும் சிவத் தொடர்பின்மையால் அங்ஙனம் புரிய வல்லாரல்லர். இதனால் அருட்டிருமேனியுடைய ஆசாரியனை சடத் துடம்புடைய ஏனைய மானிடருள் ஒருவராக மதித்தல் மதியின்மையாம். இதனாலேயே ஏழாய் என்றுள்ளார் ஆசிரியர். (ஏழை=அறிவிலி). சிவம். த ன த ரு ள் மிகுதியால் மானிடராகிறது. மானிடன் எதுகொண்டு சிவமாக முடியும்! இஃதியலாச் செயல் என்க! இது கூறியவாற்றால் ஞானாசாரியனால் நாம் ஞானானுபவம் பெறுதலே முறை என்பது பெறப்பட்டது. பாட்டு வரிகள் வெளிப்படை.

## செய்யுள் — 93

### திருவருளின் இன்றியமையாமை

**முத்தி முதற்கொடிக்கே மோகக் கொடிபடர்ந்(து)**
**அத்தி பழுத்த தருளென்னும்—கத்தியினால்**
**மோகக் கொடியறுக்க முத்திப் பழம்பழுக்கும்**
**ஏகக் கொடிஎழுங்காண் இன்று.**

**கருத்துக்கள்**

1. ஆன்மா முத்தி எப்பொழுதும் உரிமை உடையது.
2. ஆணவமலமே தடை.
3. திருவருளே தடை போக்குவது.

**விளக்கம்**

திருவுந்தியார்—தெளிவுக்கட்டுரை நூலின் 41-ஆம் செய்யுள் விளக்கம் ஈண்டைக்குரியதாகும். நல்ல

பழம் தரக்கூடியதொரு திராட்சைக் கொடியோடு நச்சுத் தரக்கூடியதொரு நாசக் கொடி பின்னிக் கொண்டு வெகுவாய்ப் படர்கிறது. திராட்சைக் கொடியை எப்புறமும் செல்லவொட்டாமல் சுற்றி மடக்கித் தானே நாற்புறமும் பரவுகிறது, பூக்கிறது; பழுக்கிறது. இதனால் என்னபயன்; இந்த நச்சுக் கொடி இவ்வாறு படர்ந்ததால் அடியோடு தடுத்து விட்டால் பிறகு திராட்சைக்கொடி கிளர்ந்து படர்ந்து பழமளிக்கும். இதனையுணர்ந்த குடியானவன் ஒரு கூரிய வாள்கொண்டு அந்த நச்சுக்கொடியின் அடி வேரை அறுத்துவிடுவான். அதன்பிறகுதான் திராட்சை யால் பயன் பெறமுடியும். இவ்வாறே ஆன்மா வாகிய முத்திப் பழத்துக்குரிய கொடியோடு ஆணவம் என்கிற மூலமலக் கொடி பின்னிப் படர்ந்து இதாகிதங்கள் விளைத்து மயக்கத்தைச் செய்கிற மாயையாலே பூதகாரியமான உடம்பை அடிக்கடி எடுக்கச்செய்கிறது. ஆன்மா பக்குவப்பட்ட எல்லை யிலே தம்பிரானர் திருமேனிதாங்கி எழுந்தருளிவந்து **அருள்** எனப்படும் பலதாரையுடைய வாளாலே ஆணவமலமூலக் கொடியின்வேரை அறுக்கிறார். அப் போது எல்லா மலங்களின் முதல்களும் சோர்ந்து போம். பிறகு முத்திபலிக்கும். இந்தப்பலத்தாலே (ரசத்தாலே) சிவமென்றும் ஆன்மாவென்றும் இரண்டல்லாத ஒரு நீர்மையாம் சுபாவம்தோன்றும். இதனால் ஞேயமாம் சிவம் ஞானமாம் (அருளாம்) வாளால் ஆன்மாவின் (ஞாதுருவின்) ஆணவமாம் மலக் கொடியை அறுத்து முத்தியாம் ஒருமை விளைக்கின் ருன் என்பதை அறியலாம். இங்ஙனம் புரிந்தருளும் நிலையிலேயே ஞானசாரியர் எனப்படுகிறது சிவம் என்க!

---

# ஆசாரிய நிட்டைப் பகுதி

# (சிறப்பு) 94—100

## செய்யுள் — 94

## தீக்கை முறை

அகளத்தில் ஆனந்தத் தானந்தி யாயே
சகளத்தில் தையலுடன் தோன்றி—நிகளத்தைப்
போக்குவதும் செய்தான்தன் பொன்னடிஎன் புன்தலைமேல்
ஆக்குவதும் செய்தான் அவன்.

**கருத்து**

ஆசிரியர், தன்னை ஆசாரியன் ஈடேற்றியமை கூறல்.

**விளக்கம்**

கட்டற்ற பரம்பொருள், தன்னை ஈடேற்றும் பொருட்டே ஆசாரியத் திருமேனியிலே தனது காருண்ய சத்தியுடனே வெளிப்படத் தோன்றி குற்ற மற்ற இந்த நிலத்திலே உண்டான ஆனந்தத்தில் ஆனந்தியாக ஆகி எழுந்தருளி இருந்து, அநாதி காலமாகத்தன்னைக் கட்டியிருந்த விலங்காகிய மலமாயை கன்மங்களை அநேகவித சம்ஸ்காரங்களாலே போக்குவதுஞ் செய்து, தமது பொலிவுடைய அருமை யமைந்த திருவடியைத் தலையிலே சூட்டியருளினன் என இவ்வாசிரியர், தமது ஞானசாரியராகிய திருவியலூராரை நினைந்து நன்றி கூர்கிறார். இதுவே நம்மனோர்க்கும் வழி ஆம் என்க!

## செய்யுள் — 95

### ஆசானுதவிகள்

குற்றமறுத் தென்னையாட் கொண்டருளித் தொண்டனேன்
உற்ற தியானத் துடனுறைவர்—முற்றவரின்
மாட்சியுமாய் நிற்பரியான் மற்றென்றைக் கண்டிடினக்
காட்சியுமாய் நிற்பார் கலந்து.

**கருத்து**

ஆசானருளிய உதவிகளைக் கூறுதல்.

**விளக்கம்**

திருவியலூரார் எனப்படும் ஞானசாரியர் தம்முடைய அருளாலே தனது மல மாயை கன்மங்களைப் போக்கியதையும், தனது சுதந்தரத்தை நீக்கி ஆட்கொண்டதையும், தனக்கு அநாதியே பிராணனாய் நிற்கின்ற தமது திருவடி ஞானத்தைப் பிரகாசமடையச் செய்ததையும், யான் என்றும் அது என்றும் சொல்லும் வேறுபாட்டை அறுத்ததையும், தம்முடைய வசமாக்கிக் கொண்டபோது தான் தியானிப்பவனாய் நிற்பதற்காக வந்து அத்தியானமும் தாமேயாய் நின்றதையும் இத் தியான முதிர முதிர ஞேயத்தழுந்தலும் தாமேயாய் நின்றதையும், ஒரு சமயம் தன் ஏன்ற வினை காரணமாக நிலை மாறுபட்டு விசுவம் தோன்ற நேரின் அதனை அங்ஙனம் தோன்றவொட்டாமற் செய்தற்குக் காண்பானும் காணப்படு பொருளும் தாமேயாய் இருந்துதவியதையும் இங்கு நம் ஆசிரியர் நினைந்தருளுகின்றாரவர். இங்ஙனமே நாமும் நமதாசாரியர்பால் ஒழுகவேண்டுமென்பது கடைப்பிடிப்போமாக !

## செய்யுள் — 96

### உண்மையில் நிறுத்தியமை

ஆளுடையான் எந்தரமும் ஆளுடையா னேஅறியும்
தாளுடையான் தொண்டர் தலைக்காவல்—நாளும்
திருவியலூ ராளும் சிவயோகி இன்றென்
வருவிசையை மாற்றினான் வந்து.

**கருத்து**

ஆசாரியர் திருநாமமும் அவரது மகிமையும் அருளுதல்

**விளக்கம்**

இங்கு எழுந்தருளிவந்து அருமையாக ஆட்கொண்டருளியமையாலே ஆளுடையதேவர் என்ற திருநாமம் உடையவர் ஆவர். தளர்ந்த அடியார் பிறரையும் அடிமை கொள்ளுபவரும் அவரே. எல்லா ஆன்மாக்களின் பொருட்டும் ஐந்தொழில் புரிந்து பக்குவப்பட்ட ஆன்மாக்களை அறிந்து ரக்ஷிக்கின்ற திருவடியும் உடையார். உரிய அடியவர்களை மாயை மேலிட்டு வினை செய்யாதபடி பாதுகாப்புச் செய்யும் தலைக்காவலாக உள்ளார். எந்நாளும் திருவியலூரே திருப்படை வீடாகஉடைய சிவயோகியாவார். அஞ்ஞான கன்மமலம் காரணமாக மாயையாகிய ஊஞ்சலிலே உழலாநிற்கின்ற ஜனன மரணவேகத்தை ஒழித்து அசைவற நிற்கும் நிலையமெனப்படும் திருவடியிலே வைத்தருளினார் அடியேனை. இவ்வாறு ஆசாரியருடைய பெருமையை இங்கு நம் ஆசிரியர் புலப்படுத்தினாரானவர். இதனால் இவரைப் பணிந்து திருவடி சூடிப் பயமற்று வாழ்கஎன நமக்கும் வழிகாட்டியமை காணலாகும்.

---

## செய்யுள் — 97

### கைம்மாறின்மை

**தூலத் தடுத்த பளிங்கின் துளக்கமெனத்**
**தூலத்தே நின்று துளங்காமல்—காலத்தால்**
**தாளைத்தந் தென்பிறவித் தாளை யறவிழித்தார்க்(கு)**
**ஆளன்றி என்மா றதற்கு.**

### கருத்து விளக்கம்

பளிங்கு வெண்மை இயல்புடையதேனும் அதன் பிரகாசத்தைத் தடுத்த வன்னங்களை ஏற்றுத் தன் இயல்புதோன்ருமல் அந்த அந்த வன்னமயமாய் நிற்கும். இவ்வாறு தான் ஆன்மாவும் சார்ந்துள்ள பாசமாய்த் தன் இயல்பு தோன்ருமல் நிற்கிறது. இதனுல் ஜனன மரணங்களில் மொத்துண்கிறது. ஆனுல், மலபாகம் கன்மஒப்பு சத்திநிபாதம் உண்டான உடனே காலக் கழிவின்றி ஆசாரியன் எழுந்தருளி வருகிருன். திருவடியைச் சென்னியிலும் இருதயத்திலும் நிற்கச் செய்தருளுகிருன். இதனுல் ஆன்மாவுக்கு உள்ள ஏழுவகையான எண்பத்துநான்கு நூருயிரம் பிறப்புகளும் அடியற்றுப் போகின்றன. இங்ஙனம் ஆகும்படி ஆசாரியன் திருக்கண் நோக்கம் புரிகின்ருன். இதற்குமேல் ஆன்மாவுக்கு ஏதும் தேவையிலது. இங்ஙனம் முடிந்த உதவிகள் முற்றும் தாமே செய் தருளிய தடங்கருணைத் தம்பிராஞர்க்குத் தக்கதொரு கைம்மாறுபுரிதல் கடமைதான். ஆனுல் ஞானு சாரியன் ஏதும் குறைவிலன். அவன் தன்னையே தந்தருளுகிருன். ஆதலால் ஆன்மாவும் தன்னையே அவற்கு அடிமையாகத் தருதலன்றி வேறு எக்கைம்

மாறும் செய்தல் இயலாது. அப்படிச் செய்வதும் ஈடன்ரும் என்கிருர் நம்ஆசியர். "தந்தது உன்தன்னை; கொண்டது தன்தன்னை; சங்கரா யார் கொலோ சதுரர்" என்ற இடம் இங்குக் கருதத்தக்கது. "ஒருவன் ஒரு பொருளில்லார்க்குதவுதலும் இல்லை; உடைமை உதவுரு அமையத்துதவுதலும் இல்லை; உள்ளதிற் பெரிதளித்திடலும் இல்லை" என்ற கருத்தும் ஈண்டு ஒப்பு நோக்கும் தகையது. இங்ஙனம் இந்நூலாசிரியர் தமதாசிரியருக்குத் தம்மையே தருதலன்றி வேறேதும் கைம்மாறு புரிதற்கின்மையை இங்கு வெளியிட்டருளிய திறம் நாம் சிந்திக்கத் தக்கதாம்.

---

## செய்யுள் — 98

## பேற்றின் அதிசயம்

**இக்கணமே முத்தியினை எய்திடினு மியானினைந்த**
**அக்கணமே ஆனந்தம் தந்திடினும்—நற்கணத்தார்**
**நாயகற்கும் நாயகிக்கும் நானடிமை எப்பொழுதும்**
**ஆயிருத்தல் அன்றியிலே னியான்.**

### கருத்தும் விளக்கமும்

தாம் பெற்ற பேற்றினை ஆசிரியர் இச் செய்யுளில் கூறிய வண்ணம் தெரிவித்து வியக்கின்ருராவர். முத்தி இன்பம் முடிந்த பேறு, பெறுதற்கரியது. இது இப்போதே கிடைப்பதாலும், அல்லது அப் பரமானந்தம் கருதின கருத்து மாறுவதன் முன்பே கிடைப்பதானுலும் அதுபற்றிக் கவலைப்படவேண்டுவ-தில்லை. ஏனெனில் இப்பேறு ஆசாரியனுல் உறுதி

செய்யப்பட்டுவிட்ட பேறும். "யானை கோட்டிடைட் வைத்த கவளம்போல்வது" இப் பேறு. ஆதலால், இதனை அநுக்கிரகித்தற்பொருட்டு எழுந்தருளி வந்த சிவயோகிகளாகிய **தம்பிரானுர்க்கும்** அவருக்கு மன வாக்குக் காயங்களாய் நின்ற **ஞானசத்திக்கும்** என்றும் மீளா **ஆளாய்க் கிடக்க** வேண்டுவதே செய்யத் தகுவது. இதனால் ஆசாரியன் கொய்ம்மலர்ச் சேவடி இணையே குறுகி என்றும் அடிமையாயிருத்தலே சிறந்த நற்பேறும் என்கிறுர் ஆசிரியர்.

---

## செய்யுள் — 99

## ஏவற்பணிப் பேறு

**என்னை உடையவன்வந் தென்னுடனய் என்னளவில்**
**என்னையுந்தன் ஆளாகக் கொள்ளுதலால்—என்னை**
**அறியப்பெற் றேனறிந்த அன்பருக்கே ஆளாய்ச்**
**செறியப்பெற் றேன்குழுவிற் சென்று.**

### கருத்து விளக்கம்

தாம் பெற்ற பேறு நிலைத்தற்பொருட்டு "அன்பரொடு மரீஇ" இருத்தலே ஆசிரியர் இங்குத் தம்பரமாகக்கொண்டு கூறுகின்றுர். கருத்தாவாகிய பரமேசுவரன் அநாதியான மயக்கத்தை நீக்குதற் பொருட்டு மானிடத் திருமேனி தாங்கி எழுந்தருளி வந்து ஆன்மாவுக்குள்ளே பொருந்தியிருத்தலைத் தெளிய அறிவித்தருளுகிறுன். அக்கருணையால் அக்கண முதலே ஆன்மாவினைத் தம்வசமாக்கி அடிமை கொள்ளுகிறுன். இந்த உண்மை இப்போது புலப்படலானது. இதுவே ஆன்மாவுக்குரிய

உண்மை நிலை, இங்ஙனம் முன்பே ஈடுபட்டுள்ள சிவயோகியர்க்கு ஏவற்பணி செய்து அவர்தம் திரளிலே வாழ்ந்திருத்தலே வேண்டுவதாகும். அதன் மேற்பட்ட பேறு வேறு ஏதும் இலதாம். இங்ஙனம் கூறி இந்நூலாசிரியர் சிவயோகியர்க்கான தொண்டு புரிதலிலே தமக்குள்ள ஈடுபாட்டினையும், அவர்தம் குழாத்திலே மருவியுறைதலிலே தமக்குள்ள மட்டற்ற மகிழ்ச்சியையும் கூறியுள்ளார் ஆவர். இதனால் அறிவும் இச்சையும் செயலும் வியாபரிக்குமிடம் கூறப்பட்டது. சிவயோகியரல்லாதார் சேர்க்கை மீளவும் தற்போதம் உண்டாக்கிக் கெடுக்கும். ஆதலால் "நல்லாரிணக்கம்" தேவையாயிற்று. மற்றும், "பத்தரினத்தராய்ப் பரனுணர்வினாலுணரும் மெய்த்தவரை மேவாவினை" என்பதும் கருத்துட்கொள்ளற் பாலதாம்.

---

## செய்யுள் — 100

### ஆசான் திருவடி வாழ்த்தல்

**சிந்தையிலும் என்தன் சிரத்தினிலும் சேரும்வகை**
**வந்தவனை மண்ணிடைநாம் வாராமல்—தந்தவனை**
**மாதினுடன் எத்திறமும் வாழ்ந்திருக்க என்பதலால்**
**ஏதுசொலி வாழ்த்துவேன் இன்று.**

**கருத்து விளக்கம்**

சிவனைக்கூடப் பெற்றவர்கள் உரையும் உணர்வும் இறந்து நிற்பவராவர். சிவானந்தானுபவம் ஒன்றே உடையார். ஆதலால் உரையுணர்வுக்கு எட்டாத பரமனை வாழ்த்துவதேயன்றி வேறு செய்வகையிலதாம்.

தன்னுடைய திருவடியானது சிரத்தும் உரத்தும் தங்கவைத்துதவிய தம்பிரானை, பரமானந்தத்தைப் பிறவியறும் அமுதாக அளித்தவனை, வாழ்த்தும் எல்லைக்கு எல்லையில்லை. ஆதலால், பிரியாத ஞானசத்தி யோடு யாண்டும் வாழ்க! என வாழ்த்துவதேயன்றி வேறு ஏதும் சொல்லி வாழ்தல் இயலாது எனவே "**ஞானகுரவர் திருவடிகள் வாழ்வதாக**" என நாமும் வாழ்த்தலே செய்வோமாக! **உய்யவந்த தேவர் திருவடி வாழ்க !**

## தொகுப்புரை

ஞானாசாரியரன்றி வேறு தெய்வம் இல்லை. கண்கண்ட தெய்வம் இவரே. நமக்காக மானிடத் திருமேனி தாங்கி வந்தருளும் இவரே அருளும் சிவமும் ஆவார். இவரது திருமேனி அருள்வடிவே ஆம். பரமானந்தத்தை நமக்கு இவரே அளித்துதவுகின்றார். நமது மூல மலத்தினைத் தமதருளாலே அடியறப் போக்கிவிடுபவர் இவரே. இவரே ஞான தீக்ஷைகளைப் புரிந்தருளுகின்றாராவர். தியானத்தில் உடனுறைபவர் இவரே யாவர். ஆளுடைய தேவர் என்பதே இவர் திருநாமம். இவர் நித்தியர். இவர்க்கு நம்மால் ஏதும் கைம்மாறு செய்தல் இயலாது. தன்பரங்கெட்டு அடிமையாதலே செய்யத்தக்கது.

எப்போதும் இவர்க்கு மீளா அடிமையாக இருப்பதே பேறு. சிவயோகியர்க்குத் தொண்டு புரிவதே சிறப்பாம். இவர்தம் ஈட்டத்திருப்பதே இன்பு.

இவரை எக்காலும் முக்காலும் வாழ்த்துவதே நம் வாழ்வு.

### செய்யுள்

ஆதார மாகி அருளோடு நிற்கின்ற
சூதான இன்பச் சுகவடிவை—ஓதாமல்
உள்ளவர்கள் கூடி உணர்வொழிய நிற்பதனால்
தெள்ளவா ராதே சிவம்.

**திருக்களிற்றுப்படியார் விளக்க உரை முற்றிற்று**

ஸ்ரீ உய்யவந்த தேவர் திருவடி வாழ்க

திருச்சிற்றம்பலம்.



## ‘ திருக்களிற்றுப்படியார்க்கு ’
## நேர்-கருத்துள்ள ‘ திருவுந்தியார் ’

### பாட்டெண்கள்

| களிற்றுப்படியார் | உந்தியார் | களிற்றுப்படியார் | உந்தியார் |
|---|---|---|---|
| 4. 5 | 1 | 42, 43 | 23 |
| 6, 7 | 2 | 44, 45 | 24 |
| 8 | 3 | 46 முதல் 50 வரை | 25 |
| 9, 10 | 4 | 51, 52 | 26 |
| 11 | 5 | 53 முதல் 56 வரை | 27 |
| 12, 13 | 6 | 57 | 28 |
| 14 முதல் 21 வரை | 7 | 58 முதல் 62 வரை | 29 |
| 22 | 8 | 63, 64 | 30 |
| 23, 24 | 9 | 65 முதல் 68 வரை | 31 |
| 25 | 10 | 69 முதல் 75 வரை | 32 |
| 26 | 11 | 76 | 33 |
| 27, 28 | 12 | 77 | 34 |
| 29 | 13 | 78, 79 | 35 |
| 30 | 14 | 80, 81 | 36 |
| 31 | 15 | 82, 83 | 37 |
| 32 | 16 | 84 | 38 |
| 33 | 17 | 85 முதல் 91 வரை | 39 |
| 34 | 18 | 92 | 40 |
| 35 | 19 | 93, 94 | 41 |
| 36, 37 | 20 | 95, 96 | 42 |
| 38, 39, 40 | 21 | 97, 98, 99 | 43 |
| 41 | 22 | 100 | 44 |

# பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 34 | 13 | அனுக்கிரகிக்கபட்ட | அனுக்கிரகிக்கப்பட்ட |
| 42 | 25 | அறிவாதிவயற்றை | அறிவாதியவற்றை |
| 74 | 3 | உணர்திவரு | உணர்த்திவரு |
| 95 | 22 | வப்பாம்வனைகள் | வப் பாவனைகள் |
| 143 | 4 | தாதைய | தாதையை |
| 186 | 17 | உறையற்று | உரையற்று |
| 188 | 7 | கலந்தநும் | கலந்ததும் |
| 206 | 11 | கடவனுவாய் | கடவனவாய் |
| 245 | 22 | தாள் | தான் |
| 267 | 2 | இடமானர் | இடமான |
| 331 | 23 | யுள்ளது | வுள்ளது |